# கூறு.1. இளங்கோவடிகள் -சிலப்பதிகாரம் - புகார்க்காண்டம் -1

## 1.1 பதிகம்

### 1.1.1. இளங்கோவடிகளுக்குக் குன்றக் குறவர் கூறிய விந்தை

குறிப்புகள்

நூலின் பொருளைத் தொகுத்து உரைப்பது பதிகம். பதிகம் என்பதை இக்காலத்தில் உள்ள அணிந்துரை அல்லது முகவுரை போலக் கொள்ளலாம். நூல் தோன்றிய வரலாற்றையும் நூல் பகுப்பையும் இது உணர்த்துகிறது. சேரன் செங்குட்டுவனுக்கு இளவலாகிய இளங்கோவடிகள் திருக்குணவாயில் கோட்டத்தில் அரச போகத்தைத் துறந்து துறவறம் தாங்கியிருந்தார். மலைவளம் காணச் சென்ற அவரிடத்தில் குன்றக் குரவர் எல்லோரும் ஒருங்கு திரண்டு சென்று தன் குன்றத்தின்கண் நிகழ்ந்த நிகழ்ச்சியை எடுத்துக் கூறினர். பொன்போலும் பூக்களை உடைய வேங்கை மரத்தின் அழகு ஒளிரும் நிழலில் ஒரு முலை இழந்து வந்து நின்றாள் அழகிய பத்தினி ஒருத்தி. இந்திரனின் சுற்றத்தவராம் தேவர்கள் அவளிடத்தில் நெருங்கி வந்து அவளுடைய அன்புக் கணவனை அவளுக்குக் காட்டி பின்பு அவளையும் அழைத்துக்கொண்டு எம் கட்புலம் காண விண்ணகம் போயினர். இது ஓர் அதிசயமாக இருந்தது என்றனர் மலைவாழ் மக்கள்.

### 1.1.2. சாத்தனார் நிகழ்ந்ததைக் கூறுதல்

அப்போது தண்டமிழ் ஆசான் ஆகிய சாத்தனார் இளங்கோவடிகள் உடன் இருந்தார். அவர் யானது நிகழ்ந்தவற்றை அறிகுவன் என்று கூறி நடந்த கதையைச் சொல்லத் தொடங்கினார். சாத்தனார் கூறிய கதையைக் கேட்ட இளங்கோவடிகள்

*அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்று ஆவதூஉம்*
*உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்*
*ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்*
*சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்*
*சிலப்பதிகாரம் என்னும் பெயரால் நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்*

என்று சொல்ல அதுகேட்டு மகிழ்ந்த சாத்தனார் "*முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது அடிகள் நீரே அருளுக*" என வேண்டிக் கொண்டார். முப்பது காதையில் முத்தமிழ் காப்பியம் முகிழ்த்தது.

## 1.2. உரைபெறு கட்டுரை

### 1.2.1. பாண்டியனின் பத்தினி வழிபாடு

பாண்டிய நாடு, பத்தினியால் எரிக்கப்பட்ட அன்று தொடங்கி, மழையின்றி நிலம் வறண்டது. மக்கள் வறுமையுற்றனர்; வெப்பு நோயும்

கொப்புளமும் இடைவிடாது துன்புறுத்தின. பொற்கொல்லர் ஆயிரவர் ஒன்றுகூடி, தம்முள் ஒருவன் செய்த குற்றத்தால் நமது குலத்திற்கே பழி நேர்ந்தது என நாணித் தம்மைத் தாமே பலியிட்டுக் கொண்டனர். அதனால் பாண்டிய நாட்டுப் புகழ் மேலும் சிறந்தது; பத்தினியின் சீற்றம் தணிந்தது; கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழியன் அரசு கட்டிலேறினான்; பத்தினிக்குப் பூசை செய்தான், விழா எடுத்தான். அதனால், மழை மிகப் பெய்தது; விளைவு பெருகியது. முன்கூறிய பிணியும் வறுமையும் விலகின.

**1.2.2. கொங்கு இளங்கோசரின் பத்தினி வழிபாடு**

பாண்டிய நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றிக் கேள்வியுற்றனர், கொங்கு மண்டிலத்து இளங்கோக்களாகிய கோசர், தங்கள் நாட்டிலும் பத்தினிக்குப் பூசையும் விழாவும் செய்தனர். அதனால் பருவந்தோறும் மழை தவறாது பெய்தது.

**1.2.3. கயவாகு மன்னனின் பத்தினி வழிபாடு**

பாண்டியனும் கொங்கிளம்கோசரும் பத்தினியை வழிபட்டு நன்மை அடைந்த செய்தியைக் கடல் சூழ் இலங்கையின் அரசனான கயவாகுவும் கேள்வியுற்றான். அங்கு நாள் பூசை செய்து வழிபட பலிபீடம் நிறுவிப் பின் கோட்டம் அமைத்தான். துன்பம் தொலைத்து நமக்கு வரம் தருபவள் இவள் எனக் கருதி ஒவ்வோர் ஆண்டும் ஆடித் திங்களில் விழா நடத்தினான். அதனால் வானம் குன்றாது மழை பெய்ய, பல்வளம் பெருகின; இலங்கை பொய்யாத விளைவினையுடைய வளநாடாயிற்று. கோவலன் கொலையுண்டதும், மதுரை எரிந்ததும் ஆடி மாதத்தில் ஆதலின், கயவாகு ஆடியில் விழா எடுத்தான் .

### 1.2.4. சோழனின் பத்தினி வழிபாடு

பாண்டியன், கொங்கிளம்கோசர், கயவாகு ஆகியோர் பத்தினியை வழிபட்டு நலம் பெற்றனர் என்பதனைக் கேள்வியுற்றான் சோழன் பெருங்கிள்ளி. இவள் ஒரு பத்தினிக் கடவுள் ஆதலின் எந்நிலையிலும் நமக்கு வரம் தருவாள் எனக் கருதி , உறையூரில் கண்ணகிக்குக் கோயில் கட்டி, நாள்தோறும் பூசைக்கும் விழாவுக்கும் ஏற்பாடு செய்தான். அதனால் நாடு மேம்பாடுற்றது.

**புகார்க் காண்டம்**

## 1.3. மங்கல வாழ்த்துப் பாடல் (காதை – 1)

**1.3.1. காதைச்சுருக்கம்**

சோழனின் குடை போன்றது திங்கள். அவனது திகிரி போன்றது ஞாயிறு. அவனது தண்ணளி போன்றது மழை. அவனது தொல்குடி போன்ற பெருமையுடையது புகார் நகரம். காவிரிப்பூம்பட்டினமாகிய அப்பூம்புகார் இமயம் போல், பொதியில் போல் அழிவில்லாதது. அம்

மாநகரில் மாநாய்கன் மகளாகக் கண்ணகி பிறந்தாள்; வயது பன்னிரண்டு; தீதிலா அருந்ததி போன்ற கற்பினள். அப்புகாரில் மாசாத்துவான் மகளாகத் தோன்றினான் கோவலன். வயது பதினாறு. முருகவேள் போன்ற சிறப்புடையவன். இத்தகைய கண்ணகி - கோவலன் திருமணம் காண்பார் வியக்குமாறு நடைபெற்றது. “காதலர் பிரியாமல் வாழ்க!“ என வாழ்த்தினர் மகளிர்.

குறிப்புகள்

திருமண வாழ்த்து என்பது இதன் பொருள். புகார்க் காண்டம் ஆதலாலும் பலர் கூடி ஆடிப் பாடும் இசைப் பாடலாக இக்குழு பாடல் அமைந்திருப்பதாலும் இது சோழ மன்னன் வாழ்த்துடன் தொடங்கி அவ்வாழ்த்துடன் நிறைவு பெறுகிறது. மேலும் திங்கள் ஞாயிறு மழை புகார் என்று இவற்றைப் போற்றுவது போலவும் இது நிகழ்வதால் இதனை இயற்கை வாழ்த்தாகவும் கடவுள் வாழ்த்தாகவும் சான்றோர் பாராட்டுவர். முதலில் உள்ள திங்களைப் போற்றுதும் என்ற வாழ்த்து சோழனது வெண்கொற்றக் குடையைப் புகழ்வது போல் அமைதலால் அதனைக் குடை மங்கலம் என புறத் துறையுடன் ஒப்பிட்டுப் பார்க்கவும் வாய்ப்பிருக்கிறது. சிலப்பதிகாரம் நாடகக் காப்பியம் என்பதற்கு ஏற்ப கண்ணகி கோவலன் திருமணமும் திருமண வாழ்த்துமாகிய கதையின் இடைப்பகுதி ஒன்றிலிருந்து காப்பியம் தொடங்குகிறது என்பர். ஆடல் பாடலாக இந்நூல் தொடங்குவது இதனை ஒரு நாடகம் எனக் கருத இடம் தருகிறது. ஏனெனில் நாடகங்கள் குழுவினர் தம் குழுப்பாடலோடு தொடங்குவது மரபாகும்

**1.3.2.கடவுள் வாழ்த்தாக அமையும் அரச வாழ்த்து**

*திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்*
*கொங்கு அலர் தார்ச் சென்னி குளிர் வெண்குடைபோன்று இவ்*
*அங்கண் உலகு அளித்தலான்*

*ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்*
*காவிரி நாடன் திகிரி போல் பொன் கோட்டு*
*மேரு வலம் திரிதலான்*
*மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்*
*நாம நீர் வேலி உலகிற்கு அவன் அளிபோல்*
*மேல்நின்று தான் சுரத்த லான்.*
*பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்*
*வீங்கு நீர் வேலி உலகிற்கு அவன் குலத்தோடு*
*ஓங்கிப் பரந்து ஒழுகலான்.*

திங்களைப் போற்றுவோம்! திங்களைப் போற்றுவோம்! பூந்தாது சிந்தும் மாலையுடைய சோழனின் வெண் கொற்றக் குடை போல இந்த

அழகிய இடத்தையுடைய உலகில் கருணை பொழிதலால், திங்களைப் போற்றுவோம்! ஞாயிற்றைப் போற்றுவோம்! ஞாயிற்றைப் போற்றுவோம்! காவிரி நாடடையுடைய சோழனின் ஆணைச் சக்கரம் போல், பொன்னாலான உச்சியையுடைய மேரு மலையை, அதுவும் வலமாகச் சுற்றி வருவதால் ஞாயிற்றைப் போற்றுவோம்! சிறந்த மழையைப் போற்றுவோம்! சிறந்த மழையைப் போற்றுவோம் ! அச்சம் தரும் கடலால் சூழப்பட்ட உலகிற்கு, அச்சோழன் அருளுதல் போல், மேல் நின்று நீரைப் பெய்து வளம் தருதலால், சிறந்த மழையைப் போற்றுவோம்! அழகிய புகாரினைப் போற்றுவோம்! அழகிய புகாரினைப் போற்றுவோம்! மிக்க நீரையுடைய கடலை வேலியாக உடைய உலகில், பழங்காலம் முதல் சோழ மரபுடன் தானும் பரந்தோங்கு புகழுடன் திகழ்தலால் அழகிய புகாரினைப் போற்றுவோம்!

## 1.3.3. கண்ணகி

*மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்*
*ஈகை வான் கொடி அன்னாள் ஈராறு ஆண்டு அகவையாள்,*
*போதில்ஆர் திருவினாள் புகழ்உடை வடிவு என்றும்*
*தீது இலா வடமீனின் திறம் இவள் திறம் என்றும்*
*மாதரார் தொழுது ஏத்த வயங்கிய பெரும் குணத்துக்*
*காதலாள் பெயர் மன்னும் கண்ணகி என்பாள் மன்னோ,*

அந்தப் புகார் நகரிலே, வான் மழை போன்ற கொடைத்தன்மை பொருந்திய கையையுடையவன் மாநாய்கன் என்னும் வணிகன் அவனது குலம் விளங்கத் தோன்றிய கண்ணகி, பூங்கொம்பு போன்றவள்; அழகு மிக்க வான வல்லிக் கொடி அனையாள்; பன்னிரண்டு ஆண்டு வயதினள்; செந்தாமரை மலரில் உறையும் திருமகளின் புகழுடைய வடிவு இவள் வடிவை ஒக்கும் என்றும், அருந்ததியின் கற்பு இவள் கற்பை நிகர்க்கும் என்றும் அவ்வூர் மக்கள் வியந்து போற்றுமாறு பெருங் குணங்களை விரும்பும் பண்பினள்!

## 1.3.4. கோவலன்

*வரு நிதி பிறர்க்கு ஆர்த்தும் மாசாத்துவான் என்பான்*
*இரு நிதி கிழவன் மகன் ஈரெட்டு ஆண்டு அகவையான்*
*மண் தேய்த்த புகழினான் மதி முக மடவார் தம்*
*பண் தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்*
*கண்டு ஏத்தும் செவ்வேள் என்று இசை போக்கிக் காதலால்*
*கொண்டு ஏத்தும் கிழமையான் கோவலன் என்பான் மன்னோ.*

அந்தப் புகார் நகரிலே, நெடுநிலம் முழுவதையும் ஒரு தனி ஆளும் மா மன்னனான சோழன், தலைமைத் தன்மை பொருந்திய சில குடிகளை

உயர் குடிகளாகக் கருதிப் போற்றி வந்தான். அத்தகைய சிறந்த குடிப் பெருமையுடன் உயர்ந்து ஓங்கிய செல்வத்தையும் உடையவன் மாசாத்துவான்! அவன் அறநெறியில் பொருளை ஈட்டுபவன்; அதனை வறியோர்க்கு வழங்குபவன்; சங்க நிதி, பதுமநிதி என்னும் இரு நிதிக்கு உரியவன். அவன் மைந்தன் கோவலன், பதினாறு ஆண்டு வயதினன். அக்கோவலன், பூமி சிறிதாகுமாறு மிக வளர்ந்த புகழுடையவன்; இசையை வென்ற மொழியினராகிய, திங்கள் போலும் முகத்தையுடைய மகளிர் தமது ஆயத்தில், " உலகில் கண்களிக்கக் கண்டு துதிக்கத்தகும் முருகவேள் இவன் " என்று பாராட்டி, அவனது புகழைப் பரப்பி, தம் மனத்துள் காதல் கொண்டு போற்றுதற்குரியவன்

## 1.3.5. திருமணம்

*நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்*
*வானூர் மதியஞ் சகடணைய சாலி ஒரு*
*மீன் தகையாளைக் கோவலன்*
*மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்:*
*தீ வலம் செய்வது காண்பார் கண் நோன்பு என்னை*

அத்தகைய இருவரையும் அவர்தம் பெருமைமிகு பெற்றோர், ஒரு பெருநாளிலே, திருமணக் கோலத்தில் காண விரும்பி மங்கல மகளிரை யானை மீதேற்றி நகர் எங்கும் திருமணச் செய்தியைத் தெரிவித்தனர். திருமண நாளன்று முரசுகள் ஒலித்தன . மத்தளங்கள் ஆர்த்தன. சங்குகள் முறையே முழங்கின. அரசனது உலாப்போல வெண் குடைகள் எழுந்தன. மங்கல நாணும் ஊர்வலமாகச் சென்றது. மாலைகள் பொருந்திய உச்சியுடன் கூடிய மண்டபத்தில் , நீலப் பட்டினாலான விதானம் அமைந்த அழகிய முத்துப் பந்தரிடத்தே வானில் செல்வம் சந்திரன் உரோகிணியைச் சாரும் நல்ல நாளில், வானத்திலுள்ள ஒப்பற்ற நட்சத்திரமாகிய அருந்ததி போலும் கற்புடைய கண்ணகியைக் கோவலன், மிகவும் வயதான அந்தணன் வேதநெறிப்படி சடங்குகளை நிகழ்த்த மணந்து , தீயினை இருவரும் வலம் வந்த காட்சியைக் காண்பவர் கண்கள் முன்பு செய்த தவம்தான் யாதோ.

## 1.3.6. திருமண வாழ்த்து

*காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்*
*தீது அறுக என ஏத்திச் சில மலர் கொடு தூவி*

அப்பொழுது மலரணிந்த அழகிய பொன் கொடி போன்ற மகளிர் சிலர் இவள் தன் காதலனைக் கண்ணினும் மனத்தினும் பிரியாதிருப்பாளாக, அவனும் இவளைப் பிணைத்த கை நெகிழாமல் இருப்பானாக , இருவரும் தீது இன்றி நீடு வாழ்க " எனச் சின் மலர்களைத் தூவி வாழ்த்தினர்.

## 1.4. மனையறம்படுத்த காதை (காதை – 2)

### 1.4.1. காதைச்சுருக்கம்

*பரதர் மலிந்த பயம் கெழு மா நகர்*
*முழங்கு கடல் ஞாலம் முழுவதும் வரினும்*
*வழங்கத் தவாஅ வளத்தது ஆகி*
*அரு பொருள் தருஉம் விருந்தின் தேஎம்*

காதலர் இருவரும் எழுநிலை மாடத்து இடை நிலத்தில் ஞாயிறும் திங்களும் போல, மலர்ப் படுக்கையில் கூடிக் களித்தனர். காதல் வயப்பட்ட கோவலன் கண்ணகியை, " மாசறு பொன்னே ! வலம்புரி முத்தே ! " எனப் பலவாறு பாராட்டினான் , இக்காதல் மொழி , தமிழ் இலக்கியம் எங்கும் காணாச் சிறப்புடையது . அவர்தம் இல்லற வாழ்வின் சிறப்பினைக் காண விழைந்த பெற்றோர் அவர்களைத் தனி மனையில் இருக்கச் செய்தனர் . சில ஆண்டுகள் இனிதே கழிந்தன .

குறிப்புகள்

### 1.4.2. புகார் நகரத்தில் கோவலன் கண்ணகி கூடி இன்புறுதல்

புகார் நகரம் செல்வச் செழிப்பு மிக்க புகழ்பெற்ற நகரம். கடல்களுக்கு அப்பாலுள்ள உலகினர் அனைவரும் வந்து கூடினாலும் அனைவரும் விரும்புவனவற்றையெல்லாம் வழங்கச் சலியாத வாணிக வளத்தை உடையது இவ்வூர். அருமையான பொருள்கள் பல நாட்டு பண்டங்கள் பலவற்றையும் உடையதாக அது விளங்கிற்று. கடல் வழியாகவும் தரை வழியாகவும் பொருளை கொணர்ந்து குவித்த வண்ணம் இருந்தனர் என்றும் குன்றாத பண்புடையவராகத் திகழ்ந்த வணிகப் பெருமக்கள் அத்தகைய செல்வத்தால் அரிய முயற்சிகள் பலவற்றையும் முடித்து வைத்தார் போல் தோன்றினர். இங்கே குவளை மலர் போன்ற கண்ணை உடைய கண்ணகியும் அவளுடைய காதல் கொழுநனும் ஆகிய கோவலனும் மயனே நேரில் செய்து வைத்தது போன்ற மணிக் கட்டிலின் மேல் அமர்ந்திருந்தனர். அவர்கள் நடுநிலை மாடமாகிய எழுநிலை மாடத்தில் இடை நிலை ஆகிய நான்காம் மாடத்தில் அமர்ந்து இருந்தனர்.

### 1.4.3. வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்

செங்கழுநீர் சேதாம்பல் இதழ்க் குவளை அரும்பு அவிழ் வண்டுகள் ஒலிக்கும் தாமரை முதலான நீர்ப் பூக்களின் மனத்தினை உண்டு நீர்ப் பூக்களின் வேறான சிறப்புமிக்க தாழையின் விரிந்த இதழ்கள் செண்பகக் காவில் மாலை போல பூத்திருக்கும் மாதவி மலர் ஆகியவற்றினை ஆராய்ந்து உண்டு ஒளிவீசும் முகத்தையுடைய மகளிரின் சுருண்ட கூந்தலை பெறுவதற்கு இயங்கி வரும் வண்டுகள் மணிக்கோவை ஒழுங்கு வரிசையாக அமைந்த அழகிய சாளரத்தின் குறுகிய துறைகளில் நுழைந்து வண்டுகள் உடன் வந்த மணம் மிக்க தென்றலைக் கண்டு

காதலர் இருவரும் மகிழ்ந்தனர். அவர்கள் முதல்நிலை மாடத்தின் இடைநின்று நீங்கி மணம் மிக்க மலர் கண்காட்சி இருக்கும் நிலாமுற்றம் ஆகிய ஏழாவது மாடிக்குச் சென்றனர்.

குறிப்புகள்

### 1.4.4. கோவலன் கூறிய குறியாக் கட்டுரை

*முதிர் கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்*
*கதிர் ஒருங்கிருந்த காட்சி போல*
*தாரும் மாலையும் மயங்கிக் கையற்றுத்*
*தீராக் காதலின் திருமுகம் நோக்கிக்*
*கோவலன் கூறும் ஓர் குறியாக் கட்டுரை*
*மாசறு பொன்னே. வலம்புரி முத்தே*
*காசறு விரையே கரும்பே தேனே*
*அரும்பெறல் பாவாய் ஆர் உயிர் மருந்தே*
*பெருங் குடி வாணிகன் பெரு மட மகளே*
*மலையிடைப் பிறவா மணியே என்கோ*
*அலை இடைப் பிறவா அமிழ்தே என்கோ*
*யாழ் இடைப் பிறவா இசையே என்கோ*
*தாழ் இரு கூந்தல் தையால் நின்னை என்று*
*உலவாக் கட்டுரை பல பாராட்டித்*

நறுமலர் பூக்கள் பரப்பப்பட்ட மஞ்சத்திலே இருவரும் அமர அக்காட்சி ஆனது கடல் சூழ் உலகம் முழுவதையும் விளங்கச் செய்யும் சூரியனும் திங்களும் ஒரு சேர இருந்தாற் போல் அவர்கள் தோற்றமளித்தனர். அவர்கள் இருவரும் காதலால் அன்புடன் தழுவிக் கொள்ள தாரும் மாலையும் கலைந்து குலைந்தன. இச்சூழலில் கோவலன் நீங்காத காதலுடன் திருமகள் போன்ற கண்ணகியின் அழகினை நோக்கி இதுவரை எண்ணிப் பார்க்காத பொருள் செறிந்த சொற்களால் அவளது அழகைப் புகழ்ந்து கூறத் தொடங்கினான். பிறைச்சந்திரன் ஆனது இமையவர் போற்றச் சிவபெருமானின் முடிமீது அழகுடன் இருக்கக் கூடிய தகுதி உடையது ஆயினும் திருமகளான உன்னுடன் பாற்கடலில் பிறந்த காரணத்தினால் அதனை உனக்கு முதலாக கொடுத்திருக்கிறான். போர்க்களத்தில் போரில் ஈடுபடும் வீரருக்குப் படைக்கருவி அளிக்கும் மரபு ஒன்று உண்டு. உருவம் இல்லாதவன் ஆகிய காமன் தன் ஒரு பெரிய கரும்பு வில்லினை உனக்கு கரிய இரு புருவமாகக் கொடுத்திருக்கிறான். அழிதலற்ற தன்மை பெறுதற்குரிய மருந்தாகிய அமிழ்தத்திற்கு முன்னர்த் திருமகளாகிய நீ பிறந்தாய். எனவே தேவருக்கு வேந்தனாகிய இந்திரன் அசுரரை அழித்துத் தேவரை காப்பதற்காக எடுத்த வச்சிரப்படையை உனக்கு இடையாகக் கொடுத்திருக்கிறான். ஒப்பற்ற

குறிப்புகள்

முருகக் கடவுள் ஒரு காரணம் இன்றியும் நான் துன்புறும் இயல்பைத் தன் கண்களால் காண வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் தனது சுடர்மிகு வேல் ஒன்றை உன் முகத்தில் குளிர்ச்சி மிக்க இரண்டு கண்களாக ஆகுமாறு உனக்குக் கொடுத்திருக்கிறான். நறுமலர் சூடிய கோதையே உனக்கு ஒப்பனை செய்யும் மகளிர் குற்றமில்லாத உனது இயற்கை அழகு இருக்க வேறு சில அணிகளை உனக்குச் சூட்டுகின்றனர் அதனால் நீ பெற்ற அழகுதான் யாது?. பலவாகிய நினது கருங்கூந்தலில் மங்கலமாகச் சில மலர்களைச் சூட்டாமல் ஒளிமிக்க இவர் இந்த மாலையை ஏன் அவர்கள் சூட்டவேண்டும்? கூந்தலுக்கு மணம் உள்ள நல்ல அகிற்புகை ஊட்டி அதோடு கஸ்தூரிச் சாந்தையும் ஏன் அவர்கள் ஊட்டவேண்டும்? நினது அழகிய முலைத்தடத்தின் மீது எழுதியதோடு ஒற்றை வட முத்து மாலையையும் ஏன் அவர்கள் சூட்டவேண்டும்? திங்கள் போன்ற முகத்தில் முத்துப்போன்ற வியர்வை தோன்ற நுண்ணிய இடை வருந்த இவற்றை அளித்தனர் என்றால் அவர்கள் எல்லாம் பித்து பிடித்தவர்களோ? மாசற்ற பொன் போன்றவளே, வலம்புரிச் சங்கு ஈன்ற முத்துப் போன்றவளே, கரும்பு போன்றவளே, தேன் போன்றவளே, பெறற்கரிய பாவை போன்றவளே, ஆர் உயிரை நிலைக்கச் செய்யும் மருந்து போன்றவளே, பெருங்குடி வாணிகன் பெற்றெடுத்த சிறப்பு மிக்க இளம் மகளே, நீண்ட கருங்கூந்தலை உடைய தையலே, உன்னை மலையிடைப் பிறவா மணியே என்பேனா, கடலிடைப் பிறவாத அமிழ்தே என்பேனா, இல்லை யாழிசைப் பிறவாத இசையே என்பேனா என்று பலவற்றால் நலம் பாராட்டி அழகு விளங்கும் மாலையணிந்த கண்ணகியுடன் ஒளி விளங்கும் தாரினைப் புனைந்த கோவலன் மகிழ்ந்திருந்தான்.

### 1.4.5. தனிக்குடித்தனம்

இவ்வாறாகக் கண்ணகியும் கோவலனும் இன்புற்று மகிழ்ந்து வாழ்ந்து வரும்போது ஒரு நாள் கோவலனின் தாயாகிய மாசாத்துவான் மனைவி தன் மருமகளான கண்ணகியின் மறத்தல் அறியா சுற்றத்தைப் போற்றுதலும் அறவோரை ஓம்புதலும் விருந்தினரை உபசரித்தலுமாகிய நற்பண்புகளுடன் மிக்க செல்வத்தோடு கூடிய இல்வாழ்க்கையின் பெருஞ்சிறப்பினைக் காண விழைந்தாள். எனவே கோவலன் கண்ணகியை ஏவல் பணி புரியத் தக்க பணியாளரோடு தனிக்குடும்பம் வைத்தாள். அவர்களும் இல்லறம் மாண்புடன் நடத்தினர். இவ்வாறு காணத்தக்கச் சிறப்பினையுடைய கண்ணகி நல்லாளின் இல்லற வாழ்வில் சில ஆண்டுகள் கழிந்தன.

## 1.5. அரங்கேற்று காதை (காதை – 3)

### 1.5.1. காதைச்சுருக்கம்

மாதவி காவிரிப்பூம்பட்டினத்தில் கணிகையர் குலத்தில் பிறந்தவள். ஆடல், பாடல், ஒப்பனை என்னும் மூன்றிலும் சிறந்தவள் ; ஏழாண்டு காலம் ஆடற்பயிற்சி பெற்றவள். சோழப் பேரரசன் முன்னிலையில் அவளது அரங்கேற்றம் நிகழ்ந்தது. ஆடலைக் கண்டுகளித்த மன்னன் தலைக்கோல் பட்டத்தையும் , பசும்பொன் மாலையையும் அவளுக்குப் பரிசாக அளித்தான் . " இம்மாலை ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன் விலை மதிப்புடையது ; இவ்வளவு விலை கொடுத்து வாங்குவோன் மாதவிக்கு உரியவன் ஆவான் ! " என்று கூறி , அதனை நகர நம்பியர் திரியும் வீதியில் விற்பது போல் தோழி கூனியை நிற்குமாறு செய்தாள், மாதவியின் தாய் ! கோவலனும் மாலையை வாங்கி மாதவியை அடைந்தான் . அவளுடன், விடுதலறியா விருப்புடன் மயங்கிக் கிடந்தான்; குற்றமற்ற கண்ணகியை மறந்தான்.

### 1.5.2. கலைமகள் மாதவி அறிமுகம்

*சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய*
*பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை*
*தாதுஅவிழ் புரிகுழல் மாதவி தன்னை*
*ஆடலும் பாடலும் அழகும் என்றுஇக்*
*கூறிய மூன்றின் ஒன்றுகுறை படாமல்*
*ஏழாண்டு இயற்றிஓர் ஈராறு ஆண்டில்*
*சூழ்கடல் மன்னற்குக் காட்டல் வேண்டி,*

தெய்வத்தன்மை பொருந்திய பொதிய மலையில் உள்ள அகத்திய முனிவரின் அருளால் இந்திரன் மகன் சயந்தன் தேவ மகளிர் வரிசையில் சிறப்புக் குன்றாத உறுபசி ஆகிய மாதவியும் சாபம் நீங்கப் பெற்றனர். அப்படி நாடக அரங்கில் சாபம் நீங்கப்பெற்ற அந்த ஊர்வசியின் மரபிலே தோன்றிய மாதவி ஆடல்கலை பாடல்கலை ஒப்பனைக் கலை என கூறப்பட்ட மூன்றிலும் சிறந்த அறிவு பெற்றாள். ஐந்தாம் வயது தொடங்கி ஏழு ஆண்டுகள் அவள் பயிற்சி பெற்றாள். பன்னிரண்டாம் வயதிலேயே அரங்கம் ஏறித் தன் ஆற்றலை சோழ மன்னனுக்கு அவள் காட்ட விரும்பினாள்.

### 1.5.3. மாதவியின் அரங்கேற்றம்

அகக்கூத்து புறக்கூத்து என்னும் இருவகைக் கூத்தின் இலக்கணங்களையும் அறிந்தவன். அல்லியம் முதல் கொடுகொட்டி ஈறாக உள்ள 11 கூத்துக்களையும் அவற்றின் பல்வேறு கூறுகளையும் நன்கு உணர்ந்தவன். ஆடல் பாடல் தாளம் இவை தம்முள் ஒத்து இயங்குமாறு

அமைக்கும் ஆற்றல் மிக்கவன். பிண்டி பிணையல் எழில் கை தொழில் கை என்னும் நான்கின் திறம் தெரிந்தவன் ஆகிய ஆடல் ஆசிரியனோடு மாதவி அரங்கத்திற்கு வந்தாள். யாழ், குழல் இவற்றின் இசைக் கூறுகளும் வாய்ப்பாட்டும் தாழ்ந்த சிறப்பினையுடைய தன்மையும் பொருந்த இசைக்கும் இயல்புடையவன். செந்துறை வெண்டுறை என்னும் பாடல்களுக்கு ஏற்ப இசை அமைக்க வல்லவனாகிய இசை ஆசிரியன் அரங்கேறினான். ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகத்தில் தமிழ்நாட்டினர் அறியுமாறு முத்தமிழையும் கற்றுத் தேர்ந்தவன் பாடலாசிரியன். அவன் வேத்தியல் பொதுவியல் என்னும் இரு கூறுபாடுகள் உடைய நாட்டிய நூலை நன்கு அறிந்து, இசைப்பவன் அமைத்த இசையின் போக்கை உணர்ந்து சிறிதும் பிறழாமல் தாள நிலையிலே பொருந்துமாறு சொற்களைத் தம் கவிதை மேல் அமைக்கும் வல்லமை கொண்ட பாடலாசிரியனும் அரங்கேறினான். தண்ணுமை ஆசிரியனும் மாதவியோடு அரங்கேறினான். இசை நூல்களில் சொன்ன முறைப்படி இசைப்பதில் தேர்ந்த குழல் ஆசிரியனும் மாதவியோடு அரங்கேறினான். இசை நூல்களில் சொன்ன முறைப்படி யாழ் இசைப்பதில் தேர்ந்த யாழாசிரியனும் மாதவியோடு அரங்கேறினான்.

### 1.5.4. அரங்கத்தின் அமைப்பு

தேர்ந்த சிற்ப நூல் ஆசிரியர் வகுத்த நெறியில் சிறிதும் பிறழாது அரங்கம் அமைத்தற்குப் பழுதற்ற ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்தனர். பின்னர்ப் பொதியமலை முதலான புண்ணிய மலைச்சாரலில் ஒரு கணுவுக்கும் மற்றொரு கணுவுக்கும் இடையில் ஒரு சாண் இடைவெளியுடன் ஓங்கி வளர்ந்த மூங்கிளை வெட்டிக் குடைந்து உத்தமனின் கைப் பெருவிரல் இருபத்து நான்கு கொண்ட அளவு இருக்குமாறு துண்டு செய்தனர். அதனையே அரங்கம் அளக்கும் கோலாக கொண்டனர். ஏழுகோல் அகலம் எட்டுக்கோல் நீளம், ஒருகோல் உயரம் என நடன அரங்கத்தை அவர்கள் அமைத்தனர். தூண்களின் மீது இடப்பட்ட உத்தரப் பலகைக்கும் அரங்கில் இடப்பட்ட பலகைக்கும் இடையில் உள்ள உயரம் நான்கு கோல் அளவாகும். அரங்கில் உள்ளே செல்லவும் வெளியே வரவும் இரு வாயில்கள் அமைத்தனர். யாவரும் வணங்குமாறு நால்வகை வருண பூதத்தை எழுதி மேல்நிலத்தே வைத்தனர். தூண்களின் நிழல் அரங்கிலும் அவையிலும் விழாதவாறு பெருமைமிக்க நிலை விளக்குகளை ஏற்ற இடங்களில் வைத்தனர். பின் ஒருமுக எழினியையும் பொருமுகஎழினியையும் கரந்துவரல் எழினியையும் வேலைப்பாட்டுடன் அமைத்தனர். ஓவியத்துடன் கூடிய மேல் விதானமும் அமைத்தனர். புகழ்மிக்க முத்து மாலைகள் சரியும் தூக்கும் தாமமும்

என்னும் இவற்றை எங்கும் அழகுபடத் தொங்கவிட்டனர். இவ்வாறு புதுமையுடன் நடன அரங்கத்தை அவர்கள் அமைத்தனர்.

### 1.5.5. அரங்கில் தலைக்கோல் வைக்கப்படல்

புகழ்மிக்க மன்னர் போரில் தோற்றுப் புறங்கொடுத்தபோது, அவரிடமிருந்து பறிக்கப்பட்ட அழகிய வெண் கொற்றக் குடையின் காம்பைப் பழுதின்றி எடுத்து, அக்குடைக் காம்பின் கணுக்கள் தோறும் தூய்மையான நவமணிகளைக் கட்டி, கணுக்களின் இடைப்பகுதியில் சாம்புநதம் என்னும் பொன் தகட்டைச் சுற்றிப் பொருத்துவர். அதனை, உலகாளும் வெண் கொற்றக் குடையையுடைய மன்னவனின் அரண்மனையிலே வைத்து இந்திரன் மகன் சயந்தனாக நினைத்து அதற்கு மந்திர விதிப்படி பூசை செய்வர்! அதுவே தலைக்கோல் எனப்படுவது. அத்தகைய தலைக்கோலை நல்ல தூய நீரைப் பொன்குடங்களில் கொண்டு வந்து நீராட்டி, மாலை சூட்டி, நல்ல நாளிலே பொன்னாலான பூணும் பட்டமும் உடைய பட்டத்து யானையின் நீண்ட துதிக்கையில் வாழ்த்திக் கொடுத்துப் பின், மும்முரசு முழங்க, பல்லியம் ஒலிக்க, அரசனும் ஐம்பெரும் குழுவும் உடன்வர, தேருடன் வலம் செய்து, அத்தேர் மீது இருந்து பாடுவோனிடம் தலைக்கோலைத் தர, ஊர்வலம் முடிந்த பின், அத்தலைக்கோல் நடன அரங்கிலே வைக்கப்பட்டது .

### 1.5.6. மாதவிப் பொன் மயிலாள் தோகை விரித்தாள்

அரசன் முதலானோர் தம்தம் தகுதிக்குக் குறைவு படாமல் இருக்கையில் முறையே அமர்ந்தனர். குயிலுவக் கருவியாளர் தாம் நிற்க வேண்டிய முறைப்படி நின்றனர். மாதவி அரங்கிலே வலக்காலை முன்வைத்து ஏறி, வலப்புறத்தூணைச் சார்ந்து நின்றாள். இவ்வாறே, பண்டைய நெறியைப் போற்றும் தோரிய மகளிர் இடப்புறத் தூணைச் சார்ந்து நின்றனர் . பின் மாதவியும் தோரிய மகளிரும் நன்மைகள் பொலியவும் நன்மையில்லாத தீமைகள் அகலவும் ஓரொற்று வாரம் ஈரொற்று வாரம் என்னும் தெய்வப் பாடல்கள் இரண்டையும் முறைப்படி பாடினர். இத்தெய்வப் பாடல்களின் இறுதியில், குயிலுவக் கருவிகள் கூட்டாக இசைத்தன. 'குழலிசையை ஒட்டிச் சென்றது யாழிசை; யாழிசையை ஒட்டி மத்தளம் பொருத்தமாக அமைந்தது. மத்தளத்தின் வழியே முடிவுகள் ஒலித்தன; முழவுடன் இயைந்து இசைத்தது ஆமந்திரிகை. ஆமந்திரிகையுடன் முன் கூறிய குயிலுவக் கருவிகள் அனைத்தும் பருந்தும் நிழலும் போல ஒன்றுகூடி இசைத்தன , மாதவி ஒரு தாளத்துக்கு இரு பற்றாக , பதினொரு பற்றாலே தேசிக்கூத்தை நிகழ்த்தினாள். இவ்வாறு . பொன்னாலான ஒரு பூங்கொடி வந்து நடித்தாற்போல் மாதவி அரங்கிலே தோன்றி , நாடக நன்னூலில்

கூறப்பட்ட நெறி முறை பிறழாமல் அனைத்துக் கூறுபாடுகளும் அழகுறத் தோன்ற ஆடினாள். ஆடலைக் கண்டு மகிழ்ந்த சோழ வேந்தனிடமிருந்து மாதவி தன் தகுதிக்கேற்ற தன்மையில் சிறிதும் வழுவாமல் பச்சை மாலையையும் , தலைக்கோல் என்னும் பட்டத்தையும் பெற்றாள் . தலைசிறந்த அரங்கிலே ஏறி ஆடிய ஆடல் செல்வி, நாடக நரல்கள் கணிகையர்க்கு விதித்த முறைப்படி தலைவரிசையாக ஆயிரத்து எண் கழஞ்சு பொன்னைப் பரிசமாகப் பெற்றாள்.

குறிப்புகள்

**1.5.7. மாதவியைக் கைக்கொண்ட கோவலன்**

*நூறுபத்து அடுக்கி எட்டுக்கடை நிறுத்த*
*வீறுஉயர் பசும்பொன் பெறுவதுஇம் மாலை,*
*மாலை வாங்குநர் சாலும்நம் கொடிக்குஎன*
*மான்அமர் நோக்கிஓர் கூனிகைக் கொடுத்து*
*நகர நம்பியர் திரிதரு மறுகில்*
*பகர்வனர் போல்வதோர் பான்மையின் நிறுத்த,*
*மாமலர் நெடுங்கண் மாதவி மாலை*
*கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு*
*மணமனை புக்கு மாதவி தன்னொடு*
*அணைவுறு வைகலின் அயர்ந்தனன் மயங்கி*
*விடுதல் அறியா விருப்பினன் ஆயினன்.*
*வடுநீங்கு சிறப்பின்தன் மனையகம் மறந்துஎன்.*

1008 கழஞ்சு வீறு பெற்று இருந்த பசும்பொன் மதிப்புடையது இம்மாலை. இதனை இவ்வளவு விலை கொடுத்து வாங்குவோர் கொடிபோன்ற மாதவிக்கு மணமகனாக ஆவார் என்று மான் போன்ற நோக்கினை உடைய மாதவியின் தாய் சித்திராபதி ஒரு கூனியின் கையில் மாலையைக் கொடுத்து நகரத்து வாலிபர் உலாவரும் பெருந்துறையில் அம்மாலையை விலைக்கு விற்பனை போல நிறுத்தினாள். மாமலர் நெடுங்கண் மாதவியின் பரிச மாலையை கோவலன் வாங்கிக் கூனியுடன் மாதவியின் மனையை அடைந்தான். மாதவியின் அழகில் மயங்கிய கோவலன் அவளை அணைத்துத் தழுவி அன்றே மயங்கினான். விடமுடியாத விருப்பத்தை உடையவனானான். குற்றம் நீங்கிய தன் மனைவியையும் வீட்டையும் மறந்தான்.

## 1.6. அந்திமாலைச் சிறப்புச்செய் காதை (காதை – 4)

**1.6.1. காதைச்சுருக்கம்**

“ மாலைப்பொழுது வந்தது . தென்றல் வீசியது . செவ்வானத்தே இளம்பிறை போன்ற நிலவொளி எங்கும் பரவியது. கணவனைப் பிரியா மகளிர் கூடிக் களித்தனர். பிரிந்தோர் காமத்தீயில் வாடி வதங்கினர்!

கோவலனும் மாதவியும் நெடுநிலா முற்றத்திருந்து நிலவுப் பயன் கொண்டனர். அழகுச் செல்வி காற்சிலம்பு ஒலிக்க ஆடினாள்; பாடினாள்; ஊடினாள்; கூடினாள்; கொள்ளை இன்பம் உற்றான் கோவலன்! இதுபோலவே கூடிக் களித்தனர் பிற காதலரும்! ஆனால் கண்ணகியின் காலில் சிலம்பு இல்லை; நெற்றியில் திலகம் இல்லை; கூந்தலில் எண்ணெய் இல்லை; முகத்தில் சிரிப்பு இல்லை. கணவனைப் பிரிந்தோர் கண்ணகி போலவே தனிமைத் துயர் உற்றனர். இவ்வாறு புணர்ந்தோர் இன்புற, பிரிந்தோர் துன்புற மீனக் கொடியுடைய மன்மதன் விடிய விடிய இரவுக்காலம் முழுதும் ஆட்சி செய்தான். மாதவியின் மகிழ்வையும் கண்ணகியின் கவலையையும் முரண்பட்ட இரு ஓவியங்களாகத் தீட்டுகிறது அந்திமாலைச் சிறப்புச்செய் காதை. பெருங்காவியம் உரிய சிறுபொழுது வழியாகவும் இது அமைகிறது.

## 1.6.2. நிலமகள் புலம்புதல்

*விரிகதிர் பரப்பி உலகம்முழுது ஆண்ட*
*ஒருதனித் திகிரி உரவோன் காணேன்*
*அங்கண் வானத்து அணிநிலா விரிக்கும்*
*திங்கள்அம் செல்வன் யாண்டுஉளன் கொல்எனத்*
*திசைமுகம் பசந்து செம்மலர்க் கண்கள்*

விரிந்த கதிர்களை எங்கும் பரப்பி உலகம் முழுமையும் ஆண்ட ஒப்பற்ற ஒற்றைச் சக்கரம் கொண்ட தேரில் உடைய வலிமை மிக்க என் கணவன் சூரியனைக் காணேன். அழகிய இடம் அகன்ற வானிலே அழகான நிலவுகளை விரிக்கும் திங்கள் ஆகிய என் செல்வ மகனையும் காணவில்லை என திசை ஆகிய முகம் பசலை படரச் செவ்விய மலர்க் கண்கள் நீர் சிந்த உடல் முழுதும் நடுங்கக் கடலை ஆடையாகக் கொண்ட பெரிய நில மகள் தன் கணவனான கதிரவனைக் காணாது அந்தி நேரத்தில் மனம் கலங்கினாள்.

## 1.6.3. பூம்புகாரில் புகுந்த பொன்மாலைப் பொழுது

தம் அரசர்க்கு வரி செலுத்தும் கடமையுணர்ந்த குடிகள் துயரம் கொள்ள, அங்ஙனம் வரி செலுத்தாது உட்பூசல் செய்யும் குடிகளுடன் ஒருதலையாக நட்புத் தொடர்பு கொண்டு, வெற்றியைத் தரும் படை வேந்தர் இல்லாத நேரம் அறிந்து, அவர் நாடெல்லாம் கெடும்படி நலமெல்லாம் கவர்ந்து, தம் படையுடன் புதிதாக வந்து தங்கிய குறுநில மன்னர் போல, மாலைப் பொழுது வந்தது! தம் மனத்தில் தங்கிய கணவரைப் பிரிந்த மகளிர் மிக்க துயர் அடைய, தம் கணவருடன் கூடியிருக்கும் மகளிர் மிக்க மகிழ்ச்சி பெற, மூங்கில் குழலில் கோவலரும், வளரும் முல்லையில் இளம் வண்டுகளும் வாய் வைத்து



குறிப்புகள்

குறிப்புகள்

ஊத, குறும்பு செய்யும் வண்டினங்களை ஓட்டி அரும்புகளில் உள்ள மணத்தை முகர்ந்து கொண்டு தென்றலாகிய செல்வன் தெருவெல்லாம் பரப்ப, ஒளி மிக்க வளையலை அணிந்த மகளிர் அழகிய விளக்குகளை ஏற்ற, வளமார்ந்த மூதூரில் மாலைப் பொழுது வந்தது! தாம் இளம் பருவத்தினராயினும் பகையரசரை வென்று வாகை சூடிப் போரில் மாட்சிமையுடன் திகழும் பாண்டியர் குல முதல்வன் ஆதலின், திங்கட் செல்வன் அந்திப் பொழுதில் செவ்வானத்தின்கண் வெள்ளிய பிறையாகத் தோன்றி, வருத்தத்தைத் தரும் மாலைபின் குறும்பினை ஒட்டி தன் பண்பில் சிறிதும் பிறழாமல் பால் போன்ற வெள்ளிய கதிர்களை விரித்து விண்மீன்கள் அடங்கிய வானத்தை ஆள, அத் திங்கட் செல்வன் வந்தான்! அவன் வருகையால் உலகம் ஒளி பெற்றுத் திகழ்ந்தது!

### 1.6.4. கோலம் கொண்ட கோதை

*நிலவுப்பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்*
*கலவியும் புலவியும் காதலற்கு அளித்துஆங்கு*
*ஆர்வ நெஞ்சமொடு கோவலற்கு எதிரிக்*
*கோலம் கொண்ட மாதவி*

மாதவியும், கோவலனும் வீட்டிடத்தே வளரும் முல்லை மல்லிகை ஆகிய மலர் களுடன் வேறு பல பூக்களும் பரப்பிய மலர்ப் படுக்கையில் பொலிவுடன் இருந்தனர். மாதவி, தனது பரந்த உயர்ந்த அல்குலின் மேல் விளங்கும் ஆடையின் மீது பவள வடமாகிய மேகலை அசைந்து ஒலிக்க, நிலவின் பயனை அனுபவித்தற்குரிய உயர்ந்த நிலா முற்றத்திலே, தன் காதலனுடன் கூடியும் ஊடியும் இன்பம் அளித்தாள். அவள் விருப்பம் மிகுந்த நெஞ்சத்துடன் கோவலனை எதிர் ஏற்றுத் தழுவினாள்; அத்தழுவலால் ஒப்பனை குலைய, அதனை மீண்டும் திருத்திக் கோவலனுடன் மேலும் மேலும் கூடி அவனுக்கு இன்பம் அளித்தாள்; தானும் இன்பம் நுகர்ந்தாள்.

### 1.6.5. ஒப்பனை துறந்த ஓவியம்

*அம்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய*
*மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்*
*கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்*
*மங்கல அணியின் பிறிதுஅணி மகிழாள்*
*கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்*
*திங்கள் வாள்முகம் சிறுவியர்ப்பு இரியச்*
*செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்*
*பவள வாள்நுதல் திலகம் இழப்பத்*
*தவள வாள்நகை கோவலன் இழப்ப*

*மைஇருங் கூந்தல் நெய்அணி மறப்பக்*
*கையறு நெஞ்சத்துக் கண்ணகி அன்றியும்,*

அங்கே மாதவியோ கோவலனோடு மகிழ்ந்திருக்க இங்கே கண்ணகியோ பிரிவுத் துயரில் ஆழ்ந்திருந்தாள். கண்ணகியின் அழகிய சிவந்த சிறிய பாதங்கள் அணியும் சிலம்புகளை இழந்தன; மென் துகில் உடுத்திய அல்குலிடத்திலிருந்து மேகலாபரணம் நீங்கியது. அவள், கொங்கை முன்றிலில் குங்குமம் பூசவில்லை; மங்கல அணியைத் தவிரப் பிற அணியை விரும்பவில்லை; அவளது காதுகள் வளைவான குண்டலத்தைத் துறந்து தாழ்ந்தன; திங்கள் போன்ற ஒளி முகத்தில் கணவனைக் கூடும்போது தோன்றும் சிறு வியர்வையும் நீங்கியது; சிவந்த கயல் மீன் அனைய நீண்ட கண்கள் மையினை மறந்தன: பவளம் போல் ஒளி விடும் நெற்றித் திலகம் இழந்தது. அவளது சுடர்மிகு புன்சிரிப்பைக் கோவலன் இறந்தான். அவளது மிகக் கரிய கூந்தல் நெய் அணிதலை மறந்தது. கணவனைப் பிரிந்த கண்ணகி இவ்வாறு செயலற்று வருந்தினாள்.

குறிப்புகள்

### 1.6.6. மன்மதனின் காவல்

*காண்வரு குவளைக் கண்மலர் விழிப்பப்*
*புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து*
*முள்வாய்ச் சங்கம் முறைமுறை ஆர்ப்ப*
*உரவுநீர்ப் பரப்பின் ஊர்த்துயில் எடுப்பி*
*இரவுத் தலைப்பெயரும் வைகறை காறும்*
*அரைஇருள் யாமத்தும் பகலும் துஞ்சான்*
*விரைமலர் வாளியொடு கருப்புவில் ஏந்தி*
*மகர வெல்கொடி மைந்தன் திரிதர*
*நகரம் காவல் நனிசிறந் ததுஎன்.*

அன்னம் மென்னடை பயில, ஆம்பல் மணம் வீச தேன் மிக்க நறுமணமுடைய சிவந்த வாயையும், குளிர்ச்சி பொருந்திய கருமணலாகிய கூந்தலையும் உடைய நல்ல நீர் மிக்க பொய்கை என்னும் மடவாள் கண் விழிக்கப், பண்பாடும் வண்டினம் பள்ளியெழுச்சி பாடும். அழகு வாய்ந்த குவளையாகிய கண்மலர் விரியும், பறவைகளின் ஒலியாகிய முரசுடன், புள்ளிகள் மிக்க சிறகையுடைய கோழிச் சேவலும், முள் போன்ற கூரிய வாயையுடைய சங்கும் தத்தம் முறைக்கேற்ப அடுத்தடுத்து ஒலிக்கும். கடல் போன்ற புகார் நகரை இவை எல்லாம் ஒன்று சேர்ந்து துயில் எழச் செய்யும். இரவு நீங்கும் வைகறை வரையிலும் இருள் மிக்க நள்ளிரவிலும் ஒரு நொடிப்பொழுதும் துயிலாதவனாக மணம் மிக்க மலர் அம்பையும் கரும்பாகிய வில்லையும் ஏந்தி மகரம் ஆகிய வெற்றிக் கொடியை

உடைய மன்மதன் திரிந்து கொண்டிருந்தால் அந்நகரில் மன்மதனின் காவல் ஆட்சி மிகச் சிறந்து விளங்கியது.

## 1.7. தொகுத்துக் காண்போம்

சிலப்பதிகாரம் தோன்றுவதற்குரிய காலச்சூழலைப் பதிகம் என்னும் பகுதியின் மூலம் நாம் அறிந்தோம். உரைபெறு கட்டுரை மூலம் நாம் சேரன் செங்குட்டுவனுக்குப் பிறகு கண்ணகி வழிபாடு மற்ற நாடுகளிலும் விளங்கிய திறத்தை அறிந்து கொண்டோம்.

## 1.8. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

குறிப்புகள்

1. கண்ணகி கோவலன் திருமணம் எவ்வாறு நடைபெற்றது?
2. கோவலன் கண்ணகியை எவ்வாறெல்லாம் புகழ்ந்தான்?
3. மாதவியின் ஆடல் திறத்தினைக் காட்டுக.
4. கணவனைப் பிரிந்த கண்ணகியின் நிலையைக் காட்சிப்படுத்துக.

## 1.9. மேலும் பயில்வதற்கான நூல்கள்

1. சிலப்பதிகாரம் - புலியூர்க்கேசிகன் (தெளிவுரை) பாரி நிலையம், சென்னை 108, 1993
2. சிலப்பதிகாரம் -புகார்க்காண்டம் நா.மு. வேங்கடசாமி நாட்டார் உரை கௌரா பதிப்பகக்குழுமம், சென்னை-5

# கூறு . 2 இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் -புகார்க்காண்டம் -2

## 2.1 இந்திர விழவு ஊர் எடுத்த காதை (காதை – 5)

### 2.1.1. காதைச்சுருக்கம்



இருள் அகன்றது. பொழுது புலர்ந்தது. கிழக்கே ஞாயிறு தோன்றியது. பூம்புகார் விழாக்கோலம் பூண்டது. மாந்தர் இந்திர விழா நடத்தத் தொடங்கினர். புகார் நகரம் மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என இரு பிரிவுகளையுடையது. மருவூர்ப்பாக்கத்தில் யவனர் இருப்பிடங்களும், பிறநாட்டு வணிகர் இருப்பிடங்களும் விளங்கின; வண்ணம், சுண்ணம், மலர் முதலியன விற்கும் வீதியும், நவமணிகள் விற்கும் வீதியும், பாணர் இருப்பிடங்களும் அங்கே திகழ்ந்தன. பட்டினப்பாக்கத்தில் அரச வீதியும், வேளாளர் வீதியும், கணிகையர் வீதியும் விளங்கின. அவ்விரு பாக்கங்களுக்கு இடையே நாளங்காடி என்னும் கடைத்தெரு அமைந்திருந்தது . நாளங்காடியில் உள்ள பூதத்திற்கு மறக்குடி மகளிர் பூப்பலி கொடுத்தனர். வீரர்கள் “ வேந்தன் வாழ்க ! என வாழ்த்தி வஞ்சினம் கூறித் தற்பலியிட்டனர் . வேந்தன் வடதிசை சென்று வென்று பரிசாகப் பெற்று வந்த கொற்றப் பந்தரும், பட்டி மண்டபமும், தோரண வாயிலும் ஒருங்கே காட்சியளித்த இடத்தும் பலி வழங்கப்பட்டது . வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூத சதுக்கம், பாவை மன்றம் ஆகிய ஐவகை மன்றங்களிலும் பலிகள் தரப்பட்டன. வச்சிரக்கோட்டத்திருந்த முரசை ஐராவதக் கோட்டத்திற்குக் கொண்டு சென்று, விழாவின் தொடக்கமும் முடிவும் பற்றி அறிவித்தனர். கற்பகத் தருக் கோட்டத்தில் கொடி ஏற்றப்பட்டது. காவிரியின் புனித நீரால் இந்திரனை நீராட்டினர். சிவபெருமான் முதலான பிற கடவுளின் கோயில்களிலும் விழாச் செயல்கள் நடைபெற்றன. அறவோர் பள்ளிகளில் அறவுரைகள் நிகழ்ந்தன. பரத்தமை ஒழுக்கம் உடைய கணவன்மார் விருந்தினரை உடன் அழைத்துச் செல்ல, மனைவியர் ஊடல் தீர்ந்து கூடிக் களித்தனர். இவ்வின்ப நாளில் கண்ணகியின் இடக்கண் துடித்தது; மாதவியின் வலக்கண் துடித்தது. புகார் நகரத்து இந்திரவிழா செய்ததைப் பொலிவுடன் சொல்வது இந்திர விழவு ஊர் எடுத்த காதை. இக்கதையில் புகாரின் புனைவும் இந்திர விழாவின் சிறப்பு உரைக்கப்படுகின்றன. வரலாற்றுப் பார்வையில் இக் காதை புகாரின் ஊரமைப்பு அட்டவணையாகத் திகழ்கிறது

### 2.1.2. பொழுது புலர்ந்தது

புகாரில் கடலாகிய ஆடையையும் நதியாகிய முத்தாரமும் முகில் ஆகிய கூந்தலும் உடைய நில மடந்தையின் போர்வையை விலக்கி கதிரவன் தன் கதிர்களைப் பரப்பினான். பொழுது புலர்ந்தது.

### 2.1.3. மருவூர்ப் பாக்கத்தின் மாண்பு

*உலகுவிளங்கு அவிர்ஒளி மலர்கதிர் பரப்பி,*
*வேயா மாடமும், வியன்கல இருக்கையும்,*
*மான்கண் காதலர் மாளிகை இடங்களும்,*

குறிப்புகள்

*கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்*
*பயன்அறிவு அறியா யவனர் இருக்கையும்,*
*கலம்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்*
*கலந்துஇருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்,*
*வண்ணமும் சுண்ணமும் தண்நறுஞ் சாந்தமும்*
*பூவும் புகையும் மேவிய விரையும்*
*பகர்வனர் திரிதரு நகர வீதியும்,*
*பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்*
*கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கையும்,*
*தூசும் துகிரும் ஆரமும் அகிலும்*
*மாசுஅறு முத்தும் மணியும் பொன்னும்*
*அருங்கல வெறுக்கையோடு அளந்துகடை அறியா*
*வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகும்,*
*பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு*
*கூலம் குவித்த கூல வீதியும்,*
*காழியர் கூவியர் கள்நொடை யாட்டியர்*
*மீன்விலைப் பரதவர் வெள்உப்புப் பகருநர்*
*பாசவர் வாசவர் பல்நிண விலைஞரொடு*
*ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்,*
*கஞ்ச காரரும் செம்புசெய் குநரும்*
*மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்*
*கண்ணுள் வினைஞரும் மண்ஈட் டாளரும்*
*பொன்செய் கொல்லரும் நன்கலம் தருநரும்*
*துன்ன காரரும் தோலின் துன்னரும்*
*கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப்*
*பழுதுஇல் செய்வினைப் பால்கெழு மாக்களும்*
*குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்*
*வழுஇன்றி இசைத்து வழித்திறம் காட்டும்*
*அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும்,*
*சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு*
*மறுஇன்றி விளங்கும் மருவூர்ப் பாக்கமும்,*

புகார் நகரின் மருவூர்ப்பாக்கத்தில், நிலாமுற்றமும் பெரிய அணிகள் வைத்த அறைகளோடு கூடிய இடங்களும், மானின் கண்ணைப் போலத் துளை செய்யப்பட்ட காற்று செல்லும் சாளரங்களைக் கொண்ட மாளிகைகளும், காண்பாரைத் தம்மை விட்டுப் போக விடாமல் தடுக்கும் பயன் கெடுதல் அறியாத யவனர் இருப்பிடங்களும் பல விளங்கின.

மரக்கலங்கள் மூலமாக வரும் செல்வத்திற்காக, தாம் பிறந்த நாட்டை விட்டுவந்த அயல் நாட்டார் பலரும் ஒரே நாட்டவரைப் போலக் கலந்து உறையும் கடற்கரையைச் சார்ந்த குடியிருப்புகள் பல அங்கு விளங்கின. வண்ண வண்ணக் குழம்பும், சுண்ணப் பொடியும், குளிர்ந்த மணம் மிக்க சந்தனக் கலவையும், மலர்களும் அகில் முதலான புகைப் பொருள்களும் விற்கப்படும் வீதிகள் பல அங்கு இருந்தன. பட்டு நூலாலும், எலி மயிராலும், பருத்தி நூலாலும் நுண் தொழில்களை ஊசியால் செய்யும் கைவினைஞரான காருகர் வாழ்விடங்கள் பல அங்கு இருந்தன. பட்டும், பவளமும், சந்தனமும், அகிலும், மாசிலாமுத்தும் பிற மணிகளும், பொன்னும் ஆகிய இவை இவ்வளவு என அளந்து அறிய முடியாதவாறு குவித்துக் கிடக்கும் வளம் மிகுந்த இடம் அகன்ற வீதிகள் பல அங்கு இருந்தன. பகுதி வேறுபாடு தெரிந்த பற்பல பண்டங்களும், நெல், வரகு, தினை முதலான எண்வகைக் கூலமும் தனித்தனியாகக் குவித்து விற்கும் கூலக் கடைத் தெருக்கள் பல அங்கு இருந்தன. பிட்டு வாணிகரும், அப்பம் சுடுவாரும், கள்ளை விற்கும் வலைச்சியரும், மீனை விற்கும் பரதரும், வெண்மை நிறம் வாய்ந்த உப்பை விற்கும் உமணரும், வெற்றிலை விற்பாரும் பஞ்சவாசம் விற்பாரும், பல்வகை ஊண் தசைகளை விற்பாரும், எண்ணெய் வாணிகரும் நெருங்கி உறையும் ஊன் மலிந்த இருப்பிடங்கள் பல அங்கு இருந்தன. வெண்கலப் பாத்திரம் செய்யும் கன்னாரும், செப்புப் பாத்திரம் செய்வாரும், மரத்தை அறுத்து வேலை செய்யும் தச்சரும், வலிய கையையுடைய கொல்லரும், சித்திரங்கள் வரைவாரும், மண்ணால் பொம்மை செய்வாரும், பொன்னணி செய்யும் தட்டாரும், இரத்தினத் தட்டாரும், தையல் வேலை செய்வாரும், தோலைத் தைத்து வேலை செய்யும் செம்மாரும், துணியாலும் நெட்டியாலும் பலவகை உருக்களைச் செய்து அழகினை மிகுத்துக் காட்டிக் குற்றமற்ற கைத்தொழில் செய்யும் பல்வேறு இனத்தாரும் வாழும் இடங்கள் பல அங்கு இருந்தன. குழல், யாழ் ஆகியவற்றால் குரல் முதலான ஏழிசையையும் குற்றமின்றி அமைத்துப் பண்களையும் திறங்களையும் பாடவல்ல பெறலரும் இசை மரபு உணர்ந்து பெரும்பாணர்கள் உறையும் இடங்கள் பல அங்கு இருந்தன. சிறிய கைத்தொழில் செய்வாரும், பிறர் இட்ட பணியைச் செய்வாரும் உறையும் இடங்களும் அம்மருவூர்ப் பாக்கத்தே இருந்தன .இவ்வாறாக பூம்புகார் நகரத்தின் வணிக பகுதியாக மருவூர்ப்பாக்கம் மாண்புடன் திகழ்ந்தது.

குறிப்புகள்

### 2.1.4. பட்டினப்பாக்கத்தின் பான்மை

அரச வீதி, தேரோடும் வீதி, கடைத்தெரு, வாணிகர் மாட மறுகு, வேதியர் இருக்கை, உழவர், மருத்துவர், சோதிடர் போன்றோர்

வாழுகின்ற பெரிய வீதிகள், சூதர், மாகதர், நாழிகைக் கணக்கர், கூத்தர், பரத்தையர், கூத்தியர், குயிலுவர் ஆகியோரின் இருப்பிடங்கள் குதிரை வீரர், யானைப் பாகர், வீரமறவர் ஆகியோர் வாழும் இருப்பிடங்களைக் கொண்டதாகப் பட்டினப்பாக்கம் திகழ்ந்தது.

### 2.1.5. இடைநிலம்

மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கம் என்னும் இரு பகுதிக்கும் இடையில் இருக்கும் சோலைகளில் விற்போர் வாங்குவோர் ஆரவாரம் இடையறாது நிலை பெற்று விளங்கியது. அது இரு பெருவேந்தர் போர்க்களம் போல ஆரவாரம் மிக்கதாகத் திகழ்ந்தது.

### 2.1.6. ஐவகை மன்றங்கள்

அயல் நாட்டிலிருந்து வந்த புதியோர், தம் பெயர் எழுதிய அடையாள எழுத்தினை இலச்சினையாக அமைத்த, பல எண்களையுடைய பொதிகள் பண்டசாலை வாயிலில் குவிந்திருந்தன. வலிய தாழ்இட்ட கதவுகளையுடைய அரணாகிய காவலையும், அவற்றிற்கு உரிமையுடையோர் காத்திருக்கும் காவலையும் அவை நீங்கியிருந்தன. ஆயினும் அவற்றைக் களவாடுவோர் உளராயின், அவர் கழுத்து வலிக்கப் பொதியைத் தலையில் ஏற்றி வைத்துச் சுமக்கச் செய்து ஊரைச் சுற்றி வரச்செய்யும் அங்குள்ள பூதம். அவர்க்கு அதைவிட வேறு தண்டனை தருவதில்லை. எனவே இக்கடும் துன்பத்தை எண்ணிக் களவை மனத்தால் நினைக்கவும் யாரும் அஞ்சுவர் . இத்தகைய பூதம் தங்கியுள்ள “ வெள்ளிடை மன்றம் “ ஒன்று புகாரில் இருந்தது. கூனர் , குறளர் ( குள்ளர் ), ஊமையர், செவிடர், உடல் அழுகும் தொழு நோயாளர் ஆகியோர் முழுகி நீராடிய அளவிலே பழுதில்லாத நல்ல தோற்றத்தைப் பெற்று வலம் செய்து தொழுது நீங்குதற்குரிய பொய்கையினையுடைய “ இலஞ்சி மன்றம் ஒன்றும் அப்புகாரில் இருந்தது. வஞ்சனையாகச் சிலர் மருந்து தர உண்டு பித்தேறினாரும், நஞ்சை உண்டு நடுங்குதுயர் உற்றாரும், அழலும் விடத்தையுடைய பாம்பின் கூரிய பற்கள் அழுந்தக் கடியுண்டாரும், பிதுங்கிய கண்ணையுடைய பேயால் கடுந் துன்ப முற்றாரும், சுற்றி வந்து தொழுத உடனே, அவர்தம் துன்பமெலாம் நீக்குகின்ற, ஒளி சொரியும் நெடிய கல் நாட்டி நிற்கும் “ நெடுங்கல் மன்றம் “ ஒன்றும் அப்புகாரில் இருந்தது. தவ வேடத்தில் மறைந்து தீய ஒழுக்கத்தில் ஈடுபடும் போலி வேடதாரிகள், மறைந்து தீய நெறியில் செல்லும் ஒழுக்கமிலா மகளிர், அரசனுக்குக் கேடு சூழும் அமைச்சர், பிறர் மனைவியை விரும்புவோர், பொய் சாட்சி புகல்வோர், புறங்கூறுவோர் ஆகிய இவர்கள் என் கையிலிருக்கும் பாசத்திடத்து அகப்படுவோராக!” என நான்கு காதம் கேட்கும்படி தனது கடிய குரலையெழுப்பிய பின்

அவ்வாறே அவர்களைப் பற்றியிழுத்து நிலத்தில் அறைந்து உண்ணும் பூதம் நிற்கும் " பூத சதுக்க மன்றம்" ஒன்றும் அப்புகாரில் இருந்தது. அரசனது செங்கோலாட்சி சிறிது மாறுபடினும், அறங்கூறும் அவையில் நீதியுரைப்போர், நீதி நூலுக்கு மாறுபட ஒருபால் சார்ந்து நீதி உரைக்கினும், நாவால் ஒன்றும் கூறாது துன்பக் கண்ணீர் சொரிந்து அழும் பாவை நிற்கும் "பாவை மன்றம்" இன்றும் அப்புகாரில் இருந்தது. வாழ்க்கையின் உண்மைத் தன்மையை உணர்ந்த மேலோரால் போற்றிப் புகழப்படும் அந்த ஐவகைப்பட்ட மன்றங்களிலும் மக்கள் அரிய பலியிட்டு வழிபட்டனர் .

குறிப்புகள்

### 2.1.7. இந்திரவிழா அறிவிப்பு

வச்சிரக் கோட்டத்தில் இருக்கும் மங்கல முரசைக் கச்சணிந்த யானையின் பிடரியிலே ஏற்றி , தூய வெண்மை நிறம் உடைய யானைகட்கெல்லாம் அரசனாகிய ஐராவதம் என்னும் யானை நிற்கும் கோயிலில் சென்று இந்திர விழாவின் தொடக்கம் முடிவு ஆகிய நிகழ்ச்சிகளை முரசறைந்து தெரிவித்தனர். ஐராவதம் என்னும் கோட்டத்தினின்றும் தொடங்கி நகர் முழுவதும் முரசறையப்படும். அவ்வாறு செய்வது , ஐராவதம் இந்திரனைக் கொணர்தற்கு என்பர். பின் இந்திரன் கோயிலில் ( தருநிலைக் கோட்டத்தில் ) அட்ட மங்கலத்தோடு ஐராவதம் தீட்டப்பட்ட நெடுங்கொடியைத் தொடக்க விழாவுக்கு அறிகுறியாக வானுற ஏற்றினர். மரகதம், வயிரம் ஆகிய மணிகள் வைத்துப் பதித்த பவளத் தூண்களுடன் கூடிய திண்ணைகளையுடையன நெடுநிலை மாளிகைகள். அவற்றின் வாயில்தோறும் பண்செறிந்த கொம்பையும், முத்துச் சிப்பியின் அங்காந்த வாயினின்றும் பிறந்த ஒளி முத்துக்களையும் உடைய அட்ட மங்கலங்கள் பொறித்த, வளைத்த மாலை வடிவாகச் செய்யப்பட்ட மகர தோரணங்கள் விளங்கின. குற்றம் ஏதும் இல்லாத பசும்பொன்னாலான பூரண கும்பங்களும் பொலிவான முளைப் பாலிகையும், பாவை விளக்கும், பசும்பொற் கொடியும் அழகிய பொற் சுண்ணமும் வீதியெங்கும் நெருங்கிப் பொருந்தியிருந்தன. ஐம்பெருங் குழுவைச் சார்ந்தோரும், எண்பேராயத்தைச் சார்ந்தோரும், அரச குமரரும், வனிகக் குமரரும் விரைந்து செல்லும் குதிரையினராய் யானைத் தொகுதியினராய் மேலே பாய்ந்து செல்லும் பூட்டிய தேரினராய் ஒரு சேர நெருங்கி வந்து, புகழ்பெற்ற தம் அரசன் மேன்மையடையும் பொருட்டுப் பூம்புகார் நகரிடத்தே "புகழ் மிக அரசாளும் மன்னன் வெற்றி பெறுவானாக!" என வாழ்த்தினர் . பின், மிகப்பெரிய இவ்வுலகத்தில் நிலை பெற்ற உயிர்களைக் காக்கும் குறுநில மன்னர்களில் ஓராயிரத்தெட்டு மன்னர்கள் குளிர்ந்த மணமுள்ள காவிரியின் பூந்தாது நிறைந்த பெரிய துறைக்குச் சென்று நல்ல புண்ணிய நீரைப்

குறிப்புகள்

பொன்குடத்தில் ஏந்திக் கொண்டு வந்து தர, அவ்வைம்பெருங்குழுவினர் முதலானோர், மண்ணுலகோர் மருள , விண்ணுலகோர் வியக்கத் தேவர்க்கு அரசனான இந்திரனின் திருவுருவை மஞ்சன நீராட்டினர்.

### 2.1.8. கண்ணகியின் கருங்கண்ணும் மாதவியின் நெடுங்கண்ணும்

*கள்உக நடுங்கும் கழுநீர் போலக்*
*கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்*
*உள்நிறை கரந்துஅகத்து ஒளித்துநீர் உகுத்தன*
*எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன*

இவ்வாறாக புகார் நகரம் இந்திர விழாவிற்காக மகிழ்ந்திருந்த வேளையில் அகம் எல்லாம் நிறைந்து மேலே வழிந்து தேன் சொரியும் மலர் போல இந்திரா விழாவின் கடைசி நாளில் கண்ணகியின் கருங்கண்ணும் மாதவியின் செங்கண்ணும் தம் உள்ளத்தே நிறைந்த குறிப்பினை மறைத்து நீர் சொரிந்தன. கண்ணகி இடக்கண்ணும் மாதவியின் வலக்கண்ணும் துடித்தன. பெண்களின் இடக்கண் துடித்தல் நன்மைக்கும் வலக்கண் துடித்தல் தீமைக்கும் அறிகுறி. இங்கே பிரிந்த கணவனை விரைவில் கண்ணகி அடையப் போகிறாள் ஆதலின் நன் நிமித்தமாக அவளது இடது கண் துடித்தது. மாதவி கோவலனைப் பிரியப் போகிறாள் ஆதலின் தீ நிமித்தமாக அவளது வலது கண் துடித்தது.

## 2.2. கடலாடு காதை (காதை – 6)

### 2.2.1 காதைச்சுருக்கம்

"இமயமலையின் வடசேடியில் வாழும் விஞ்சையன், புகார் நகரத்து இந்திர விழாவினைக் காண விரும்பிக் காதலியுடன் புறப்பட்டான். கங்கை. உச்சயினி, விந்தம், வேங்கடம், காவிரி முதலானவற்றைக் காதலிக்குக் காட்டிக் காவிரிப் பூம்பட்டினத்தை அடைந்தான் . மாதவி ஆடிய ஆடலைத் துணைவியுடன் கண்டு மகிழ்வுற்றான் . இந்திர விழா முடிந்தது. கோவலன் வெறுப்புற்றிருந்தான். வருத்தம் நீங்கும் வண்ணம் தன்னை ஒப்பனை செய்து கொண்டு அவனை மகிழ்வித்தாள் மாதவி. பொழுது புலர்வதன் முன் இருவரும் வீதிகள் பலவற்றைக் கடந்து கடற்கரை சென்றனர். அரச குமரரும், செல்வரும் தம் காதலியருடன் அங்குத் திரண்டனர். கோவலனும் மாதவியும் தாழைகள் வேலியாகச் சூழ்ந்த புன்னை மர நிழலில், சித்திரத் திரையால் வளைத்த அறையில் வெண்கால் கட்டிலில் அமர்ந்திருந்தனர். அப்போது வசந்தமாலையின் கையிலிருந்த யாழினை மாதவி வாங்கினாள்.

### 2.2.2.விஞ்சையன் காதலியுடன் வருகை

*நாரதன் வீணை நயம்தெரி பாடலும்*
*தோரிய மடந்தை வாரம் பாடலும்*
*ஆயிரம் கண்ணோன் செவியகம் நிறைய*

*நாடகம் உருப்பசி நல்காள் ஆகி*
*மங்கலம் இழப்ப வீணை மண்மிசைத்*
*தங்குக இவள்எனச் சாபம் பெற்ற*
*மங்கை மாதவி வழிமுதல் தோன்றிய*
*அங்குஅரவு அல்குல் ஆடலும் காண்குதும்,*

குறிப்புகள்

ஒரு காலத்தில் இந்திரன் அவையில் ஊர்வசி ஆடினாள். ஆனால் நாரத முனிவனின் இனிய யாழ் இசைப் பாடலும், தோரிய மடந்தை பாடிய வாரப் பாடலும் இந்திரனின் செவி குளிரும்படி, அவள் ஆடல் பொருந்தி அமையவில்லை! அவளோ அவையில் இருந்த இந்திரன் மகன் சயந்தன் மீது காதல் கொண்டு நெஞ்சழிந்து, நிறையழிந்து நாணழிந்து தடுமாறினாள். அத் தடுமாற்றம் வெட்ட வெளிச்சமாகத் தெரியும்படி கலக நாரதர் நரம்பு அதிர வாசித்தார். இருவர் செயலையும் அறிந்த அகத்தியர் “யாழ் மங்கலம் இழப்பதாக! “ எனவும், “ஊர்வசி மண்ணுலகில் பிறப்பாளாக“ எனவும் சபித்தார். அதன்படி ஊர்வசி கணிகையர் மரபிலே மாதவியாகப் பிறந்தாள்; அந்த மாதவியின் மரபிலே தோன்றிய பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய மாதவி என்னும் நாடகக் கணிகையின் ஆடலையும் அப்புகாரில் கண்டு மகிழ்வோம் நாம்! ” செந்நிற உதட்டையும் சிவந்த வாயையும் உடுக்கைபோலும் இடையையும் உடையவளே! இன்னொன்று கேள்! அங்கு பூசைக்குரிய அமரர் தலைவனைக் கண்டு வணங்கி மகிழ்வோம் நாம்! உச்சிகளோடு கூடிய இமய மலையையும், வளம்மிக்க நீரையுடைய கங்கையாற்றையும், அழகிய உஞ்சை நகரையும், விந்திய மலையையும் அதனைச் சூழ்ந்த காட்டையும், திருவேங்கட மலையையும் நிலம் பொறாத விளைபொருள்களையுடை காவிரி பாயும் சோழ நாட்டையும் தன் காதலிக்குக் காட்டி, பின்னர் மலர்கள் மலர்ந்து விளங்கும் தோட்டங்களையுடைய புகார் நகரையடைந்தான். அடைந்து , முன் சொன்ன முறைப்படி நாளங்காடிப் பூதம், ஐவகை மன்றம் முதலியவற்றைத் தொழுது துணைவிக்குக் காட்டி, அவளையும் தொழுமாறு செய்தான். பின் வளம் பெருகிய அம் மூதூரில் நடைபெறும் இந்திர விழாவினைக் கண்டு மகிழ்ந்து தன் காதலிக்குக் காட்டினான்.

### 2.2.3. மாதவி ஆடிய பதினொரு வகை ஆடல்கள்

*மாயோன் பாணியும் வருணப் பூதர்*
*நால்வகைப் பாணியும் நலம்பெறு கொள்கை*
*வான்ஊர் மதியமும் பாடிப் பின்னர்ச்*
*சீர்இயல் பொலிய நீர்அல நீங்கப்*
*பாரதி ஆடிய பாரதி அரங்கத்துத்*

குறிப்புகள்

*திரிபுரம் எரியத் தேவர் வேண்ட*
*எரிமுகப் பேர்அம்பு ஏவல் கேட்ப*
*உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய*
*இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்,*
*தேர்முன் நின்ற திசைமுகன் காணப்*
*பாரதி ஆடிய வியன்பாண்ட ரங்கமும்,*
*கஞ்சன் வஞ்சம் கடத்தற் காக*
*அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்*
*அல்லியத் தொகுதியும், அவுணன் கடந்த*
*மல்லின் ஆடலும், மாக்கடல் நடுவண்*
*நீர்த்திரை அரங்கத்து நிகர்த்துமுன் நின்ற*
*சூர்த்திறம் கடந்தோன் ஆடிய துடியும்,*
*படைவீழ்த்து அவுணர் பையுள் எய்தக்*
*குடைவீழ்த்து அவர்முன் ஆடிய குடையும்,*
*வாணன் பேரூர் மறுகிடை நடந்து*
*நீள்நிலம் அளந்தோன் ஆடிய குடமும்,*
*ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்*
*காமன் ஆடிய பேடி ஆடலும்,*
*காய்சின அவுணர் கடுந்தொழில் பொறாஅள்*
*மாயவள் ஆடிய மரக்கால் ஆடலும்,*
*செருவெம் கோலம் அவுணர் நீங்கத்*
*திருவின் செய்யோள் ஆடிய பாவையும்,*
*வயல்உழை நின்று வடக்கு வாயிலுள்*
*அயிராணி மடந்தை ஆடிய கடையமும்,*
*அவரவர் அணியுடன் அவரவர் கொள்கையின்*
*நிலையும் படிதமும் நீங்கா மரபின்*
*பதினோர் ஆடலும் பாட்டின் பகுதியும்*
*விதிமாண் கொள்கையின் விளங்கக் காணாய்*

திருமாலை வாழ்த்தும் தேவபாணியும், வருண பூதர் நால்வரையும் வாழ்த்துகின்ற நால்வகைத் தேவபாணியும், பல்லுயிரும் தன் குளிர்ச்சியால் நன்மை பெற வேண்டும் என்னும் கொள்கையுடன் வானிலே ஊர்ந்து செல்லும் திங்களைப் பாடும் தேவபாணியும் பாடி ஆடும் மாதவியைப் பார்! ' தப்புத் தாளங்கள் நீங்க , பொருத்தமான தாள . இயல்பு பொலிவு பெறப் பாரதி பைரவி அரங்கம் எனப் பெயர் பெற்ற சுடுகாட்டிலே, தேவர், திரிபுரத்தை எரிக்க வேண்டியதால், எரி முக அம்பு ஏவப்பட்டுச் செயல் முடித்த அளவிலே, உமையவள் ஒரு பக்கம் விளங்க உயர்ந்த

சிவபெருமான் வெற்றிக் களிப்பால் ஆடி அருளிய கொடு கொட்டி எனும் ஆடலை ஆடும் மாதவியைப் பார்! தேரின் முன்னிடத்து நின்ற நான்முகன் காணுமாறு பாரதி வடிவமாகிய இறைவன் வெண்ணீறு அணிந்து ஆடிய பாண்டரங்கக் கூத்தை நிகழ்த்தும் மாதவியைப் பார்! கஞ்சனின் வஞ்சனையை வெல்லும் பொருட்டுக் கரிய நிறத்தோனாகிய மாயோன் ஆடிய அல்லியத் தொகுதியை ஆடும் மாதவியைப் பார் கஞ்சனால் ஏவப்பட்ட வஞ்ச யானையின் கொம்பை ஒடித்தற்கு மாயோன் ஆடிய ஆடல் அல்லியத் தொகுதி ஆடும் மாதவியைப் பார்! வாணாசுரன் என்னும் அசுரனை வெல்லும் பொருட்டு , அஞ்சனவண்ணன் மல்லனாகி ஆடிய மல்லாடல் கூத்தினை ஆடும் மாதவியைப் பார்! கரிய கடலின் நடுவிலே நீரின் அலையையே அரங்கமாகக் கருதி நின்று , எதிர்த்து முன்னின்ற சூரபத்மனின் சூழ்ச்சியை அறிந்து அவனை வென்ற முருகன் வெற்றிக் களிப்பால் ஆடிய துடி கொட்டி சாய்த்து என்னும் கூத்தை நிகழ்த்தும் மாதவியைப் பார்! முருகன் தன் குடையைச் சாய்த்து சாய்த்து ஆடிய குடைக் கூத்தினை நித்ததும் மாதவியைப் பார்! நெடிய பூமியை ஓர் அடியாலே தாவி அளந்த மாயோன் குடம் கொண்டு ஆடிய குடக் கூத்தை நிகழ்த்தும் மாதவியைப் பார்! " ஆண்மைத் தன்மை திரிந்த பெண்மைக் கோலத்தோடு காமன் ஆடிய பேடிக் கூத்தை நிகழ்த்தும் மாதவியைப் பார்! " மிக்க சினமுடைய அசுரரின் வஞ்சகக்கொடுந் தொழிலைப் பொறாதவளாய்த் துர்க்கை மரக்காள் கொண்டு ஆடிய மரக்கால் கூத்தை நிகழ்த்தும் மாதவியைப் பார்! " திருமகள் கொல்லிப்பாவை வடிவுடன் ஆடிய பாவைக் கூத்தைப் பாங்குற நிகழ்த்தும் மாதவியைப் பார் ! " இந்திராணி என்னும் தெய்வ நங்கை கடைசியர் ( உழவர் ) வடிவு கொண்டு ஆடிய கடையக் கூத்தை நிகழ்த்தும் மாதவியைப் பார் ! " இங்ஙனம் கூறப்பட்ட அவரவர் அணிகளுடனும் , அவரவர் மெய்ப்பாடுகளுடனும் நின் றாடலும், வீழ்ந்தாடலும் ஆகிய நீங்கா மரபினொடு பொருந்திய பதினொரு வகை ஆடல்களும் அவற்றிற்கேற்ற பாடல் கூறுபாடுகளையும் விளங்கக் காண்பாயாக ! அன்று வடசேடியில் தேன் சிந்தும் பூம்பொழிலிலிருந்தபோது நான் சொன்ன உருப்பசியாகிய மாதவி மரபிலே வந்த மாதவி இவளே காண்" எனக் காதலிக்குக் கூறித் தானும் கண்டு களித்தான் மேன்மை பொருந்திய சிறப்புடைய அவ்விஞ்சையன்.

### 2.2.4. மாதவியின் அழகுக் கோலம்

விண்ணவர் தம்மைப் பிறர் அறியாதவாறு கரந்து வந்து காணும் இந்திர விழாவும், மாதவியின் ஆடலும் பாடலும் முடிவுற்றன. அவளது ஆடல் சிறப்புப் பிறரைக் கவருமாறு அமைந்ததால் கோவலன் சற்றே

குறிப்புகள்

ஊடல் கொண்டிருந்தான். அவனது ஊடலைப் போக்க எண்ணிய மாதவி தன்னைப் பலவாறு ஒப்பனை செய்து கொண்டாள். பத்துவகைத் துவரினாலும், ஐந்து வகை விரையினாலும் முப்பத்திரண்டு வகை ஓமாலிகையாலும் ஊறவைத்த நல்ல நீராலே வாச நெய் தேய்த்த மனம் கமழும் தன் கூந்தலை நீராட்டித் தூய்மை செய்தாள். பின் அகிற்புகையூட்டி ஈரம் போக்கினாள்; கருங்கூந்தலை ஐந்து வகையாக வகுத்து வகைதோறும் கத்தூரிக் குழம்பு ஊட்டினாள்; அழகிய சிவந்த சிறிய அடிகளில் செம்பஞ்சுக் குழம்பினை எழுதினாள்; நன்மை மிக்க மெல்லிய விரல்களில் மகரவாய் மோதிரங்களை அணிந்தாள். கால்களில் பாதசாலம், சிலம்பு, பாடகம், சதங்கை என்னும் அணிகளைப் பொருத்தமாக அணிந்தாள், குறங்கு செறி என்னும் அணிகளைத் துடைகளில் செறித்தாள்; பெரிய முத்துக் கோவைகள் முப்பத்திரண்டால் செய்த விரிசிகை என்னும் அணியுடன் கூடிய மேகலையை அழகு விளங்குமாறு இடையில் உடுத்திக் கொண்டாள். அழகிய கண்டசரம் என்னும் அணியுடன் சேர்த்துக் கட்டிய முத்துவளையைத் தோளுக்கு அணிந்தாள். முகப்பில் கட்டிய மாணிக்கத்துடன் வயிரங்கள் பதிக்கப்பட்ட சித்திர வேலைப்பாடுடைய கடகமும், சிவந்த பொன்னாலான வளையலும், நவமணிகள் பதித்த வளையலும், சங்கு வளையலும், பல்வேறுபட்ட பவழ வளையல்களும் என்னும் இவற்றை அழகிய மயிரையுடைய முன் கைக்குப் பொருத்தமாக அணிந்தாள். வாளை மீனின் பிளந்த வாயைப் போன்ற முடக்கு மோதிரமும், ஒளிமிக்க செந்நிறம் விளங்கும் மாணிக்கம் பதித்த மோதிரமும், பக்கத்தே வளைந்து அலை அலையாக ஒளிவிடும் வயிரம் சூழ்ந்த மரகதமணித்தாள் செறியும் என்னும் இவற்றைக் காந்தள் மலர் போன்ற மெல்லிய விரல்கள் மறையுமாறு அணிந்தாள். வீரசங்கிலியும் நுண்ணிய சங்கிலியும் பொன் சரடும் , புனையப்பட்ட தொழில்களையுடைய பிற அணிகளும் ஆகியவற்றை அழகிய கழுத்திலே முத்தாரத்துடன் அணிந்து கொண்டாள். சங்கிலிகளின் கொக்கியினின்றும் தாழ்ந்த, விருப்பம் தரும் தூய முத்தினாலான கோவையானது அவளது முதுகை மறைத்திருந்தது . முகப்பில் கட்டின இந்திர நீலத்தின் இடையிடையே திரண்ட வயிரத்தால் கட்டப்பட்டு அழகு பெற்ற குதம்பை என்னும் அணியை வடிந்த காதினிடத்தே அழகுற அணிந்து கொண்டாள் . சீதேவியென்னும் தெய்வ உத்தியோடு வலம்புரிச் சங்கும் தொய்யகம் புல்லகம் என்பனவும் தொடர்ந்து ஒன்றான தலை அணியைக் கரிய நீண்ட தன் கூந்தல் அழகு பெறுமாறு அணிந்து கொண்டாள் . இத்தகைய பேரழகுடன் வந்த மாதவி கூடலும் ஊடலுமாகக் கோவலனுக்கு இன்பம்

அளிக்கப் படுப்பதற்கென்றே அமைந்த சேக்கையாகிய பள்ளியறையிலே இருந்தாள்.

### 2.2.5. கடலாடச் சென்ற கோவலனும் மாதவியும்

குறிப்புகள்

நிறைமதி நாள் வந்தது. மக்கள் கடல் ஆடுவதற்காகப் போய்க்கொண்டிருந்தனர். தாளை, புன்னை சோலைகளை உடைய கடற்கரையிலிருந்து கடல் விளையாட்டைக் காண்பதற்காக தானும் அவளோடு போக விரும்பி கோவலனை வேண்டினாள் மாதவி. அவனும் உடன்பட்டான். பொய்கையில் தாமரை மலரில் உள்ள பறவைகள் வாய்விட்டுப் புலம்ப வைகறைப் பொழுது என்பதனைக் கோழிகள் கூறி அறிவிக்க வானத்தில் முளைத்த வெள்ளி இருளை விலக்க மாலை அணிந்த மார்பினை உடைய கோவலனுடன் மாதவியும் புறப்பட்டாள். கோவலன் அரச வாகனமாகிய ஒரு ஜாதிக் குதிரை வண்டியில் ஏறினான். மான் போன்ற பார்வையுடைய மாதவியோ மூடு வண்டி ஒன்றில் ஏறினாள். அவர்கள் பல்வேறு தடைகளையும் தாண்டிக் கடந்து சென்று நெய்தல் நிலத்து கடற்கரைச் சாலையை அடைந்தனர். அங்கே கண்ணைக் கவரும் வண்ண விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன கடலில் செல்லும் மரக்கலங்களை வழிகாட்டும் கலங்கரை விளக்கமும் ஓடும் மீன்களைத் தடுத்துப் பிடிக்கும் வலையுடைய மீனவர் மீன்பிடிப் படகில் வைத்த விளக்குகளும் மொழி வேறுபட்ட பிறநாட்டினர் வைத்த வீதிவிளக்குகளும், மிகப்பெரும் பண்டசாலை காப்போர் வைத்த விளக்குகளும் ஆக நெய்தல் நிலப் பகுதி விளக்குகளால் நிரம்பியிருந்தது. நெய்தல்நில கடற்கரையை அடைந்த மாதவி தன் விளையாட்டுத் தோழியருடன் விளையாட விரும்பி சென்றாள். மாதவி மட்டுமன்றி அரச குமரரும் அவர்தம் உரிமை மகளிரும் வணிக குமரரும் அவர்தான் பல்வேறு வகைப்பட்ட ஆய மகளிரும் ஆடல் மகளிரும் பாடல் மகளிரும் ஆகிய இவர்களின் கூட்டமும் கடற்கரையை அடைந்தன. அப்பொழுது கடலின் நாற்றத்தைப் போக்கி, வெண் மணல் பரப்பில் புன்னைமர நிழலில் சித்தரத்தை உடைய திரைச்சீலையை சுற்றிலும் சேர வளைத்துக் கட்டி மேல் விதானமும் இடப்பட்ட யானை தந்தத்தால் ஆன கால்களையுடைய கட்டிலின் மீது அமர்ந்த நீண்ட அழகிய கண்களையுடைய மாதவி வசந்தமாலையின் கையிலிருந்த நல்ல யாழினைச் செவ்வனே வாங்கி கோவலனுடன் மகிழ்ச்சியாக இருந்தாள்

## 2.3 கானல் வரி (காதை – 7)

### 2.3.1. காதைச்சுருக்கம்

யாழைத் தொழுது வாங்கிய மாதவி இசையை எழுப்பிப் பார்த்து , குற்றமின்மையைக் கண்டறிந்து , அதனைக் கோவலனிடம் தந்தாள்.

குறிப்புகள்

அவன் காவிரி ஆற்றையும் கடற்கரைச் சோலையையும் மையமாக வைத்து வரிப் பாடல்களை யாழில் இசைத்துப் பாடினான். தலைவன் தலைவியர் தம் களவொழுக்கம் உணர்த்தும் அகப்பொருள் துறை அமைந்த பாடல்களை அவன் பாட, அவற்றைத் தவறாகப் புரிந்து கொண்டாள் மாதவி. " இவன் பாடிய பாடல்களில் ஒரு குறிப்பு உண்டு! இவன் வேறொருத்தியிடம் மயங்கினான் போலும்! " எனக் கருதிய அவள், யாழைத் தான் வாங்கினாள். தன்னுள்ளத்தே வேறொரு குறிப்பு இல்லை யென்றாலும், அப்படி ஒரு குறிப்புத் தோன்றுமாறு, அவளும் கானல் வரிப் பாடல்களைப் பாடினாள். யாழிசை மேல் ஊழ் வந்து தாக்க, கோவலன் மனம் திரிந்தது! "மாயப் பொய் பல உடைய குலத்திலே பிறந்தவளாதலின், அக்குலத்திற்கு ஏற்பவே பாடினாள்! " எனக் கருதி அவளை அணைத்த கையை நெகிழ்த்தான். ஏவலர் சூழ்ந்துவர, மாதவியை விட்டு நீங்கினான். மனம் வருந்திய மாதவி தனியே வண்டியிலேறிக் காதலன் இன்றி மனை புகுந்தாள் .

### 2.3.2. காவிரியைப் புகழ்ந்த கோவலன்

*திங்கள் மாலை வெண்குடையான் சென்னி செங்கோல் அதுஓச்சிக்*
*கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி.*
*கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாது ஒழிதல் கயல்கண்ணாய்.*
*மங்கை மாதர் பெருங்கற்புஎன்று அறிந்தேன் வாழி காவேரி.*

*மன்னும் மாலை வெண்குடையான்வளையாச்செங்கோல் அதுஓச்சிக்*
*கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி.*
*கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாது ஒழிதல் கயல்கண்ணாய்.*
*மன்னும் மாதர் பெருங்கற்புஎன்று அறிந்தேன் வாழி காவேரி.*

*உழவர் ஓதை மதகுஓதை உடைநீர் ஓதை தண்பதங்கொள்*
*விழவர் ஓதை சிறந்துஆர்ப்ப நடந்தாய் வாழி காவேரி.*
*விழவர் ஓதை சிறந்துஆர்ப்ப நடந்த எல்லாம் வாய்காவா*
*மழவர் ஓதை வளவன்தன் வளனே வாழி காவேரி.*

சித்திரங்கள் தீட்டப் பட்ட உரையில் இடப்பட்டிருந்த அழகிய யாழினைக் கையிலெடுத்த மாதவி அதனைச் சுருதி கூட்டி இசை எழுப்பினாள். அந்த வேளையில் ஏவிய படி செய்வேன் நம் பணி யாது எனக் கேட்ட கோவலன் கையிலேயே யாழினை நீட்டினாள் மாதவி. அவனும் காவிரியைக் கருதிக் கடற்கரையைக் கருதி வரிப் பாடல்களை அவள் மனம் மகிழுமாறு பாடத் தொடங்கினான்.

### 2.3.3. கோவலன் காவிரியை நோக்கிப் பாடியவை

மாலை அணிந்த முழுமதிபோலும் வெண்குடையையுடையவன் சோழன் அவன் தன் செங்கோலைச் செலுத்திக் கங்கையைக் கூடினாலும்

நீ அவனை வெறுப்பதில்லை! அதனால் நீ வாழ்வாயாக, காவேரி! கங்கையை அவன் புணர்ந்தாலும் அவனை நீ வெறுக்காம லிருப்பதற்குக் காரணம் கயல் கண்ணாய்! மாதரின் நிலைபெற்ற பெருங் கற்பின் தன்மையே என்பதனை நான் அறிந்து கொண்டேன், வாழி காவேரி! " நிலைத்த புகழ்மாலை சூடிய, வெண் கொற்றக் குடையையுடையவன் சோழவேந்தன். அவன் என்றும் வளையாத தன் செங்கோலைச் செலுத்திக் குமரியைப் புணர்ந்தானாயினும் நீ அவனை வெறுக்காமலிருக்கிறாய் ! அதனால் நீ வாழ்வாயாக காவேரி! கன்னியாகிய குமரியை அவன் புணர்ந்தாலும், நீ அவனை வெறுக்காமலிருப்பதற்கு காரணம் கயல் கண்ணாய் ! மாதரின் நிலைபெற்ற பெருங் கற்பின் தன்மையே என்பதனை நான் அறிந்து கொண்டேன், வாழி காவேரி! "புதுப்புனல் பெருகி வந்தது கண்டு உழவர் மகிழ்ச்சியால் ஆர்ப்பரிக்கும் ஓசையும், நீர் மதகிலே செல்வதால் உண்டாகும் இசையும், கரைகளையும், வரப்புகளையும் உடைத்துப் பாய்கின்ற நீரின் ஓசையும், புதுப்புனல் விழாக் கொண்டாடும் மக்களின் பலவகை ஓசையும் இருபுறமும் சிறந்து ஒலிக்க, நீ நடந்து செல்பவள் ! ஆதலின் நீ வாழ்வாயாக! காவேரி! நீ அங்ஙனம் நடந்த செயலெல்லாம் அரசனிடத்தைக் காவல் செய்யவும் வேண்டாமைக்குக் காரணமான வீரரின் போர் ஒழுக்கத்தையுடைய சோழ வேந்தனின் ஆட்சிச் சிறப்பேயாகும் என்பதனை நான் அறிந்தேன், நீயும் அறிவாயாக! வாழி, காவேரி! " என்று கோவலன் பாடினான். இவ்வாறாக ஆரவாரமாய் கோவலன் யாழிசை பாட மாதவியோ மாறாகப் பொருள் கொண்டாள். கோவலன் வேறு கன்னியரை அணிந்து வந்தாலும் மாதவி ஆகிய தான் புலத்தல் ஆகாது என கோவலன் கூறுகின்றான் என்று மாதவி எண்ணினாள் .

குறிப்புகள்

### 2.3.4. திங்களோ கூற்றமோ அணங்கோ

*கயல்எழுதி வில்எழுதிக் கார்எழுதிக் காமன்*
*செயல்எழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர்.*
*திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே*

கோவலன் தொடர்ந்து புருவம் என வில்லையும் கூந்தல் என கரிய மேகத்தையும் எழுதி அவற்றுடன் என்னை வருத்தும் காமத்தை உண்டாக்கும் காமதேவனின் தொழிலையும் எழுதி இறைவன் முடித்த முகம் திங்களோ காணீர் அழகிய இடத்தையுடைய வானத்திலே இருப்பின் பாம்பு கவரும் என்று அஞ்சி மீன்பிடிப் படகினால் வாழ்பவரின் வந்து மறைந்து வாழும் திங்களோ காணீர். கடற்கரையில் அலைகள் எறியும் வழங்க அதற்கு அஞ்சி இருபக்கமும் போடும் குருதிக் கறை பொருந்திய வேல் பொருந்திய கண்ணை உடையவள் கொடிய கூற்றமாக மெல்லியல்

உடைய ஒரு பெண்ணின் உருவில் வந்தது காணீர். புலால் நாறும் மீன் அது வெளியே வரும் பறவையை ஓட்டி தன்னைக் கண்டவர் தம் மனதில் காமநோயைச் செய்து வருத்தும் அணங்கு காணீர். அடும்பின் மலர்கள் பொருந்திய கடற்கரைச் சோலையில் சரிந்த மெல்லிய கூந்தலையுடைய ஒரு பெண் வடிவு கொண்ட ஆனால் எல்லாமே என்னைத் துன்புறுத்த என்று பாடுகிறான்.

குறிப்புகள்

**2.3.5. மாதவி தவறாக எண்ணுதல்**

*கானல்வரிப் பாடல்கேட்ட*
*மான்நெடுங்கண் மாதவியும்*
*மன்னும்ஓர் குறிப்புஉ ண்டுஇவன்*
*தன்நிலை மயங்கினான்எனக்*
*கலவியால் மகிழ்ந்தாள்போல்*
*புலவியால் யாழ்வாங்கித்*
*தானும்ஓர் குறிப்பினள்போல்*
*கானல்வரிப் பாடல்பாணி*
*நிலத்தெய்வம் வியப்புஎய்த*
*நீள்நிலத்தோர் மனம்மகிழக்*
*கலத்தொடு புணர்ந்துஅமைந்த*
*கண்டத்தால் பாடத்தொடங்கும்மன்.*

கோவலன் யாழிசை கேட்டுப் பாடிய கானல்வரிப் பாட்டுகளை மான் போன்ற நெடிய கண்களையுடைய மாதவி கேட்டாள். இவன் உள்ளத்தே வேறு ஒரு மாதினைப் பற்றிய நிலைபெற்ற குறிப்பு பொருளும் உள்ளது. இவன் தன் தன்மையிலே வேறுபட்டாள் எனக் கருதினால் அவனுடன் கூடும் பொழுது மகிழும் அளவு அவன் பாடல் கேட்டு மகிழ்ந்தவர் போல புறத்தே காட்டி அகத்திலே உடலோடு கோவலனிடம் இருந்த யாழைத் தன் கையில் வாங்கினாள். வாங்கி தானும் வேறு குறிப்பினள் போல் அவனுக்குத் தோன்றுமாறு கானல் வரிப் பாடல்கள் என்னும் இசைப் பாடல்களை தெய்வம் வியப்படைய பெரிய உலகத்தில் உள்ள அவர் மனம் மகிழ இசையுடன் இரண்டறக் கலந்து தன் இனிய குரலால் பாடத் தொடங்கினாள்.

**2.3.6. மாதவி காவிரியை நோக்கிப் பாடியவை**

இருபக்கம் வண்டுகள் மிக்கொலிக்க, அழகிய பூவாடை போர்த்து, கரிய கயல்போலும் கண் விழித்து அசைந்து நடந்தனை! காவேரி நீ வாழ்வாயாக“ கருங்கயல் போலும் கண்களை விழித்து அங்ஙனம் நளினமாக அசைந்து நடந்த செயலுக்கெல்லாம் காரணம், நின் கணவனான சோழவேந்தரின் திருந்து செங்கோல் வளையாமையே

என்பதனை அறிந்தேன்! காவேரி, நீ வாழ்வாயாக! ஆடவர் செம்மை நெறி நின்றால்தான் பெண்ணின் கற்புச் சிறக்கும் என்பதனை விளக்கக் காவிரியை ஒரு பெண்ணாக உருவகித்துப் பாடினாள், பூக்கள் நிறைந்த சோலையில் மயில்கள் மகிழந்து ஆட, குயில்கள் விரும்பி இசை பாட, விருப்பம் பொருந்திய மாலைகள் அருகே அசைய நடந்தாய் காவேரி, நீ வாழ்வாயாக" அவ்வாறு நடந்ததற்கெல்லாம் காரணம், நின் கணவனான சோழ வேந்தனது பகைவர்க்கு அச்சம் தரும் வேலின் ஆற்றல் நீண்டதாலேதான் என்பதனை நான் அறிந்தேன். காவேரி , நீ வாழ்வாயாக!' "நின் கணவனான சோழனின் வளநாடு மகவாக, நீ அதனை வளர்க்கும் தாயாகி ஊழிதோறும் நடத்தி வருகின்ற பேருதவியை ஒருபோதும் நிறுத்தியதில்லை" . காவேரி, நீ வாழ்வாயாக! நீ அங்ஙனம் காத்து வருவதற்குக் காரணம் உயிர்களைப் பாதுகாக்கும் ஆணைச் சக்கரத்தைச் செலுத்தும் சோழ மாமன்னனின் நடுவு நிலைமை பிறழாத தன்மையே அன்றோ? காவேரி, நீ வாழ்வாயாக! " நில உலக முத்துக்கு இணையாகுமோ அலைகடல் முத்து? என்று பாடிய மாதவி தொடர்ந்து,

*தம்முடைய தண்ணளியும் தாமும்தம் மான்தேரும்*
*எம்மை நினையாது விட்டாரோ விட்டுஅகல்க*
*அம்மென் இணர அடும்புகாள் அன்னங்காள்*
*நம்மை மறந்தாரை நாம்மறக்க மாட்டேமால்.*

என்று மாதவி பாட அது கோவலன் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து தைத்தது.

### 2.3.7. கோவலன் மாதவியைப் பிரிதல்

*கானல்வரி யான்பாடத் தான்ஒன்றின்மேல் மனம்வைத்து*
*மாயப்பொய் பலகூட்டும் மாயத்தாள் பாடினாள்என*
*யாழ்இசைமேல் வைத்துத்தன் ஊழ்வினைவந்து உருத்ததுஆகலின்*
*உவவுஉற்ற திங்கள்முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தனனாய்ப்*
*பொழுதுஈங்குக் கழிந்ததுஆகலின் எழுதும்என்று உடன்எழாது*
*ஏவலாளர் உடஞ்சூழக் கோவலன்தான் போனபின்னர்,*
*தாதுஅவிழ் மலர்ச்சோலை ஓதைஆயத்து ஒலிஅவித்துக்*
*கையற்ற நெஞ்சினளாய் வையத்தி னுள்புக்குக்*
*காதலனுடன் அன்றியே மாதவிதன் மனைபுக்காள்*

யாழிசையைக் காரணமாகக் கொண்டு ஊழ்வினை சினந்து வந்து பயனைத் தரத் தொடங்கியது. அதனால் பௌர்ணமி நாளில் விளங்கும் முழுத்திங்கள் போன்ற முகம் உடைய மாதவியை அணைத்து வாழ்ந்த வாழ்க்கையை நெகிழவிட்டவன் ஆனான். "பொழுது போயிற்று; புறப்படலாம் எழுக!" என்றான். மாதவியும் எழுந்தாள். ஆனால் அவளுடன்

குறிப்புகள்

செல்லாது, ஏவலாளர் தன்னைச் சூழ்ந்து வரக் கோவலன் சென்றான். அவ்வாறு அவன் சென்ற பின்பு மாதவி, பூந்தாதுகள் சிந்தும் மலர்ச் சோலையிலே ஆரவாரம் செய்து நின்ற தன் தோழியரின் ஒலி அடங்குமாறு கை விரித்து, தானும் ஏதும் பேசாது, யாதொன்றும் செய்வதறியாது திகைத்த நெஞ்சினளாய், வண்டியில் ஏறி உள்ளே அமர்ந்தாள். காதலனுடன் செல்வதன்றி வருந்தித் தனியே தன் மனையை நோக்கிச் செல்லலானாள்.

சிலப்பதிகாரத்தின் ஒப்பற்ற திருப்பு முனையாக அமைவது இந்தக் காதை. காவிரியை நோக்கி ஆற்றுவரியாகக் கோவலன் பாடும் அகப்பாடலின் உட்கருத்தை மாதவி தெரிந்து கொள்ளவில்லை ! கண் எதிரே ஓடும் காவிரியை நோக்கி அவள் பாடிய போதும், தனது கருத்தில் நிறைந்த கண்ணகியை நினைத்தே பாடினான் எனக் கருதல் வேண்டும்.

## 2.4. வேனில் காதை (காதை – 8)

### 2.4.1. காதைச்சுருக்கம்

இளவேனில் பருவம் வந்ததைத் தென்றல் காற்று அறிவித்தது. குயில்கள் கூவின. கோவலனைப் பிரிந்து மேல் மாடியில் நிலா முற்றத்தே வருந்தியிருந்த மாதவி, யாழ் இசைத்துப் பாடினாள். பகை நரம்பு அதிர்ந்தது, பண் மயங்கியது. காமதேவன் ஆணையால் கோவலனுக்கு ஒரு திருமுகம் அனுப்ப விழைந்தாள். தாழை மடலை எழுது தாளாக, பித்திகை அரும்பை எழுத்தாணியாக, சாதிலிங்கக் குழம்பை மையாகக் கொண்டு திருமுகத்தை வரைந்தாள்! “ இளவேனில் என்பவன் அனுபவமில்லாத இளவரசன். திங்கள் செல்வனும் செவ்வியன் அல்லன்! மலர் அம்பாள் உயிரை வாட்டுகின்றான்! இதனை நீர் அறிந்து அருளுவீராக! “ என்று தன் காம உணர்வைச் சொல்லிச் சொல்லி எழுதி முடித்தாள் .! கோவலனிடம் தருமாறு தோழி வசந்த மாலையிடம் அதனைக் கொடுத்து, ஏற்பன கூறி, அவளை அழைத்து வருமாறு வேண்டிக் கொண்டாள். மாலை வடிவான ஓலையை வாங்கிச் சென்ற வசந்தமாலை ஒரு கடை வீதியில் கோவலனைக் கண்டு அதனைத் தர, அவன் அந்த ஓலையை வாங்க மறுத்ததோடன்றி மாதவியைப் பழித்துப் பேசினான்! ஆடல் மகளே ஆதலின் இதுவும் அவளது நடிப்பே என இழித்துரைத்தான். செய்தியறிந்த மாதவி, “இன்று மாலை வராவிட்டாலும் நாளைக் காலை வருவார்? என்று கூறிப் படுக்கையில் செயலற்றுக் கிடந்தாள்.

### 2.4.2. இளவேனில் வருகை

தமிழ்நாடு ஆனது வடக்கே வேங்கட மலையையும் தெற்கே குமரி கடலையும் எல்லையாகக் கொண்டது குளிர்ச்சி பொருந்திய நீரையுடைய

தமிழ்நாட்டில் சிறந்த மாடங்களை உடைய மதுரை, பெருமை பொருந்திய உறையூர், ஆரவாரம் பொருந்திய வஞ்சி, ஒலிக்கும் கடல் துறையில் உள்ள காவிரிப்பூம்பட்டினம் ஆகிய நான்கு தலைநகரங்களிலும் பெற்றிருந்த அரசும் இந்த புகழ் உடையவன் அவனுடைய இனிய துணைவன் ஆன இளவேனில் புகாருக்கு வந்துவிட்டான் என்ற செய்தியை தென்றல் ஆகிய தூதன் குயில் அவனுக்குக் கூறினான்.



### 2.4.3. தனிமைத் துயரில் மாதவி



கடல் விளையாட்டின்போது கோவலனை ஊடிப் பிரிந்து இல்லம் வந்த மாதவி வீட்டில் தனியாய் இருந்தாள். நீல மலர் போலும் நெடிய கண்களையுடைய அவள் கோவலனை நினைத்து அவனுடன் கூடுதற்கு ஏங்கினாள். வானளாவிய மேல்நிலை மாடத்தின் ஒரு பக்கத்தே அமைந்திருந்த வேனில் பள்ளிக்குச் சென்றாள். கொற்கை முத்தும் பொதியமலை சந்தனமும் எப்போதும் அவளுக்கு மகிழ்ச்சி தருவன. ஆனால் இன்றைக்கு அவள் இருந்த சூழலில் அவை அவளுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. அவள் அங்கிருந்த யாழைத் தன் கையில் வாங்கி முதலில் மதுரகீதம் பாட கீதமாக பாடத் தொடங்கினாள். பிரிவின் காரணமாக அது மயங்கி சோக கீதமாக மாறியது.

### 2.4.4. திருமுகம் வரைந்தாள் மாதவி

*வெண்பூ மல்லிகை வேரொடு மிடைந்த*
*அம்செங் கழுநீர் ஆய்இதழ்க் கத்திகை*
*எதிர்ப்பூஞ் செவ்வி இடைநிலத்து யாத்த*
*முதிர்பூந் தாழை முடங்கல்வெண் தோட்டு*
*விரைமலர் வாளியின் வியன்நிலம் ஆண்ட*
*ஒருதனிச் செங்கோல் ஒருமகன் ஆணையின்*
*ஒருமுகம் அன்றி உலகுதொழுது இறைஞ்சும்*
*திருமுகம் போக்கும் செவ்வியள் ஆகி,*
*அலத்தகக் கொழுஞ்சேறு அளைஇ அயலது*
*பித்திகைக் கொழுமுகை ஆணி கைக்கொண்டு,*
*மன்உயிர் எல்லாம் மகிழ்துணை புணர்க்கும்*
*இன்இள வேனில் இளவர சாளன்*
*அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய*
*திங்கள் செல்வனும் செவ்வியன் அல்லன்*
*புணர்ந்த மாக்கள் பொழுதுஇடைப் படுப்பினும்*
*தணந்த மாக்கள் தம்துணை மறப்பினும்*
*நறும்பூ வாளியின் நல்உயிர் கோடல்*
*இறும்பூது அன்றுஅஃது அறிந்தீ மின்என*

குறிப்புகள்

*எண்எண் கலையும் இசைந்துஉடன் போக*
*பண்ணும் திறனும் புறங்கூறு நாவின்*
*தளைவாய் அவிழ்ந்த தனிப்படு காமத்து*
*விளையா மழலையின் விரித்துஉரை எழுதி,*
*பசந்த மேனியள் படர்உறு மாலையின்*
*வசந்த மாலையை வருகெனக் கூஉய்த்*
*தூமலர் மாலையின் துணிபொருள் எல்லாம்*
*கோவலற்கு அளித்துக் கொணர்க ஈங்குஎன*

இளவேனில் காலத்தில் கோவலன் இல்லாது தனிமைத் துயரில் உழன்ற மாதவி அவனை மீண்டும் அழைக்கும் பொருட்டு மடல் ஒன்றை எழுதக் கருதினாள் . சண்பகம், பச்சிலை, பித்திகை, வெள்ளிய பூவாகிய மல்லிகை என்னும் மலர்களாலும் வெட்டிவேராலும் அழகிய செங்கழுநீரின் நெருங்கிய மெல்லிய இதழ்களாலும் தொடுக்கப்பெற்ற பூக்களின் மணம் மாறுபடும் தன் மாலையின் நடுவிடத்தே வைத்துக் கட்டப்பட்டிருந்த முதிர்ந்த தாழம்பூவினது வெள்ளி இதழிலே, அதற்கு அயலதாகிய ஒரு பித்திகையின் கொழுவிய முகையை எழுத்தாணியாகக் கொண்டு அதனைச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து உதறி எழுதினாள். மாதவி எழுதிய முடங்கல் வருமாறு: ”உலகில் நிலை பெற்ற உயிர்கள் அனைத்தையும் தாம் மகிழும் துணையொடு புணர்விக்கும் இனிய இளவேனில் என்பான் அறிவுடைய மூத்த அரசன் அல்லன்; அனுபவமில்லாத இளவரசன். ஆதலின் அவன் நெறியறிந்து செய்யான்! அந்தி மாலையாகிய கரிய யானையின் பிடரியிலே தோன்றிய திங்களாகிய செல்வனும் செவ்வியன் அல்லன்! ஆதலால், தம்முள் காதலால் கூடிக் களித்த காதலர் உடல் காரணமாகச் சிறிது பொழுதைக் கூட்டமின்றிக் கழிப்பினும், பிரிந்து சென்றோர் தம் துணையை மறந்து வாராது ஒழியினும், தனது படைக்கலமாகிய நறுமலர் அம்புகளினால் தாக்கி அவர்களது நல்ல உயிரைக் கவர்வான் , இளவேனிலாகிய இளவரசன்! எனவே என் உயிரே! இதனை அறிந்து அருள்வீராக!“ என்று சுட்டெரிக்கும் காமம் காரணமாக முதிராத தனது மழலைச் சொற்களாலே அம் முடங்கல் வாசகங்களைச் சொல்லிச் சொல்லி எழுதினாள். பின் பிரிவாற்றாமையால் பசந்த மேனியுடைய மாதவி தனிமைத் துயர் மிகுகின்ற அந்த அந்திமாலைப் பொழுதிலேயே தோழி வசந்தமாவையை “வருக“ எனக் கூவி அழைத்தாள். “இத்தூய மலர் மாலையில் நான் வரைந்துள்ள சொற்களின் தெளிந்த பொருள்களையெல்லாம் கோவலன் மனம் ஏற்குமாறு எடுத்துக் கூறி இங்கே இப்பொழுதே அழைத்து

வருவாயாக!” என்றுரைத்து முடங்கல் அடங்கிய மாலையைக் கொடுத்தனுப்பினாள்.

### 2.4.5. மடலை ஏற்க மறுத்த கோவலன்

கூலவீதியில் கோவலனைக் கண்ட வசந்தமாலை மடலைத் தர அவனோ அதனை ஏற்க மறுத்து இதுகாறும் தன்னுடன் மாதவி வாழ்ந்த வாழ்க்கை எல்லாம் வெறும் நடிப்புத்தான் உண்மையில்லை என்று பழித்துரைத்தான். திலகத்தையும், கூந்தலையும் சிறிய கரிய இரண்டு விற்களையும், இரண்டு குவளை மலர்களையும், ஒரு குமிழ மலரையும் , இரண்டு கொவ்வைக் கனிகளையும் கொண்ட அழகிய ஒளியுடைய முகத்தோடும், மதர்த்த நோக்கத்தோடும் மாதவி என்னிடம் காதல் உடையவள் போல என் முன் தோன்றி நடித்த கண்கூடுவரி என்னும் நடிப்பை நான் கண்டேன்!“ “கூந்தலாகிய முகிலைச் சுமந்து அதன் பாரத்தைத் தாங்காது வருந்த நிலாக் கதிர்களைப் பொழியும் முகமாகிய திங்களிடத்தே தன் கண்களாகிய கயல்மீன்கள்உலாவித் திரிகின்ற அழகிய செவ்வியுடையவனாய், இதழமுதான பாகைப் பொதிந்திருக்கும் பவள வாய் திறந்து ஒளியைத் தரும் மிக்க இளமையுடைய முகத்தின் நகை நலத்தைக் காட்டி யான் “ வருக “ என அழைத்த போது வந்தும் “ போக “ எனக் கூறியபோது சென்றும் நடித்த கரிய கெடிய கண்ணையுடைய அவளது காண்வரி என்னும் நடிப்பையும் நான் கண்டேன். நான் பிரிந்தபோது, அந்தி மாலை வந்ததாகப் பிரிவாற்றாமையால் இரங்கி, சிந்தையில் நோய்மிகும் என் வருத்தத்தை நோக்கி, கிளி மொழி போன்ற மழலைச் சொல்லையும், இள அன்னத்தின் நடை போன்ற அழகிய நடையையும், முகிலைக் கண்டு களிநடம் புரியும் மயில் போன்ற தன் சாயலையும் மறைத்தவளாகி, போர் புரியும் வேல் போன்ற நெடிய கண்ணையுடைய ஏவல் மகளிரின் கோலத்தைத் தான் கொண்டு தனியே வந்து என் முன் தினம் நடித்த அவளது உள்வரி என்னும் நடிப்பையும் நாள் கண்டேன்.” காலில் அணிந்த சிலம்புகள் வாய்விட்டு அரற்றவும் மேகலை அணி ஆர்ப்பவும் தனக்குரிய அணிகளையும் புனைய இடம் பெறாத நுண்ணிடையினையுடையாள், காதல் நோக்கினையுடையவளாகி, தன்னைப் பிரிதலால் இயல்பு திருந்த என் வருத்தத்தை அறிந்தும் என்னை அணையாது புறத்தே நின்று நடித்த புன்மையுடைய அவளது புன்புற வரி என்னும் நடிப்பையும் நான் கண்டேன், ” பூந்துகள்கள் பொருந்திய மாலையும், குழலும், அளகமும் ஒற்றை வடமாகிய முத்துமாலையும் அழகிய முலைகளும் தம் பார்த்தால் மீன்போலும் இடையை வகுத்த, அந்த அழகிய நெற்றியையுடையாள், என் அருகில் வாராது புறவாயிலில் வந்து தோன்றி நின்று, அவள் கறும் மொழிகளை ஏவல் மகளிர் எனக்குக்

குறிப்புகள்

கூற நான் கூறும் மறுமொழிகளை அம் மகளிரே அவருக்குக் கூற, புணர்ச்சிக் குறிப்பை உட்பொதிந்திருக்கும் எனது புலவிச் சொல்லைக் கேட்டும், அதற்கு வேறு பொருள் கொண்டவள் போல் காட்டி, அப்பொருள் காரணமாக என்னுடன் கூடாது, தள்ளாத மேனியினையும் அழகிய மெல்லிய கூந்தலையும் உடையவளாகிப புலவியில் வேறுபட்டுப் போகின்றவள் போல் நடித்த அவளது கிளர்வரி என்னும் நடிப்பையும் நான் கண்டேன், நான் அவளைப் பிரிந்து போய்ப் பிறிதோர் இடத்திலே தனித்து இருந்தபோது, தான் அப்பிரிவாற்றாது பெரிதும் வருந்துபவளைப் போல என் நெருங்கிய சுற்றத்தார்க்குத் தான் படும் துன்பத்தைத் தேர்ந்து தேர்ந்து உரைத்து நடித்த அவளது தேர்ச்சி வரி என்னும் நடிப்பையும் நான் கண்டேன். ”வண்டுகளால் மலரச் செய்யும் பூங்கோதையினையுடையாள் மாலைப் பொழுதிலே காமநோயால் மயங்கினாள் போல எனது பிரிவுத் துன்பத்தைத் தான் கண்ட என் சுற்றத்தார்க்கெல்லாம் எடுத்துக் கூறி நடித்த அவளது காட்சி வரி என்னும் நடிப்பையும் நான் கண்டேன்! என் சுற்றத்தார் முன்பு அவள் அடுத்தடுத்து என் பிரிவாற்றாமையால் காம நோய் மிக்கு மயங்கி வீழ்வாள் போல் வீழ்ந்து நடித்த பொய் மயக்கத்தை அச்சுற்றத்தார் மெய்யெனக் கருதி அவளை எடுத்துத் துயர் தீர்க்குமாறு நடித்த அவளது எடுத்துக்கோள் வரி என்னும் நடிப்பையும் நான் அறிவேன்! ” ஆயிழாய்! அவள் ஒரு நாடக மகளே ஆதலால் இங்ஙனம் நடித்த நடிப்புகள் அப் பைந்தொடிக்குப் பொருத்தமானவையே!” என்று கூறி வர மறுத்து விட்டான் கோவலன்!

### 2.4.6. மாதவி தன்னை தேற்றிக் கொள்ளல்

*மாலை வாரார் ஆயினும் மாண்இழை*
*காலைகாண் குவம்எனக் கையறு நெஞ்சமொடு*
*பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வதிந்தனள்*
*மாமலர் நெடுங்கண் மாதவி தான்என்.*

மடலைக் கண்டு வர மறுத்த கோவலன் கூறிய செய்திகளைக் கூறினாள் வயந்த மாலை. அது கேட்டு மாதவி இன்று மாலை வாரார் ஆயினும் நாளைக் காலையில் வருவார் எனக்கூறி கையற்ற நெஞ்சமொடு பூமலர் அமளிமிசை பொருந்தாது வருந்தினாள்.

## 2.5. கனாத்திறம் உரைத்த காதை – (காதை - 9)

### 2.5.1. காதைச்சுருக்கம்

சூரியன் மறைந்தான். புகார் நகர மகளிர் மாலைப் பொழுதில் மலரும், நெல்லும் தூவி விளக்கேற்றி இல்லுறை தெய்வத்தை வழிபட்டனர். கண்ணகியின் தோழி தேவந்தி கோயிலுக்குச் சென்றாள். அறுகு முதலியவற்றைத் தூவி வழிபட்டுக் கண்ணகி தன் கணவனைப்

பெற வேண்டினாள். கண்ணகியை நோக்கி, " நீ நின் கணவனைப் பெறுவாய்? என்றாள். கண்ணகி தான் கண்ட தீக் கனவினைக் கூறினாள் . அவளுக்கு ஆறுதல் கூற விழைந்த தேவந்தி "சோமகுண்டம், சூரிய குண்டம் மூழ்கிக் காமவேள் கோட்டம் சென்று தொழுதால் தீமை விலகும்; கணவனைப் பிரியா வாழ்வு கிட்டும் என்றாள். அது பெருமையன்று என்று பதில் உரைத்தாள் கண்ணகி. அப்பொழுது கோவலன் வந்தான்! அவளது வாடிய மேனி கண்டு வருந்தினான்; தன் செயலுக்கு நாணினான், கண்ணகியின் காற்சிலம்பை முதலாகக் கொண்டு, இழந்த பொருளை மீட்க விழைந்தான்! புகாரில் வாணிகத்தை மேற்கொள்ள அவன் மனம் இடம் தரவில்லை" " மதுரை செல்லலாம் எழுக! " எனக் கண்ணகியிடம் உரைத்தான் . வினையின் ஏவலின்படி பொழுது புலர்வதன் முன்னரே அவர்கள் மதுரை நோக்கிப் புறப்பட்டனர்.

**2.5.2. மாலதியின் கதை**

முன்னொரு நாளில் மாலதி என்பாள் மாற்றாள் மகவுக்குப் பாலூட்டும்போது விக்கி அக்குழவி இறந்தது. மாலதி திடுக்கிட்டாள். " மாற்றாளும் கணவனும் என் மீது அடாத பழி சுமத்துவரே! உண்மை உணராது தூற்றுவரே! " என ஏங்கினாள்; இறந்த குழந்தையைக் கையில் ஏந்தினாள். தேவர் தருவாகிய கற்பகம் நிற்கும் கோயில், ஐராவதம் நிற்கும் கோயில், அழகிய பலதேவர் கோயில், கீழ்த்திசைத் தோன்றும் சூரியதேவன் கோயில், ஊர்க்காவல் தெய்வத்திற்குரிய கோயில், முருகன் கோயில், வச்சிரப்படை நிற்கும் கோயில், மாசாத்தன் கோயில், அருகன் கோயில், சந்திரன் கோயில் ஆகிய கோயில்களுக்குச் சென்றாள். தெய்வங்களே ! எனக்குற்றதுயர் தீர்ப்பீராக எனத் தொழுது வேண்டினாள்; பயன் இல்லை! பின்னர்ப் பாசண்டச் சாத்தன் கோவிலை அடைந்தாள். மாலதி தன் துயர் கூறி வரம் வேண்டினாள். அப்போது, இடாகினிப் பேய் ஓர் அழகிய பெண் வடிவில் அவள் முன் தோன்றியது. " மாசற்றவளே! செய்தவம் இல்லோர்க்கு எந்தத் தேவரும் வரம் கொடார் ; இது பொய்யுரை அன்று; மெய்யுரை; அந்த இறந்த குழந்தையை என் கையில் தருவாயாக!" என்று கூறிப் பறித்துக் கொண்டது! காரிருளில் சுடுகாடு ( சக்கரவாளக் கோட்டம் ) நோக்கிச் சென்றது. அங்குப் புதைக்கும் பிணங்களைத் தின்னும் அந்த இடாகினிப் பேய் அக் குழந்தையின் "பிணத்தையும் வாயில் போட்டு விழுங்கியது. அக்கோரக் காட்சியைக் கண்ட மாலதி இடியுண்ட மயில் எனத் துடித்தாள்; ஏங்கினாள். பாசண்டச் சாத்தன் ( தெய்வம் ) அவள் நிலை கண்டு பெரிதும் இரங்கி அருள் உள்ளம் கொண்டு," அன்னாய்! நீ ஏங்கி அழாதே! நீ செல்லும் வழியில் உன் கண் எதிரிலேயே உன் குழந்தையைக் காண்பாய்!" என்று கூறினான்.

அக் குழந்தையாய்க் குயில்களையுடைய பொழிலில் ஒரு மரத்தடியில் கிடந்தான். அம் மாயக் குழந்தையைப் பெரு மகிழ்ச்சியுடன் மார்பில் அணைத்துச் சென்று பெற்ற தாயான மாற்றாளிடம் தந்து மகிழ்ந்தாள் மாலதி! குழந்தையாகத் தோன்றி மாலதியின் துயர் துடைத்த பாசண்டச்சாத்தன் வளர்ந்து பிரமசர்ய நிலை அடைந்தான் ; மறை நூல்களில் வல்லவனாக விளங்கினான்; தாய் தந்தை இறந்த பின் அவர்களுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தான்; பொருள் பற்றி நேர்ந்த வழக்கில் தாயத்தாரை வென்றான்; தேவந்தி என்பாளை மணந்து இல்லறத்தில் ஈடுபட்டு இனிது வாழ்ந்து வந்தான். உண்மையைக் கூறி மீண்டும் தன் தெய்வத் தன்மையை அடையக் கருதிய அச்சாத்தன் ஒருநாள் பூப்போலும், மையுண்ட கண்ணையுடைய தேவந்தியை அழைத்து, "பிரிவைப் பொறுத்துக் கொள்வாயாக!" எனக் கூறித் தன் தெய்வத்தன்மை பொருந்திய பேரொளியை அவள் கண்கள் தாங்காது என மூவா இள நலம் காட்டி," இனி நம் கோயிலுக்கு வந்து எம்மைக் காண்பாயாக!" எனக் கூறி மறைந்தான். தேவந்தியும் எனது உள்ளம் பிணித்த கணவன், "புண்ணிய துறைகளாடச் செல்கிறேன்" என்று கூறிப் பிரிந்து சென்றார்; அன்பரை மீட்டுத் தருக! என்று அவளாக ஒன்றைக் கற்பித்து ஒரு பிரார்த்தனையிலே மனத்தைச் செலுத்தி அந்தப் பாசாண்டச் சாத்தன் கோயிலுக்குச் சென்று வழிபடுதலைக் கடமையாகக் கொண்டாள்.

### 2.5.3. கண்ணகிக்காக வேண்டிய தேவேந்தி

வாடாத பெரும் புகழுடைய கண்ணகிக்கும் தன்னைப் போலவே கணவன் பிரிவால் நேர்ந்த துயர் உண்டு என உணர்ந்த தேவந்தி அவளது துயரைப் போக்க கருதினாள். சாத்தன் கோயிலை அடைந்து அறுகம்புல் சிறு பூளைப்பூ நெல் ஆகியவற்றை தூவித் தொழுது தெய்வமே என் தோழியின் துயர் துடைப்பாயாக என வேண்டினாள். பின் கண்ணகியிடம் சென்று நீ நின் கணவனைப் பெறுவாயாக என வாழ்த்தினாள்.

### 2.5.4. கண்ணகி கண்ட கனவு

தன்னை வாழ்த்திய தேவந்தியைக் கண்டு கண்ணகி உன் வாழ்த்து காரணமாக கணவனைப் பெறுவேன் ஆயினும் என் நெஞ்சம் ஏனோ அஞ்சி வருந்துகிறது. நேற்று இரவு என் கணவன் கனவிலே வந்து இரு கைப் பற்றி அழைத்துப் போக ஒரு பெரிய நகரில் புகுந்தோம். அந்த நகரில் வாழும் மக்கள் ஒரு பழிச்சொல்லை எங்கள் மீது இட்டனர் அப்பழி மொழியால் கோவலனுக்கு தீங்கு நேர்ந்தது என்று பிறர் சொல்லக் கேட்ட யான் அரசன் முன் சென்று வழக்குரைத்தேன். அதனால் அவ்வூர்க்கும்

தீங்கு நேர்ந்தது. தீக்கனவை கூறக்கூடாது. ஆதலால் அங்கு நேர்ந்த தீங்கினை உனக்கு உரையேன். செறிந்த வளையலை உடையவளே அங்கு நான் செய்த குற்றத்தின் பயன் போலும். நான் பெற்ற நற்பேற்றினை நீ கேட்பாயானால் அது உனக்கு நகை உண்டாக்கும் என்றாள் கண்ணகி.



### 2.5.5. தேவந்தி கண்ணகியை நோன்பு செய் எனல்

*மடல்அவிழ் நெய்தல்அம் கானல் தடம்உள*
*சோமகுண்டம் சூரிய குண்டம் துறைமூழ்கிக்*
*காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு*
*தாம்இன் புறுவர் உலகத்துத் தையலார்*
*போகம்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாம்ஒருநாள்*
*ஆடுதும் என்ற அணிஇழைக்குஅவ் ஆய்இழையாள்*
*பீடுஅன்று எனஇருந்த பின்னரே, நீடிய*
*காவலன் போலும் கடைத்தலையான் வந்துநம்*
*கோவலன் என்றாள்ஓர் குற்றிளையாள், கோவலனும்*
*பாடுஅமை சேக்கையுள் புக்குத்தன் பைந்தொடி*
*வாடிய மேனி வருத்தம்கண்டு, யாவும்*

கண்ணகியின் கனவை கேட்ட தேவந்தி, கண்ணகியை நோக்கி பொன்னாலான வளையலை அணிந்தவளே நீ அவனால் வெறுக்கப்பட்டவள் அல்லை. முற்பிறப்பில் நின் கணவன் பொருட்டு காக்கவேண்டிய நோன்பினைச் செய்யத் தவறினாய். அதனால் உண்டான தீங்கு கெடுவதாக. காவிரி தன் நீரை எல்லாம் கொண்டு சென்று கடலோடு எதிர்த்து அலைக்கும் நெய்தல் நிலச்சோலையிலே சோமகுண்டம் சூரிய குண்டம் என்னும் இரு பொய்கைகள் உள்ளன. அந்த புண்ணிய தீர்த்தங்களின் துறைகளிலே மூழ்கி காமவேள் கோட்டம் சென்று காமதேவனைத் தொழும் மகளிர் இம்மையில் தன் கணவருடன் கூடி பிரியா வாழ்வு வாழ்ந்து இன்புறுவர். மறுமையிலும் போக பூமியில் தேவராய்ப் பிறந்து பிரியாது இன்புறுவர். எனவே நாமும் ஒருநாள் அவற்றில் நீராடுவோம் என்றாள். அது கேட்ட கண்ணகி அங்ஙனம் துறை மூழ்கித் தெய்வம் தொழுதல் எங்கள் இயல்பு அன்று என்று கூறி அவள் கருத்தை ஏற்க மறுத்தாள்.

### 2.5.6. கோவலன் வருகையும் வருத்தமும்

*சலம்புணர் கொள்கைச் சலதியொடு ஆடிக்*
*குலம்தரு வான்பொருள் குன்றம் தொலைந்த*
*இலம்பாடு நாணுத் தரும்எனக்கு என்ன,*

அப்போது குற்றேவல் செய்யும் ஒரு சிறு பெண் அங்கு வந்து கண்ணகியை நோக்கி நம் பெருமானாகிய காவலன் போலும் கடைவாயில் வந்துள்ளான் ஆம் நம் கோவலன் தான் என்றாள். கோவலனும் பெருமைமிக்க கண்ணகியின் பள்ளி அறைக்குச் சென்றான். அவளது வாடிய மேனி கண்டு உளம் நைந்தான். எல்லாச் செயலிடத்தும் வஞ்சம் பொருந்திய கொள்கையுடைய மாயத்தாள் உடன் கூடிய தீய ஒழுக்கத்தால் நம் குலத்தவர் தேடித்தந்த மலைபோன்ற செல்வங்கள் எல்லாம் தொலைந்தன. அதனால் உண்டான வறுமை எனக்கு நாணத்தைத் தருகிறது என்றான்.

### 2.5.7. சிலம்பு உள கொள்க

*நலம்கேழ் முறுவல் நகைமுகம் காட்டிச்*
*சிலம்புஉள கொண்மின் எனச்சேயிழை கேள்இச்*
*சிலம்பு முதலாகச் சென்ற கலனொடு*
*உலந்தபொருள் ஈட்டுதல் உற்றேன் மலர்ந்தசீர்*
*மாட மதுரை யகத்துச்சென்று என்னோடுஇங்கு*
*ஏடுஅலர் கோதாய். எழுகென்று நீடி*
*வினைகடைக் கூட்ட வியம்கொண்டான் கங்குல்*
*கனைசுடர் கால்சீயா முன்.*

காதலன் சொற்களைக் கேட்ட கண்ணகி தனது ஒளிமிகு முகத்திலே நன்மை பொருந்திய சிறுமுறுவல் தோன்றச் சிலம்புகள் உள்ளன அவற்றைக் கொள்மின் என்று கூறினாள். கோவலன் நீ கூறிய இச் சிலம்பையே வாணிக முதலாகக் கொண்டு பரந்த புகழையுடைய மதுரைக்குச் சென்று வாணிகம் செய்து முன்னர் இழந்த கலன்களையும் பொருட்களையும் தேடிப் பெருக்கத் துணிந்தேன் இதழ் விரிந்த மாலை அணிந்த அணிந்தவளே நீயும் என்னுடன் புறப்படுவாய் என்றான். முன் செய்த தீவினை நெடுங்காலம் தங்கி நெஞ்சை ஒருநிலைப்படுத்தித் தூண்ட தீவினையின் ஏவலின் படி கோவலன் பொழுது புலர்வதற்கு முன் கண்ணகியுடன் மதுரை செல்லப் புறப்பட்டான்.

## 2.6. நாடுகாண் காதை – (காதை -10)

### 2.6.1. காதைச்சுருக்கம்

காவிரியின் வடகரை வழியாக மேற்கு நோக்கிச் சென்றனர். ஒரு காத தூரம் கடந்து கவுந்தியடிகளின் அடி தொழுது தாங்கள் மதுரைக்குச் செல்வதைக் கூற, அவரும் உடன் வர மூவரும் நாள்தோறும் ஒரு காவதம் நடந்து சென்றனர். திருவரங்கத்தைக் கடந்து செல்லும்போது சோலையில் தோன்றிய சாரணரைத் தொழுதனர். சாரணர் கூறிய சமண ஆகம உரைகளைக் கேட்டு , அருகப் பெருமாளின் பெருமைகளை ஏத்திப்

புகழ்ந்தார் கவுந்தியடிகள். பின் மூவரும் ஓர் இடத்தில் ஏறிக் காவிரியின் தென்கரையை அடைந்து ஒரு பூம்பொழிலில் தங்கினர். அங்கே வந்த வம்பப் பரத்தையும் வறுமொழியாளனும் கண்ணகியையும் கோவலனையும் நோக்கிப் பழிக்க, அது பொறாத கவுந்தியடிகள் அவர்களை நரிகளாகுமாறு சபித்தார். கோவலனும் கண்ணகியும் அவர்களுக்காக இரங்கி வேண்ட, கவுந்தியடிகள் ஓராண்டில் சாபம் விலக அருள் செய்தார். பின், மூவரும் உறையூரை அடைந்தனர்.



### 2.6.2. வீட்டை விட்டு நீங்குதல்

*தூமயிர் அன்னமும் துணைஎனத் திரியும்*
*தாளொடு குயின்ற தகைசால் சிறப்பின்*
*நீள்நெடு வாயில் நெடுங்கடை கழிந்துஆங்கு,*

குறிப்புகள்

ஞாயிறு தோன்றாத யாமத்திலே நட்சத்திரங்களோடு அழகுடன் திகழும் வெண்மதியும் வானத்தினின்றும் மறைந்தது. கரிய இருள் பரவி நின்ற விடியற் காலத்தே பண்டைத் தீவினையின் விளையால் உள்ளம் துரத்தக் கோவலன் புறப்பட்டான். அழகு பொருந்திய சிறப்புடன் செய்யப்பட்ட பெரிய கதவினை உடைய மாளிகையின் நெடிய இடைகழியைக் கோவலனும் கண்ணகியும் கடந்து சென்றனர்.

### 2.6.3. புகாரை நீங்கிப் புறப்படுதல்

அவர்கள் ஆதிசேடன் ஆன பாம்பணை மேல் அறிதுயில் கொள்ளும் மணிவண்ணன் ஆன திருமால் கோயிலின் வலப் பக்கத்தில் சென்றனர். பின்னர் ஐந்து கிளைகளுடன் உயர்ந்த பசிய இலைகளையுடைய மகா போதி யின் எழில் விளங்கும் நிழலில் எழுந்தருளிய புத்தன் அருளிச்செய்த நூல் பொருளை விசும்பிலே இயங்கும் சாரணர் யாவர்க்கும் விளங்குமாறு விரித்துரைக்கும் இடமான இந்திரவிகாரங்களையும் முறையாகக் கடந்து சென்றனர். புலால் உணவைத் துறந்து பொய்யாமை எனும் விரதத்தை மேற்கொண்டு அழுக்காறு அவா வெகுளி முதலியவற்றை கைவிட்டு ஐம்புலன்களும் அடங்கிய கொள்கைக் மெய்ப்பொருள் உணர்ந்தவர் கூடும் அருகப்பெருமான் கோயிலை வணங்கிச் சென்றனர். போக்கு வரவிற்காக அமைந்த கோபுர வாயிலைக் கடந்து புகாரை விட்டு அவர்கள் நீங்கினர்.

### 2.6.4. கவுந்தியடிகளைக் காணுதல்

*மதுரை மூதூர் யாதுஎன வினவ,*
*ஆறுஐங் காதம்நம் அகல்நாட்டு உம்பர்*
*நாறுஐங் கூந்தல் நணித்துஎன நக்குத்,*
*தேமொழி தன்னொடும் சிறையகத்து இருந்த*
*காவுந்தி ஐயையைக் கண்டுஅடி தொழலும்*

புகாரை விட்டு நீங்கிய அவர்கள் இலவந்திகைப் பள்ளியின் மதில் புறத்தே சென்றனர். பின் இரு மருங்கும் தாழ்ந்த சோலைகள் சூழ்ந்த காவிரி ஆற்றில் புனலாட செல்வதற்குக் அமைந்த பெரிய வழியிலே சென்று நீராடுதுறையினையும் கடந்தனர். பின் மிக்க வளமுடைய காவிரியின் வடகரையிலுள்ள சோலை வழியில் மேற்கு நோக்கிச் செல்லலாயினர். ஒரு காத தூரம் கடந்து கவுந்தியடிகள் என்னும் சமணத் துறவி உறைகின்ற தவப் பள்ளியின் அருகே உள்ள சோலையை அடைந்தனர். அங்கு கண்ணகி கொடி போன்ற இடையும் உடையும் மிக வருந்தி வழி நடந்த களைப்பால் பெருமூச்செறிந்தாள். அவள் முற்றாத தன் மழலைச் சொற்களை கூரிய பற்கள் சற்றே வெளித்தோன்ற முறுவலித்து மதுரை என்னும் பழைய ஊர் தான் எதுவோ என உடல் சோர்ந்து கணவனை நோக்கி வினவினாள். அதுகேட்ட கோவலன் பெரிதும் இறங்கி மதுரை மூதூர் நமது அகன்ற நாட்டிலிருந்து ஆறு ஐந்து காதத் தூரத்தில் தான் உள்ளது. மிகவும் அண்மையில் தான் இருக்கிறது என்று கூறி நகைத்தான். பின் தேனென இனிக்கும் சொல்லையுடைய கண்ணகியுடன் சென்று தவத்தில் இருக்கும் கவுந்தி அடிகளைக் கண்டு அடி தொழுதான்.

### 2.6.5. கவுந்தியடிகள் வழித்துணை

உருவமும் உயர் குடிப்பிறப்பும் நல்லொழுக்கம் அருகப்பெருமானின் ஆகமங்களை சிறிதும் பிறழாத விரதமும் ஆகியவற்றை உடைய நீங்கள் தீவினையாளரைப் போன்று நும்மிடத்தை விட்டு நீங்கி இவ்வாறு வருவதற்கு உரிய காரணம் என்ன என வினவினார் கவுந்தியடிகள். கோவலன் “மிக்க தவத்தீர் தாங்கள் வினாவிற்கு விடை கூறும் நிலையில் நான் இப்போது இல்லை மதுரை மூதூர் சென்று வாணிகம் செய்து பொருள் ஈட்டும் விருப்பமுடையவனாதலால் இப்படி வர நேர்ந்தது” என்றான். கவுந்தி அடிகள் இவளது பாடகம் அணிந்த சிறிய அடிகள் பருக்கைக் கற்கள் ஆகிய பகையை வெல்ல மாட்டா. இடையிடையே காடுகள் நிறைந்த இந்நாட்டு வழி கடத்தற்கும் அரிதாகும். இனி ஊழ் என்ன செய்யுமோ அதன் தன்மையை யாரறிவார் எனக் கூறினார். அவர் மேலும் அவர்களை நோக்கி இன்னாத சொற்களை நீக்கிய மாசற்ற கேள்வி பயன் உடையவர் தம் அறிவுரைகளைக் கேட்டு உணர்ந்து அங்கு முழுமுதற்கடவுளான அருகப்பெருமானை வழிபடுவதற்காகத் தமிழ்நாட்டு தீதுதீர் மதுரைக்குச் செல்ல விருப்பம் உடையேன், ஆதலின் வருகிறேன் நீங்கள் புறப்படுங்கள் என்றார். அந்த உரை கோவலனுக்குப் பெரிய ஆறுதலைத் தந்தது. கவுந்தியடிகளைக் கைகூப்பித் தொழுது நாவால் வாழ்த்தினான்.

### 2.6.6. வழியின் இயல்பு

கவுந்தியடிகள் கோவலனை நோக்கி நாம் செல்ல நினைத்த இவ்வழி இடத்து துன்பம் தருவன பலவாகும் என்றார். வெயிலின் கொடுமைத் தன்மையைப் பொறாத மெல்லிய இயல்புடைய அவளை அழைத்துக்கொண்டு மிக்க மலர்களைக் கொண்ட சோலை வழியே செல்வோம் ஆயின் நிலம் பிளந்து இறங்கிய வள்ளிக் கிழங்கைத் தோண்டி எடுத்த குழிகளைச் செண்பக மரங்கள் நிரப்பிய பூந்துகள் சேர்ந்த பலப்படுத்தி அவற்றை அறிந்து தம்மைப் பாதுகாக்கச் செல்லாத மக்கள் செயலறுதற்குக் காரணமான துன்பத்தைச் செய்யும்.

அவ்வாறு துன்பம் தரும் முதிர்ந்த பழம் பூவினாளான பொய்க்குழியை மிதியாதே விழிப்புடன் நிலம் நோக்கிச் செல்வோரை மேலே முதிர்ந்து தேனொழுகும் இனிய பலாப் பழமானது பகை போல தலையில் மோதும். மஞ்சளும் இஞ்சியும் முதலியன தம்முள் கலந்த பிணக்கத்தை உடைய தோட்டத்து பாத்திகளில் பலாவினது சிவந்த சுளைகளில் இருந்து விழுந்த பழக் கொட்டைகள் பகையாகக் காலை குத்தினாலும் குத்தும்.

கயல் போலும் கண்களையுடைய கண்ணகியின் கணவனே, இத்துன்பங்களுக்கு அஞ்சி வயலின்வழிச் சென்றால் அங்கும் இதே நிலைதான். மலர்மணம் கமழும் குளங்களில் தம்முள் போராடுகின்ற கையில் மீன்களை ஓட்டி நீர்நாய் கவ்விய நீண்ட கைகளை உடைய வாளைமீன் நீர்நாய் வாய் அடங்காது வயலில் துள்ளிப் பாயும். இக்காரிகை அது கண்ட கலங்கக்கூடும். அங்கு கரும்பில் தொடுத்த பெரிய தேனடையானது காற்றால் சிதையத் தேன் தூய நீரில் கலந்துவிடும். அதனை அறியாது நீர் வேட்கையால் நீங்கள் உள்ளங் கையால் முகந்து பருகவும் கூடும்.

வயல்களில் களை பறிப்பார் வரப்புகளில் போட்ட குவளைப்பூக்களில் வண்டினம் மது உண்ட மயக்கத்தில் ஒடுங்கிக் கிடக்கும். வழிநடை துன்பத்தால் சோர்வு அடைந்து மயங்கி அவற்றின் மீது அடியிட்டு நடத்தலும் கூடும். அலைவீசும் நீரையுடைய ஒரு வாய்க்கால் கரைகளில் செல்லும்போது புள்ளிகளால் அழகுடன் திகழும் நத்தைகளும் ஆகிய உயிர்கள் இருக்கும் இடத்தை நோக்கி ஒதுங்கி நடக்காது இயல்பான நடையை மேற்கொள்வோமானால் அவற்றின் மீது அடியிட்டு நடத்தலும் கூடும். அதனால் அவற்றுக்கு மிக்க துன்பம் உண்டாகும். அவை இறக்கவும் நேரிடும். அக்கொலைத் துன்பம் நமக்குத் தேவையான நரகத் துன்பத்தைத் தரும். எனவே மதுரை செல்வதற்கு அவ்வாறான வயல்களையும் சோலைகளையும் அல்லாது வேறு வழி

இல்லை. அதனால் அத்தகைய துன்பம் தரும் இடங்களைக் குறிப்பால் அறிந்து அவற்றைச் சாராது உயிர்க்கு இன்பம் துன்பம் தராது விழிப்புடன் நடப்பாயாக என்று கவுந்தியடிகள் கோவலனை அறிவுறுத்தினார். கவுந்தியடிகள் புறப்பட அவருடன கோவலனும் கண்ணகியும் உடன் சென்றனர்.

### 2.6.7. வம்பப் பரத்தையும் வருமொழியாளனும்

*எள்ளுநர் போலும்இவர் என்பூங் கோதையை*
*முள்உடைக் காட்டின் முதுநரி ஆகெனக்*
*கவுந்தி இட்ட தவம்தரு சாபம்*

பின்னர் மேகம் சூழ்ந்த பூம்பொழில்களை உடைய காவிரி ஆகிய பெரிய ஆற்றினைக் கடந்தனர் கண்ணகியும் கோவலனும் கவுந்தி அடிகளும். திருக்கோயிலை உடைய காவிரியின் தென்கரை அடைந்து மலர் சூழ்ந்த சோலையில் இளைப்பார தங்கியிருந்தனர். அங்கே புதிதாகப் பரத்தமையை மேற்கொண்ட ஒருத்தியும் பயனில பேசும் காமுகன் ஒருவன் நறுமணம் கமழும் சோலைகள் புகுந்து அவர்கள் அருகில் சென்றனர். அப்படிச் சென்றவர், காமனும் ரதியும் போல் காணப்படும் இவர்களை யார் என கேட்டு அறிவோம் எனக் கருதி கவுந்தியடிகளை நோக்கி விரதத்தை மேற்கொண்டு பட்டினி கிடந்து இளைத்த உடம்பையும் புண்ணியத்தையும் உடையீர், இவர்கள் தாம் யாரோ என வினவினர். அதற்கு இவர்கள் என் மக்கள். காமனும் ரதியும் அல்லர். மானிட யாக்கையர். வழிநடை பயணத்தால் வருந்துகின்றனர். அவரிடம் செல்லாது சற்று விலகிச் செல்லுங்கள் என்றார். அதுகேட்டு அவர்கள் கற்றறிந்தார் என்கின்றீர். ஒரு வயிற்றில் பிறந்தோர் கணவனும் மனைவியுமாகக் கூடி வாழ்க்கை நடத்தல் உண்டோ, எனக் குறும்பாக கேட்டு எள்ளி நகையாடினர். அது கேட்ட கண்ணகி இரு செவிகளையும் பொத்திக்கொண்டு தன் கணவன் முன் நடு நடுங்கி நின்றாள். அதுகேட்ட கவுந்தியடிகள் இவர்கள் எனது பூங்கோதை போன்றவளை இகழ்ந்தனர். முள் நிறைந்த காட்டினகண் முது நரியாக எனச் சபித்தார். தவத்தையுடையவர் சாபமாதலால் உடனே பலித்தது. அவர்களை கண்முன்னால் காணமுடியவில்லை. கோவலன் கண்ணகி இருவரும் நரிகள் நெடிய குரலால் தமது அருகே ஊளையிடுவது கேட்டு நடுக்கம் கொண்டனர். இது கவுந்தியடிகள் சாபத்தால் நேர்ந்தது என்பதனை உணர்ந்து ஒழுக்கத்தினின்று நீங்கி ஒரு நேர்மை இல்லாத தீய மொழிகளைக் கூறினாலும் அறியாமை என்று அறிதல் வேண்டும் என்று கருதி, அவரைத் தொழுது தவறிழைத்தவர் சாபம் நீங்கும் காலத்தை அருள்வீராக என வேண்டினர். தமது அறியாமையினால் இன்று இவ்விழி பிறப்பினை அடைந்தோர் காட்டில் ஒரு புறத்தே 12 மாதங்கள்

நரிகளாகத் திரிந்து துன்புற்ற பின் முன்னைய உருவத்தைப் பெறுவர் என அவர்களுக்கு சாப விடுதலையும் தந்தருளினார். கவுந்திஅடிகளும் கண்ணகியும் கோவலனும் முன்னே முறம் போலும் செவியுடைய யானையுடன் போரிட்டு வென்ற புறத்தே சிறகினையுடையே கோழி என்று சொல்லப்படக்கூடிய உறையூரை விரும்பிச் சென்று அடைந்தனர்.



**2.7. தொகுத்துக் காண்போம்**

புகார்க் காண்டத்தின் நிறைவுப் பகுதியில் உள்ள காதைகளின் மூலமாக காப்பிய போக்கினை உணர்ந்து கொண்டோம். மேலும் இளங்கோவடிகளின் இலக்கிய ஆளுமையையும் உணர்ந்தோம்.

குறிப்புகள்

**2.8. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்**

1. காவிரிப்பூம்பட்டினத்தின் அமைப்பினைக் காட்டுக.
2. ஐவகை மன்றங்கள் பற்றி விளக்குக.
3. மாதவி ஆடிய ஆடல்களை விளக்குக.
4. மாதவி தன்னை எவ்வாறு ஒப்பனை செய்து கொண்டாள் ?
5. மாதவி வரைந்த மடலின் தன்மையை காட்டுக
6. கண்ணகி கண்ட கனவு யாது?
7. கோவலன் கண்ணகி கவுந்தியடிகள் சந்திப்பினை விளக்குக.

**2.9. மேலும் பயில்வதற்கான நூல்**

1. சிலப்பதிகாரம் - புலியூர்க்கேசிகன் (தெளிவுரை) பாரி நிலையம், சென்னை 108, 1993
2. சிலப்பதிகாரம் -புகார்க்காண்டம் நா.மு. வேங்கடசாமி நாட்டார் உரை கௌரா பதிப்பகக்குழுமம், சென்

# கூறு .3 இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் - மதுரைக்காண்டம்

## 3.1. காடுகாண் காதை (காதை -11)

### 3.1.1. காதைச்சுருக்கம்

குறிப்புகள்

உறையூரிலிருந்து புறப்பட்ட கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளும் தென்திசை நோக்கிச் சென்று ஒரு சோலையில் தங்கினர் . அங்கு பாண்டியனின் பெருமை பற்றித் தானே பேசிக்கொண்டிருந்த மாங்காட்டு மறையோனைச் சந்தித்தனர் . அவனிடம் மதுரை செல்லும் வழி பற்றி வினவினர். அம்மறையோன் மூன்று வழிகளைப் பற்றி விளக்கமாக எடுத்துக் கூறினான். அவர்கள், அவன் கூறிய இட வழியில் சென்றனர். நீர் வேட்கை காரணமாகக் கோவலன் ஒரு பொய்கைக் கரையை அடைந்தபோது, கானுறை தெய்வம் வசந்தமாலை வடிவத்துடன் வந்து அவனை மயக்கியது. அவன் கொற்றவை மந்திரத்தை உச்சரிக்க, வஞ்சக வடிவம் மாற, தெய்வம் தன்னியல்பினைக் கூறி மறைந்தது. பின் மூவரும் ஐயையின் கோயிலை அடைந்தனர்.

### 3.1.2. மாங்காட்டு மறையோன் சந்திப்பு

மூன்று திங்களை அடுக்கி வைத்தாற்போன்ற அழகிய முக்குடைக்கீழ் செங்கதிர் ஞாயிறு போல ஒளியுடையோனாகி, மாலைபோல மலர்கள் மலர்ந்து தொங்கும் அசோகின் கொழுவிய நிழலிலே எழுந்தருளிய, தனக்கொரு முதல்வன் இல்லாத தோற்றத்தினையுடைய அருகப் பெருமானைப் பணிந்து வணங்கினர். நிக்கந்தனுடைய பள்ளியிலே உள்ள சமண சமயத் துறவிகளுக்கெல்லாம், முன்னர் ஆற்றிடைக் குறையாகிய திருவரங்கத்தின் அகன்ற சோலையிலே சாரணர் தமக்கு அருளிய தகுதிமிக்க அறவுரைகளைக் கவுந்தியடிகள் இனிமையுற எடுத்துரைத்தார். அத்துறவியர் உறையும் அவ்விடத்திலேயே மூவரும் அன்று தங்கினர். மூவரும் மறுநாள் தெற்கு நோக்கிச் செல்ல விரும்பி வைகறையாகிய விடியற்காலத்தில் உறையூரை விட்டு நீங்கி நடக்கலாயினர். ஞாயிறு கிழக்கே விளங்கித் தோன்றினான். அவர்கள், நீர் வளம் மிக்க வயல்களும் குளங்களும் பொலிவு பெற்ற வழியிலே உள்ள சோலையின்கண் ஒரு மண்டபத்துள் நுழைந்தபோது அங்கே ஒரு முதிய மறையோனைக் கண்டனர். அம்மறையோன் பாண்டியரின் பெருமையைப் பின்வருமாறு பாராட்டி வாழ்த்திக் கொண்டிருந்தான். மன்னன் யாரினும் தலை சிறந்த தகைமையுடையோனாகிய எம் மன்னன் வாழ்வானாக! இவ்வுலகைப் பல ஊழிக்காலம் அவனே காப்பானாக! தன் பெருமையின் அளவினை உலகத்து அரசர்க்கெல்லாம் கடலைக் காலால் மிதித்து உணர்த்தியவன், வடிம்பலம்ப நின்ற பாண்டியன்! கடல்மீது வேலை எறிந்த

பெரிய பகையினைப் பொறுக்காது பொங்கியெழுந்து, ப∴றுளியாற்றுடன் பல பக்க மலைகளையுடைய குமரி மலையினையும் தன்னகத்தே கொண்டு அழித்தது. ஆதலால் அவற்றிற்குக் ஈடாக வடக்கே சென்று கங்கையாற்றையும் இமயமலையையும் கைக்கொண்டு தென் திசை ஆண்டான், பாண்டியன்! அந்தப் பாண்டியன் புகழ் வாழ்வதாக! "சந்திர குல மரபு மேன்மையடையுமாறு ஆயிரம் கண்களையுடைய இந்திரன் அணிவித்த வலிமை பொருந்திய ஆரத்தைத் தனது அழகு விளங்கும் மார்பிலே பூண்டான் பாண்டியன் , அந்தப் பாண்டியன் புகழ் வாழ்வதாக! ", "இவன் , நம் குல முதல்வனான இந்திரன் தலையிலே சூடிய முடியில் இருந்த கிம்புரியை உடைத்தவன் " என இடியுடன் கூடிய மழை சில ஆண்டுகள் பாண்டி நாட்டில் பெய்யாது ஒழிந்தது . ஆயினும் தன் நாட்டில் தப்பாத விளையுளாகிய மிக்க வளம் பெருகும் வண்ணம் , அம்மேகங்களைச் சிறைப்படுத்தி மழை பொழியச் செய்தான் பாண்டியன்! அந்தப் பாண்டியன் புகழ் வாழ்வதாக! என்றிவ்வாறு அம்முதியவன் தீதுதீர் சிறப்பின் தென்னவர் மரபினை வாழ்த்தியிருந்தனன். அவன் அருகே சென்ற கோவலன், "யாது நும் ஊர்? இங்கு எதற்காக வந்தீர்? " என வினவினான், குன்றாச் சிறப்பினையுடைய தான்மறையாளன் தனது வருகைக்குரிய நோக்கம் பற்றிக் கூறலானான். " நான் மேற்கு மலைப் பக்கத்தே உள்ள மாங்காடு என்னும் ஊரில் வாழ்பவன் . கரிய மேகம் உயர்ந்த பொன் மலைமீது விரிந்து பரந்து படிந்த தன்மை போலப் பரந்தெழுந்த ஆயிரம் தலைகளையுடைய அரிய வலிமை பொருந்திய பாம்பணையாகிய பள்ளிமீது பலரும் வணங்கிப் போற்றுமாறு, மிக்க அலைகளையுடைய காவிரிப் பேராற்றின் இடைக் குறையில் திருவரங்கம் மாறுபட்டு நிலத்தைச் சுட்டெரிக்க , முல்லையும் குறிஞ்சியும் நல்லியல்பு கெட்டுத் தன்னைச் சார்ந்தாரை நடுங்கச் செய்யும் பாலை எனப்படும் கொடுந்தன்மையுறும் "இத்தகைய வேனிற்காலத்தே காரிகையுடன் கடும் பயணத்தை மேற்கொண்டீரே! கற்பாறைகளும் , சிறு மலைகளும் மயக்கம் தரும் கானல் நீர் வேலியும் கலந்து கிடக்கும் இந்த நீண்ட பாலை வழியைக் கடந்து சென்று கொடும்பாளூர், நெடுங்குளம் என்னும் இரண்டு ஊர்களுக்கும் பொதுவான ஏரிக் கரையினை அடைந்தால், பிறை சூடிய சிவபெருமானின் முத்தலைச் சூலம் போல, கடத்தற்கரிய மூன்று வழிகள் பிரியும்! "எனக்கூறி, மேலும் அவற்றை விரிவாக எடுத்துரைத்தான் அம்மறையோன் .

### 3.1.3. வலப்புற வழியின் இயல்புகள்

மூன்று வழிகளுள் வலப்புற வழியாகச் செல்லத் துணிந்தால், விரிந்த தலையையுடைய வெண்கடம்பும், காய்ந்து போன ஓமையும்,

குறிப்புகள்

பொரிந்த தாளினை உடைய வாகையும் உலர்ந்த புல்லாகிய மூங்கிலும் நீரற்றுச் சுருங்கிக் கிடக்கும் கள்ளியும் வழியெங்கும் நிறைந்து கிடப்பதைக் காண்பீர். நீர் வேட்கையால் வருந்தும் மான்கள் நின்று அலரும் காட்டையும், எயினர் குடியிருப்பையும் கடந்து செல்ல வேண்டியிருக்கும்! பின் மலைச் சாரலில் விளையும் ஐவனம் என்னும் நெல்லும் , இலையற்ற கணுக்களையுடைய முறிக்கும் பக்குவத்தில் உள்ள கரும்பும், கொய்யும் பருவத்தையுடைய அழகு பெற்ற தினையும், வளமான புனத்தின்கண் விளைந்த வரகும், வெள்ளுள்ளியும், மஞ்சளும் , அழகிய கொடியினையுடைய கவலையும் , தாழ்ந்த குலையுடன் கூடிய வாழையும், கமுகும், தெங்கும் , மாவும், பலாவும் ஆகிய இவை ஒன்றையொன்று அடுத்தடுத்துச் சூழ்ந்திருக்கும் பாண்டியனின் சிறுமலை விளங்கித் தோன்றும். அம்மலையின் வலப்புறமாகச் செல்வீராயின் மதுரையை அடைவீர்.

### 3.1.4. இடப்புற வழியின் இயல்புகள்

அவ்வழிச் செல்லாது இடப் பக்கத்து வழியாகச் செல்ல விரும்பின், அது பற்றிக் கூறுவேன்; சிறகினையுடைய வண்டுகள் செவ்வழிப் பண் போல் பாடுகின்ற ஆழமான குளங்களையும், வயல்களையும் குளிர்ந்த பூஞ்சோலைகளையுமுடைய மருத நிலத்தையும், பின்னர்ச் சுரம்பல இடையிடையே கிடக்கின்ற காட்டு வழியையும் கடந்து செல்வீராயின், திருமாலிருஞ்சோலை மலையை அடைவீர் . அங்கே மிக்க மயக்கத்தைப் போக்கும் பிலத்து வழி ஒன்று உண்டு. அப்பிலத்தினுள்ளே, விண்ணவரும் போற்றுமாறு வியக்கத்தக்க முறையில் புண்ணிய சரவணம், பவகாரணி, இட்ட சித்தி எனப் பெயர் பெற்ற, என்றும் நீங்காத சிறப்பினை உடைய மூன்று பொய்கைகள் உள்ளன. புண்ணிய சரவணம் என்னும் பொய்கையில் முழ்கி நீராடுவீராயின் , விண்ணவர் கோமானாகிய இந்திரனால் இயற்றப்பெற்ற ஐந்திறம் என்னும் இலக்கணத்தைக் கற்றுத் தேர்ந்தவராவீர்! பவகாரணியில் மூழ்கி நீராடுவீராயின் இந்தப் பிறவிக்குக் காரணமாக இருந்த முற்பிறவிகள் பற்றி உணர்வீர்! இட்ட சித்தி என்னும் பொய்கையில் மூழ்கி நீராடுவீராயின் அப்போது நீங்கள் மனத்தில் கருதியவற்றை யெல்லாம் பெறுவீர். நீங்கள் அப்பிலத்துள் நுழைய விரும்பினால் ஓங்கி உயர்ந்த அம்மலைக்கண் எழுந்தருளியிருக்கும் திருமாலை வணங்கி, அவனது திருவடிகளைச் சிந்தையில் கொள்வீராக! அப்படி அப்பெருமானைத் துதித்து, அம்மலையை மும்முறை வலம் வந்தால் நிலம் பிளக்கும் வண்ணம் பூமியை அறுத்துக் கொண்டு செல்லும் ஆழமான சிலம்பாற்றின் அகன்ற கரையிலே, நறுமண மலர்கள் நிறைந்த வேங்கை மரத்தின்கீழ்க் கரிய மேகம் போன்ற கூந்தலையுடைய வளைந்த

வளையல் அணிந்த ஓர் இயக்க மாது தோன்றுவாள்! அப்படித் தோன்றும் அவள் ஒரு வினா வினவுவாள், ” இம்மை இன்பமும் மறுமை இன்பமும், இரண்டும் இன்றி எப்போதும் தூயதாய் நிற்கும் இன்பமும்' ஆகியவற்றைக் கூறுங்கள். நான் இம்மலையில் வாழ்கிறேன் “ என் பெயர் வரோத்தமை ! இம் மூன்று உண்மைகளை உரைப்பார்க்கு நான் எவ்வகையிலும் உரியவள் ஆவேன்“ ஆதலின் , நீங்கள் உரைப்பீர்களானால் தகுதியுடைய உமக்கு இப்பில வாயிற் கதவினைத் திறப்பேன்! ” என்று கூறுவாள். நீங்கள் ஏற்ற பதில் கூறின் கதவைத் திறந்து விடுவாள். பின் அவன் காட்டும் நல்ல வழியிலே செல்வீராயின் பல கதவுகள் ( வாயில்கள் ) தோன்றும் ! இரட்டைக் கதவினையுடைய வாயில் ஒன்றும் தோன்றும்! தொடர்ந்து சென்றால், ஓவியமாகத் தீட்டப்பட்ட பூங்கொடி போன்ற அழகிய பெண் ஒருத்தி எதிர்ப்படுவாள். அவள், ”இறுதி இலா இன்பம் என்பது எது? அதனை எனக்கு இங்கு உரைப்பீராயின், நீங்கள் விரும்பி வந்த பொருள்களைக் காண்பீர்! ” என்று வினவுவாள், ” நீங்கள் எனது வினாக்களுக்கு விடை கூறாவிட்டாலும் உங்களைத் துன்புறுத்த மாட்டேன். இந்த நெடு வழிக்கு அப்பால் கொண்டு போய் விட்டுவிடுவேன். பொருந்தப் பதில் உரைப்பார் உளராயின் அவர்க்கு மேற்கூறிய மூன்று பொய்கைகளின் கரைகளையும் காட்டித் திரும்புவேன்! ” என்றும் உரைப்பாள். ” அரிய வேதங்களில் உணர்த்தப்படும் ஐந்தெழுத்து மந்திரமான நமசிவாய என்பதனையும், எட்டெழுத்து மந்திரமான ஓம் நமோ நாராயணாய என்பதனையும் மனம் ஒன்றி முறையாக ஓதி நீர் விரும்பியதொரு பொய்கையில் நீராடுவீராயின், அதனால் நீங்கள் பெறும் பயன் பெரிதாம். அதனைத் தவத்தோரும் காண்டல் அரிது. நீவிர் மற்றப் பொய்கைகளின் பயனை எண்ணாது மலர்மிசை நின்ற திருமாலின் அழகிய தாமரை மலர் போன்ற திருவடிகளை உள்ளம் ஒன்றி நினையுங்கள் . அவ்வாறு உள்ளம் பொருந்தித் தியானம் செய்தால், அத்திருமாலின் கருடக் கொடி பறக்கும் நீண்ட கொடி காடு மரம் கண்ணுக்குத் தெரியும். பின், அவளது மலர் போன்ற இணையடிகள் உங்களை ஏற்றுக் கொண்டு பிறவித் துயரைப் போக்கும்! அந்நிலையில் பேரின்பம் அடைந்தவராய் மாண்புடைய மதுரைக்குச் செல்வீராக! கண்கூடாகக் காணத்தகும் பிலத்தின் தன்மை இதுவேயாகும்!.

குறிப்புகள்

### 3.1.5. இடை வழியின் இயல்புகள்

அந்த வழியிலும் செல்ல உங்களுக்கு விருப்பமில்லையானால் , இடைப்பட்ட வழி நல்ல வழியாகும் தேன் சிந்தும் மலர்ச் சோலைகள் சூழ்ந்த ஊர்கள் இடையிடையே உள்ள காடுகள் பலவற்றைக் கடந்து சென்றால், அந்த அரிய வழியிலே பெருந்துன்பம் தரும் கானுறை

குறிப்புகள்

தெய்வம் ஒன்று எதிரே தோன்றும்! கண்டோர் நடுக்கம் கொள்ளாதவாறு , இனிய வடிவத்தோடு வந்து துன்பம் செய்யாது வழிப் போவாரைத் தடுக்கும், அதனிடமிருந்து தப்பி நடந்து மேற்சென்றால், அம் மதுரை செல்லும் வழி மூன்றும் ஒன்று சேர்ந்து பெருவழியாக விளங்கும். ஆதலால் நீங்கள் சென்று வாருங்கள்! நான் , நெடிய உலகத்தைத் தாவியளந்த திருமாலின் திருவடிகளை வணங்கும் தன்மையுடையவன். ஆதலால் என் வழியிலே போய் வருகிறேன்! ” என்று கூறி முடித்தான். மாமறையோன் வாயிலாக வழியின் இயல்புகளைக் கேட்டறிந்த கவுந்தியடிகள் ,

*நலம்புரி கொள்கை நான்மறை யாள*
*பிலம்புக வேண்டும் பெற்றி ஈங்கில்லை*
*கப்பத் திந்திரன் காட்டிய நூலின்*
*மெய்ப்பாட் டியற்கையின் விளங்கக் காணாய்*
*இறந்த பிறப்பின் எய்திய வெல்லாம்*
*பிறந்த பிறப்பிற் காணா யோநீ*
*வாய்மையின் வழாது மன்னுயி ரோம்புநர்க்கு*
*யாவது முண்டோ எய்தா அரும்பொருள்*
*காமுறு தெய்வங் கண்டடி பணிய*
*நீபோ யாங்களும் நீள்நெறிப் படர்குதும்*

ஒரு பொருள் பொருந்திய உரையை உரைப்பாராயினார் “ நல் ஒழுக்கத்தை விரும்பும் கொள்கையினையுடைய நான்மறை வல்லவனே! நீ கூறிய பிலத்தில் புக வேண்டிய நிலை எங்களுக்கு இல்லை! நீடு வாழ்தலையுடைய இந்திரன் இயற்றிய வியாகரணத்தினை, அருகப் பெருமாள் அருளிய பரமாகமத்தில் விளங்கக்காண்பாய் ! ஆதலால் புண்ணிய சரவணத்தில் மூழ்கி நீடார வேண்டா!. நீ செல்வாயாக. நாங்களும் நீண்ட வழியிலே மதுரை நோக்கிச் செல்வோம் என்றார்.

### 3.1.6. ஐயைக்கோட்டம் அடைதல்

வானில் செல்லும் ஞாயிறு வெம்மை செய்யத் தொடங்கிற்று . ஆதலால் தீமை மிக்க பாலை வழி இனி வெயிலில் சென்று கடத்தற்கு அரிது என உணர்ந்தனர் கோவலன், வளைந்த காதணியை அணிந்த கண்ணகி, கவுந்தியடிகள் ஆகியோர். மயக்கத்தைத் தரும் வழியையுடைய நிலப் பரப்பில் உள்ள குரவமும், வேன் கடம்பும், கோங்கும், வேங்கையும் தம்மிற் கலந்து பொலிவுடன் வளர்ந்திருந்த, சோலை சூழ்ந்து விளங்கிய ஓரிடத்தை நெருங்கினர். நெருங்கி, கடத்தற்கரிய வழிகளில் செல்வோரது வளத்தினையன்றி , மழை வளத்தினைப் பெறாத வில்லையுடைய மறவர், எமனை ஒத்த வலியுடன் வளைந்த வில்லைக் கையில் ஏந்திப் பகைவர் முனையிடத்துச் செல்ல, அவர்க்கு நல்ல வெற்றியைக் கொடுத்து

குறிப்புகள்

அதற்குக் கைம்மாறாக வீரத் தன்மைக்கு அடையாளமான அவிப்பலியாகிய கடனை எதிர் நோக்கும் நெற்றிக் கண்ணையுடைய குமரியும் , விண்ணோர் போற்றும் பாவையும் , குற்றமற்ற சிறப்பினையுடைய வான நாட்டையுடையவளுமான கொற்றவையின் கோயில் ஒன்று அங்கிருக்கக் கண்டு, அக்கோயிலின் ஒரு புறமாகச் சென்று தங்கினர்.

## 3.2. வேட்டுவ வரி (காதை -12)

### 3.2.1. காதைச்சுருக்கம்

கவுந்தியடிகள், கண்ணகி, கோவலன் மூவரும் ஐயை கோயிலின் ஒரு பக்கத்தே இளைப்பாறினர். அங்கே, சாலினி, தெய்வம் ஏறப்பெற்று ஆவேசம் கொண்டாள். கொற்றவைக்குச் செய்ய வேண்டிய செய்கடனை நிறைவேற்றுமாறு கூறினாள். தெய்வம் ஏறிய சாலினி கண்ணகியை அனைவர்க்கும் சுட்டிக் காட்டி, " ***இவளோ கொங்கச் செல்வி, குடமலையாட்டி, தென்தமிழ் நாடு செய்த தவக்கொழுந்து*** ” என அவளது எதிர்காலத் தெய்வநிலை குறித்து வியந்துரைத்தாள் . அது கேட்ட கண்ணகி , நாணமுற்றுக் கணவனின் புறத்தே ஒதுங்கி நின்றாள். வேட்டுவர்கள் கொற்றவையின் புகழ் கூறி வரிப் பாடல்களைப் பாடிக் கொண்டாடினர்.

### 3.2.2. தெய்வம் ஏறப் பெற்ற சாலினியின் முழக்கம்

ஞாயிற்றின் வெம்மையான கதிர்கள் கடுமையாகத் தாக்கும்போது வழிப் பயணத்தை மேற்கொண்டதால் மணமிகு கூந்தலையுடைய கண்ணகி பெருந்துன்பமுற்றாள். அவளது சிற்றடிகள் சிவந்தன; வருத்தம் தாளாது குமுறிச் செறிந்தாள். வழி நடைத் துன்பம் தொலையுமாறு மூவரும் ஐயை கோட்டத்தில், யாவரும் அறியாதவாறு ஒரு பக்கமாக இருந்தனர். அங்கே, அம்பினை வழங்கும் வில்லினை ஏந்திய பெரிய கைகளையுடைய மறவர் குடியிலே பிறந்த உரிமையால், பழங்கடனைத் தர முழங்கி ஆர்ப்பரிக்கும் சாலினி, தெய்வம் ஏறப் பெற்றாள். அவளது மெய்ம்மயிர்ச் சிலிர்த்தது. அவள் கைகளை எடுத்து உயர்த்தி, முள் வேலி இடப்பட்ட ஊரின் நடுவே எயினர் ஒருங்கு கூடிப் பகிர்ந்து உண்ணும் ஊர் மன்றத்தில் யாவரும் வியக்கும் வண்ணம் கால் பெயர்த்து ஆடினாள்! ” பழங்கடன் தராமையால், பகைவரது ஆரவாரம் மிக்க பெரிய ஊரில் ஆனிரைகள் திரண்டன! இங்கோ வலிய வில்லினையுடைய மறவர்களின் மன்றங்கள் பாழ்பட்டன! மறக்குடி மறவரும் வழிப்பறியால் வளம் சுரக்கப் பெறாது அறக்குடியினர் போலச் சினம் குறைந்து செருக்கு அடங்கினர்! கலையாகிய ஊர்தியையுடைய கொற்றவைக்கு நீங்கள் செய்கடனைத் தராவிட்டால், அவள் உங்கள் வில்லுக்கு வெற்றியைத் தரமாட்டாள்! வழிப்

*Self Instructional Material*

குறிப்புகள்

போவார் பொருளைப் பறித்து உண்ணும் மக்களே! நீங்கள் கள் குடித்து மகிழ்ந்து வாழும் வாழ்வை விரும்புவீராயின், கொற்றவைக்குரிய பலிக் கடனை அளிப்பீராக! ” என்று உரைத்தாள்.’ தம் தலையைத் தாமே அரிந்து கொற்றவைக்குப் பலியிட்டு இத்தனை என எண்ணிக் கொள்ளுமாறு செய்யும் அம்மறவர்கள் நோயால் செத்து எரிக்கப்பட்டு வறிதே இறக்காத குடியினர். அவர்கள், தம் தொல்குடியில் பிறந்த தெய்வம் ஏறப்பெற்ற அச்சாலினியின் குறுகிய சுருண்ட கூந்தலைச், சிறு வெள்ளைப் பாம்புக் குட்டி போலச் செய்த பொன் கயிற்றினால் நீண்ட சடை முடியாகச் சுற்றிக் கட்டினர். கட்டு வேலி சூழ்ந்த தோட்டப் பயிரை அழித்த பன்றியினது வளைந்த கொம்பினைப் பிடுங்கி, அதனைப் பிறைச் சந்திரன் என்னுமாறு சடைமுடியில் சாத்தினர். அஞ்சாமையுடைய வலிய புலியின் வாயைப் பிளந்து பெற்ற வெண் பற்களை ஒழுங்கான மாலையாகக் கோத்துப் புலிப்பல்தாலி என அவள் கழுத்தில் அணிந்தனர். வரிக் கோடுகளும் புள்ளிகளும் கலந்த புலித்தோல் ஆடையை அவளது இடையில் மேகலையாக உடுத்தினர். அன்புடன் வயிர வில்லை எடுத்து அவளது கையில் கொடுத்தனர். முறுக்குண்ட கொம்பையுடைய ஆண் மான் மீது அவளை அமரச் செய்தனர். பாவையும் கிளியும், சிறுமயிரையுடைய அழகிய சிறகினைக் கொண்ட காட்டுக் கோழியும், நீலநிற மயிலும், பந்தும், கிழங்கும் ஆகிய இவற்றைக் கொடுத்து அவளைக் கொற்றவையாகப் புனைந்து துதித்தனர். வண்ணக் குழம்பும், சுண்ணப்பொடியும் குளிர்ந்த மணமுள்ள சந்தனமும், அவரையும், துவரையும், எள்ளுருண்டையும், நிணத்துடன் கூடிய சோறும், மலர்களும், புகையும், விரும்பிய மணப் பொருள்களும் ஆகிய இவற்றைப் பணிப் பெண்கள் ஏந்தி அவள் பின்னே வருமாறு செய்தனர். வழிப்பறிக்கும்போது கொட்டும் பறையும், கொம்பும், புல்லாங்குழலும் , பெருமை மிக்க மணியும் ஆகிய இவை தம்மிற் கூடி ஒருசேர ஒலிக்குமாறு அச்சாலினியாகிய கொற்றவை முன்னே நிறுத்தினர். பின் அணங்கேறிய அச்சாலினி தான் தந்த வெற்றியின் விலையாகிய பலியினை உண்ணும் இடமாகிய மலர் விரிந்த பலிபீடத்தை முதலில் வணங்கிப் பின்னர், விரைந்த செலவினையுடைய கலையை ஊர்தியாக உடைய கொற்றவையைக் கையால் தொழுது நாவால் போற்றினாள்.

**3.2.3. தெய்வம் போற்றிய தெய்வக் கண்ணகி**

*இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி*
*தென்றமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து*
*ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய*
*திருமா மணியெனத் தெய்வமுற் றுரைப்ப*

தெய்வம் ஏறப் பெற்ற அச்சாலினி, தம்முள் ஒத்த தாமரை மலர்போலும் சிற்றடிகள் வருந்த மிகவும் துன்புற்றுத் தன் கணவனுடன் அங்கு ஒருபால் தங்கியிருந்த மணம் பொருந்திய கூந்தலையுடைய கண்ணகியை எயினர்க்குச் சுட்டிக் காட்டினாள், மேலும், ”இவள் ,கொங்கு நாட்டின் விலை மதிப்பற்ற செல்வி; குடமலை நாட்டை ஆள்பவள்; தென் தமிழ்ப் பாவை; மேலோர் செய்த தவக் கொழுந்து; இவ்வுலகிற்கெல்லாம் ஒப்பற்ற மாமணி போன்று மிக்க ஒளியைத் தரும் தெய்வ மகள்! ” என்று மெய்மறந்து போற்றித் துதித்தாள்.

குறிப்புகள்

**3.2.4. கண்ணகியின் அடக்கமுடைமை**

சாலினியின் புகழுரையைக் கேட்ட கண்ணகி, “இம் மூதறிவுடையாள் ஏதோ மயக்கத்தால் இவ்வாறு கூறினாள் போலும்!” என்று கருதிப் பெறுதற்கரிய கணவனான கோவலனின் பின்னால் ஒடுங்கி, புதியதொரு புன்னகை பூத்து நாணி நின்றாள்.

**3.3. புறஞ்சேரி இறுத்த காதை (காதை -13)**

**3.3.1. காதைச்சுருக்கம்**

கண்ணகியின் உடல் சோர்வினை உணர்ந்த கோவலன், “ பாண்டியனின் செங்கோல் சிறப்பால் நாட்டில் யாதொரு இடையூறும் நேராது. ஆதலால் இரவில் செல்லலாம் “ எனக் கூறினான். அவ்வாறே மூவரும் நடந்து சென்றனர். முள்வேலி சூழ்ந்த காவல் மிக்க இடத்தே இருவரையும் இருக்கச் செய்து, கோவலன் தனியே நீர்த்துறையை நாடிச் சென்றான். அங்கே கோசிகனைச் சந்தித்தான். கோவலனைப் பிரிந்த புகார் நகரம் உற்ற துயர் பற்றிக் கோசிகன் விரிவாகக் கூறி, மாதவியின் கடிதத்தை அவனிடம் அளித்தான். கடிதத்தின் மேன்மையை உணர்த்த கோவலன், “அவள் செய்த குற்றம் யாதும் இல்லை! இது என் தீது“ என நொந்து தன்னையே பழித்துக் கொண்டான். அந்தச் சிறந்த கடிதத்தைப் பெற்றோரிடம் சேர்த்து அவர் தம் துன்பம் களையுமாறு கோசிகனை வேண்டிக் கொண்டான். பின், பாணரொடு சேர்ந்து யாழ் இசைத்தான், மதுரை எவ்வளவு தூரம் இருக்கிறது“ என அப்பாணரிடம் வினவ, அவர்கள், “ அண்மைத்தே“ என மொழிந்தனர் . பிறகு கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளும் ஒரு கட்டு மரத்தில் ஏறி வையையாற்றைக் கடந்து, தென்கரையை அடைந்து, மதுரையின் மதிற்புறத்துப் புறஞ்சேரியில் தங்கினர்.

**3.3.2. மதுரை நோக்கிய மூவரின் பயணம்**

விடிய விடிய நடந்தனர். கோவலன் வழிநடைப் பயணத்தால் சோர்ந்து களைத்திருந்த கண்ணகியை நோக்கி, ”இந்த வழியில் வரிப் புலிகள் உறுமும்; பேராந்தைகள் அலறும்; கரடிகள் முழங்கும்; இவற்றைக்

குறிப்புகள்

கேட்டு நீ அஞ்சாது என்னுடன் இணைந்து வருக ! ” என்று கூறி, வளையல் அணிந்த அவளது கையைத் தனது தோள்மீது சார்த்திக் கொண்டான். வழி நடை வருத்தம் தீரும் வண்ணம் பாவ மொழியின் நீங்கிய குற்றமற்ற கேள்வியினையுடைய கவுந்தியடிகளின் அறவுரைகளைக் கேட்டவாறே கடத்தற்கரிய வழியைக் கடந்தனர். அப்போது முதுவேனில் வெம்மை நிலைபெற்ற மூங்கில் எரிந்து சரிந்து கிடக்கும் காட்டிடத்தே காட்டுக் கோழிகள் சூரியன் வருகையை அறிவித்தன. வரிப்பாட்டைப்பாடும் இயல்பினராய், மறைநூல் தன்மையிலிருந்து மாறுபட்ட இழுக்கினராய், முப்புரி நூல் அணிந்து வாழ்வோரின் ஓர் ஊரை அவர்கள் அடைந்தனர். அந்த ஊரின் உள்ளே செல்லாது ஒரு புறத்தே தங்கினர். கோவலன், கவுந்தியடிகளுடனே கண்ணகியை ஒரு பாதுகாவலான இடத்தே இருக்கச் செய்து, முள்வேலியைக் கடந்து சந்தி முதலான காலை நியமங்களை முடிப்பதற்காக நீண்ட வழியில் உள்ள நீர் நிலையை நாடிச் சென்றான்.

### 3.3.3. கோசிகன் சந்திப்பு

அவன் காட்டு வழியிலே கண்ணகியை அழைத்து வந்தமைக்குப் பெரிதும் வருந்தி உலைத் துருத்தி போலப் பெருமூச்செறிந்தான். உடல் தளர்ந்து உள்ளம் சோர்ந்து மேனி நிறம் மாறுபட்டிருந்ததால், அவனைத் தேடி வந்த கோசிகன் என்னும் பிரமச்சாரி இவன் கோவலன் தானா“ என ஐயுற்றான். தனது ஐயத்தைப் போக்கிக் கொள்வதற்காக அருகில் இருந்த “ மாதவி “ என்ற பெயருடைய குருக்கத்திக்கொடி படர்ந்த ஒரு பந்தரைச் சார்ந்து, “ மாதவியே! தன்னை விட்டுக் கோவலன் பிரிந்ததால் மிக்க துன்பத்தை அடைந்த நெய்தல் மலர் போன்ற கண்களையுடைய மாதவியைப் போல நீயும் பொறுத்தற்கரிய இம்முதுவேனிற் காலத்து வெயிற்கு ஆற்றாது வாடி மலர்களைக் களைந்து துன்புற்றாயோ?” கோசிகனின் கூற்றைச் செவியேற்ற கோவலன், “ஐயனே! நீர் இங்குக் கூறியதன் பொருள் என்ன? என வினவினான். அவ்வளவில் அவளது ஐயம் நீங்கியது “தீதில்லாது இருக்கின்றான்! நான் கண்டு பிடித்து விட்டேன், இவன் கோவலன்தான்“ என மகிழ்ச்சியுடன் அவனை நெருங்கிக் கூறலுற்றான்.

### 3.3.4. கோவலனைப் பிரிந்த புகாரின் நிலை

கோவலனே! நின் தந்தையான பெருஞ்செல்வன் மாசாத்துவானும், அவனுடைய பெருமனைக் கிழத்தியான நின் தாயும் அரிய மாணிக்கத்தை இழந்த நாகம் போல ஒடுங்கினர்; நினது உறவினர் இனிய உயிரை இழந்த உடலைப் போலத் துன்பக் கடலில் ஆழ்ந்தனர். நின் தந்தை, “எல்லாத் திசைகளிலும் சென்று கோவலனைத் தேடிக் கொண்டு வருக!“ என ஏவலர்களை அனுப்பினான்; அந்த ஏவலர்கள் உன்னைத் தேடிப் பல

திசைகளுக்கும் சென்றுள்ளனர். "தந்தை ஏவலைக் கேட்டு அதன்படி நடப்பதே சிறந்தது, அவன் பணியில்லாது அரசாட்சியே கிடைப்பினும் தஞ்சம் என்று அதனைப் பற்றிப் பாண்டும் கிடப்பது தீமையேயாகும்!" என்று கருதித் தந்தையின் கட்டளைப்படி கானகம் சென்ற இராமனைப் பிரிந்து துன்புற்ற அயோத்தி போல நும் பிரிவினால் புகழ் பெற்ற மூதூரான புகார் துன்புறுகிறது!"

### 3.3.5. மாதவியின் இரண்டாம் மடல்

குறிப்புகள்

கோவலனே! இன்னொன்று கேள், நீ ஓலையை வாங்க மறுத்துக் கூறியவற்றை யெல்லாம் வயந்தமாலை மூலம் கேட்ட மாதவி பசந்த மேனியளாய் பலப்பல நினைந்து ஆற்றாளாய், எழுநிலை மாடத்து நடுநிலையில் அமைந்த படுக்கையில் வீழ்ந்து துன்புறுகின்றனள். அவள் அவ்வாறு நின்னை நினைந்து நினைந்து உற்ற துயரத்தை நான் கேள்வியுற்றுப் பெரிதும் வருந்தி ஆறுதல் கூறச் சென்றேன் . மிக்க துன்பமுற்ற மாதவி, " நின் இணையடி தொழுதேன் : எனக்கு வந்த துன்பத்தினைப் போக்குவாய் ! " என்று கூறி , மலர் போன்ற தன் கையினால் ஒரு முடங்கலை எழுதி முத்திரையிட்டு என்னிடம் தந்து, " என் கண்மணி போன்றவனுக்கு இதைக் காட்டுக! " என்று என்னிடம் தந்தாள். இதனை ஏந்திப் பல இடங்களிலும் அலைந்து திரிந்து இன்று இங்கு நும்மைக் கண்டேன்! " என்று எல்லாவற்றையும் குற்றமின்றி எடுத்துக் கூறி காதல் உள்ளத்தால் நெஞ்சழிந்து வருந்தும் அழகிய கூந்தலையுடைய மாதவி தந்த முடங்கலைக் கோசிகன், கோவலனின் மலர்க்கையிலே கொடுத்தான்.

### 3.3.6. மடல் சிறப்பு

மாதவி தன் கூந்தலால் அம்முடங்கலில் மண் இலச்சினை பொறித்திருந்தாளாதலின், அம்முடங்கல், அவன் அவளுடன் வாழ்ந்த காலத்தில் பூசிய புழுகு நெய்யின் மணத்தை உணர்த்தியது. எனவே அதனைக் கையினின்றும் விடுவிக்காதவனாய், சிறிது பொழுது தாழ்த்துப் பின்னர் அதைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினான். "அடிகளே! உங்கள் திருவடிகளைத் தொழுகிறேன்; தெளிவில்லாத என் புன்மொழிகளை மனத்தில் கொள்ள வேண்டும்: தாங்கள் தங்களுடைய தாய் தந்தை ஆகிய இரு முதுகுரவர்க்குச் செய்ய வேண்டிய பணிவிடையைச் செய்யாது விட்டீர்கள்! அன்றியும், உயர் குடியிலே பிறந்த கண்ணகியுடன் இரவிலே இந்நகரை விட்டு நீங்கிச் சென்றீர்கள்" இவற்றுக்கெல்லாம் யான் செய்த குற்றம் யாது என அறிய இயலாமல் என் உள்ளம் வருந்துகிறது. இதைத் தாங்கள் போக்க வேண்டும். குற்றம் நீங்கிய நற்காட்சிகளையுடைய மேன்மையுடையீர்! நம் புகழுக்குக் குறையுண்டாகாமல் காப்பீராக! " என்று

குறிப்புகள்

அவள் எழுதிய புகழ் மொழிகளின் பொருளை நன்கு உணர்ந்த கோவலன், அவளிடம் குற்றம் எதுவும் இல்லை எனத் தெளிந்து, “ இது என் குற்றம்“ என்றான். முடங்கலின் சிறப்பினை அறிந்த கோவலன், இம்மண் முத்திரை இடப்பட்ட முடங்கல் என்னைப் பெற்றெடுத்த தந்தைக்கும் (அடிகளே! உங்கள் திருவடிகளைத் தொழுகிறேன்; தெளிவில்லாத என் புன் மொழிகளை மனத்தில் ஏற்றருள் வேண்டும்! நான் தங்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைக் கைவிட்டதன்றி, இந்த உயர் குடியில் பிறந்த கண்ணகியுடன், தங்களை விட்டு நீங்கி இரவில் பிரிந்ததற்குக் காரணமான என் பிழையைப் பொறுத்து, எங்களது பிரிவால் நேரும் உள்ளத் தளர்ச்சியைப் போக்குதல் வேண்டும்! குற்றம் தீர்ந்த மெய்க்காட்சியுடைய மேன்மையீர்; போற்றி என) அழகாகப் பொருந்தும் தன்மையில் உள்ளது! ஆதலின், “கோசிகனே! குற்றமில்லாத என் இரு முதுகுரவரின் மலர் அனைய திருவடிகளை வணங்கினேன்! எனக் கூறி என் தந்தைக்கு இதனைக் காட்டுவாயாக!“ என அம் முடங்கலை அவனிடம் கொடுத்து, எமது பிரிவால் அவர்க்குண்டான நடுக்கத்தினைப் போக்கி, அவர்தம் நல்ல உள்ளத்தில் பொருந்திய துயரையும் களைவதற்கு விரைந்து செல்வாயாக!” என்று கூறி அவனைப் புகாருக்குத் திரும்ப அனுப்பினான். கோசிகமாணியை விட்டுப் பிரிந்த கோவலன் மாசில்லாத கற்பினையுடைய கண்ணகியும் கவுந்தியடிகளும் இருந்த இடத்தை அடைந்தான்.

### 3.3.7. மதுரையை அடைதல்

கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளும் முதல் நாள் போலவே மற்ற நாட்களிலும் இரவில் நடந்து சென்று வைகறைப் பொழுதில் மதுரையை நெருங்கினர். அப்போது அழித்தல் தொழிலையுடைய சிவபெருமான் கோயிலினின்றும், புகழ் மிக்க பாண்டியனின் அரண்மனையினின்றும் ஒலிக்கும் காலை முரசின் ஒலியும், வேதியர் நான்கு வேதங்களை ஓதும் ஒலியும், பெருந்தவ முனிவர்கள் காலையில் ஓதும் மந்திரத்தால் உண்டான ஒலியும், மன்னனால் சிறப்பிக்கப் பெற்ற வாள் வீரர் தம் வீரத்திற்கு அடையாளமாக நாட்காலையில் எழுப்பிய முரசு முதலியவற்றின் ஒலியும் , போரில் பகைவரை வென்று கொண்டு வந்த போர் யானைகளின் முழக்கமும், காட்டில் பிடித்துக் கொண்டு வரப்பட்ட யானைகளின் முழக்கமும், குதிரைகளின் கலைப்பொலியும் பொருநர் வைகறையில் எழுப்பும் கிணைப்பறையொலியும் ஆகிய இவ்வொலிகள் கருங்கடலைப் போல ஒலித்து வரவேற்க அதனால் அவர்கள் முன்பு தாம் அடைந்த துன்பங்கள் எல்லாம் நீங்கப் பெற்றனர் ,

குறிப்புகள்

### 3.3.8. வையை என்னும் பொய்யாக் குலக்கொடி

*தையற் குறுவது தானறிந் தனள்போல்*
*புண்ணிய நறுமல ராடை போர்த்துக்*
*கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கிப்*
*புனல்யா றன்றிது பூம்புனல் யாறென*

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகிய மூவரும் வையையாற்றினது வடகரையை அடைந்தனர். குரா மரமும், மகிழ மரமும், கோங்க மரமும், வேங்கை மரமும், வெண் கடம்ப மரமும், சுரபுன்னை மரமும், மஞ்சாடி மரமும், மருத மரமும், செருந்தி மரமும் ஆகிய இவை பாதிரி மரத்துடன் மலர்ந்து வையையென்னும் நங்கைக்குப் பூந்துகிலாக விளங்கும்; குருக்கத்தியும், செம்முல்லையும், வளவிய கொடியையுடைய முசுண்டையும், விரிந்த பூக்களையுடைய மோசி மல்லியும், வெள்ளைக் கூதாளமும், வெட்பாலையும், மூங்கிலும், கொழுங்கொடி பகன்றையும், பிடவமும், இருவாட்சியும் ஆகிய பல மலரும் பின்னிப் படர்ந்து அந்நங்கையின் மேகலையாகத் திகழும்; அகன்று உயர்ந்த கரையே அந் நங்கையின் அல்குலாகும்; ஆற்றிடைக் குறைக்கண் அடிப்பக்கம் அகன்று , பல மலர்களால் உயர்ச்சி பெற்று ஒன்றற்கொன்று ஒத்து உயர்ந்து குவிந்து விளங்கும் மணல் குன்றுகள் அந் நங்கையின் கொங்கைகள் ஆகும்; கரையிலே உதிர்ந்து கிடக்கும் முருக்க மலர்கள் அந்நங்கையின் சிவந்த வாய் ஆகும்: அருவி நீருடன் வந்த முல்லை மலர்கள் அந் நங்கையின் பற்கள் அகும்; குறுக்கும் நெடுக்குமாக ஓடித்திரியும் கயல் மீன்கள் அந்நங்கையின் நீண்ட கண்கள் ஆகும்: மணம் கமழும் மலர்கள் நீங்கப் பெறாத கருமணல் அந் நங்கையின் கருங்கூந்தல் ஆகும் ; இத்தகு அழகு நலம் வாய்ந்த இவள், பல்வகைப் பொருள்களை விளைவித்து, உலக உயிர்களை வளர்க்கும் அருள் உடையவள்; புலவர் நாவிலே பொருந்திய திருமகள்; வையை ஆறு என்று கூறப்படும் வளம் பொய்யாத பாண்டியர் குலக் கொடியான இவள் கண்ணகிக்கு நிகழவிருக்கும் துன்பத்தை முன்னரே அறிந்தவளைப் போல, புண்ணிய நறுமலர்களால் ஆன ஆடையால் உடல் முழுதும் போர்த்து, தன் கண்களிலிருந்து பெருகி வரும் நீரை மற்றவர் காணாதவாறு உள்ளடக்கித் தோன்றினாள்.

### 3.3.9. இது நீர் ஆறு அன்று; பூவாறு!

“இந்த ஆறு நீர் அறு அன்று : பூவாறு! “ என்று புகழ்ந்து, அன்னம் போன்ற நடையுடைய கண்ணகியும் , கோவலனும் வையையைத் தொழுது போற்றினர் . பின் அவர்கள் அரிய துறையிலே செலுத்தும் குதிரை முக ஒடம், யானை முக ஓடம், சிங்க முக ஓடம் ஆகியவற்றில் ஏறிப் பலரும் செல்லும் பெரிய துறைப்பக்கத்தே செல்லாது, அங்குள்ள

சிறிய துறையில் கவுந்தியடிகளுடன் ஒரு மரப்புணையில் ஏறித் தேன் சிந்தும் மலர்கள் நிறைந்த சோலைகளுடன் கூடிய தென்கரையை அடைந்தனர்.

**3.3.10. வராதீர்! வராதீர் !- வழி மறித்த நெடுங்கொடி**

*போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி*
*வாரலென் பனபோல் மறித்துக்கை காட்ட*

"வானவர் உறையும் மதுரை நரை வலம் வந்தால் மிகவும் நன்மையுண்டாகும்" என்று கருதி, அழித்தற்கரிய காவற்காடு சூழ்ந்த அகழியைச் சுற்றிச் சென்றனர். அப்போது, அகழியில் மலர்ந்துள்ள குவளை மலரும், அல்லி மலரும், தாமரை மலரும் ஆகிய இவை, கண்ணகிக்கும் கோவலனுக்கும் நிகழப் போகும் துன்பத்தை முன்னரே அறிந்து கொண்டன போல, வண்டுகள் தம்மிடம் இருந்து பாடும் ஒலியே அழுகை ஒலி போல் விளங்கக் கண்ணீரைச் சொரிந்தன; தாள்கள் நடுங்கின; காற்றால் அசைந்தன. பகைவரை வென்றதற்கு அறிகுறியாக அரிய மதிலின்மீது கட்டப்பட்டுள்ள கொடிகள், கோவலன் , கண்ணகியரைப் பார்த்து, " இந்நகருக்கு நீங்கள் வரவேண்டா" என்று தம் கையால் மறித்துக் காட்டுவன போல அசைத்து பறந்து கொண்டிருந்தன ! ' பறவைகள் அழகு செய்யும் வயல்களும் சோலைகளும் பொருந்தப் பெற்று, மிக்க நீரையுடைய ஓடைகளும் தோட்டங்களும், விரிந்த நீரையுடைய ஏரிகளும், குலை குலையாய்த் தொங்கும் காய்களையுடைய தென்னையும், வாழையும், கமுகும், இரண்டு மூங்கிலால் இடப்பட்ட பந்தரும் கொண்டு விளங்கும் இருப்பிடத்தையுடைய , அறத்தினையே விரும்பும் துறவிகள் அன்றிப் பிறர் சென்று தங்காத நகரின் புறஞ்சேரியினை மூவரும் விரும்பிச் சென்றடைந்தனர்.

**3.4. ஊர்காண் காதை (காதை -14)**

**3.4.1. காதைச்சுருக்கம்**

சோலைகளிலும் வயல்களிலும் நீர்நிலைகளிலும் பறவைகள் ஒலி எழுப்பின. ஞாயிறு கீழ்த்திசை உதித்தான். கோயில்களில் முரசுகள் ஒலித்தன. கோவலன் கவுந்தியடிகளைத் தொழுது தனது மனத் துயரை எடுத்துரைத்தான்; கண்ணகிக்கு நேர்ந்த துன்பத்துக்காகப் பெரிதும் வருந்தினான், உள்ளம் நொந்து கிடந்த அவனுக்குச் சிறந்த முறையில் ஆறுதல் வழங்கினார் கவுந்தியடிகள், கோவலன் தான் மதுரை சென்று திரும்பி வரும்வரை கண்ணகியை அடிகளின் பாதுகாப்பில் இருக்கச் செய்து, கூடல் மாநகரின் உள்ளே சென்று, பல்வேறு காட்சிகளைக் கண்டான். பல்வேறு கடைத் தெருக்களையும் கண்டான்; பின் புறஞ்சேரிக்குத் திரும்பி வந்தான்.

### 3.4.2. மதுரையின் அமைப்பும் சிறப்பும் - அரச வீதி

மூடு வண்டியும், பல்லக்கும், மணிகள் பதித்த கால்களையுடைய கட்டிலும், விளையாட்டுப் பொழிலில் உறுதுணையாயிருந்து மகிழ்தற்குரிய சிறப்பும், சாமரையாகிய கவரியும், பொன்னாலான வெற்றிலைப் பெட்டியும், கூர் முனை வாளும் தம் அரசன் கொடுக்க, அவ்வாறு பெற்ற செல்வம் எப்போதும் மாறாத வாழ்க்கையுடையவராக மகளிர் புதிய மணம் பொருந்தியிருப்பர்; அம் மகளிர், ஏவல் பெண்டிர் பொன் கிண்ணங்களில் ஏந்தித் தரும் இனிய கள்ளின் தெளிவைப் பருகி மயங்குவர்; அம் மயக்கத்தால், புள்ளிகளையுடைய பாடும் வண்டுகளை, அவை மொய்க்காத இடத்திலிருந்தும் ஒட்டுவர்; இலவம் பூவின் இதழ் போலும் சிவந்த வாய் இதழ்களிலே இளமுத்துப் போலும் பற்கள் தோன்ற முறுவலிப்பர்; நீலோற்பவம் போன்ற கண்ணினையுடைய அம்மகளிர் ஊடல் காலத்தில் நா காவாது கூறிய சொற்கள், நெஞ்சு முதலான எண்வகை இடத்தும் பொருந்தாத நகை மொழியாகும்; அழகிய செங்கழுநீர் மலர்கள் அரும்பை நெகிழ்த்து மலர்ந்தாற் போலும் சிவந்த கயலினையொத்த அவர்களது நீண்ட கண்கள், கடைச் சிவப்பாகப் பூசலிடும்; அவர்தம் கொலைத் தொழிலில் வல்ல வில் போன்ற புருவத்தின் அழகிய கோடிகள் உள் வளையும் , அவர்தம் திலகம் அணிந்த சிறிய நெற்றியிலே வியர்வை அரும்பும், இத்தகைய அம் மகளிர் மேற்கொண்ட அவ்வுடல் தீரும் சமயத்தை எதிர்பார்த்து, வளம் மிக்க குடிப்பிறந்த செல்வரோடு நாடு காக்கும் அரசரும் விரும்பும் காமக் கிழத்தியர் வாழும் வீதிகளையும் கோவலன் சென்று கண்டான்.

### 3.4.3. எண்ணெண் கலைஞர் வீதி

சுட்ட ஓடுகளால் வேயாது பொன் தகடுகளால் வேயப்பட்டனவும், குற்றம் நீங்கிய சிறப்பையுடையனவும், முடி சூடிய அரசரும் பிறர் அறியாது தங்கியிருந்தற்கேற்ற தன்மை யுடையனவுமான காவல்மிக்க மனைகளில் வாழ்பவர் அரங்கக் கூத்தியர். அவர்கள் வேத்தியலும் பொதுவியலுமாகிய இருவகைக் கூத்தின் இயல்புகளை அறிந்து, அவை மயங்கா வண்ணம் ஆடிப்பாடும் இயல்பினர்; தாளங்களும், தாளங்களின் வழிவரும் ஏழு வகைத் தூக்குகளும், இவற்றுடன் ஒருங்கிணைந்து இசைக்கும் தோற்கருவிகளின் கூறுபாடுகளையும் நன்கு அறிந்தவர்; நால்வகை மரபினையுடைய அவினய நிலத்திலும், குரல் முதலாகிய ஏழு நிலத்தினும் பொருந்திய ஆடல்பாடல்களை நிகழ்த்தும் இயல்பினர் . இத்தகைய மாறாத சிறப்பினையுடைய “தலைக்கோல் “ பட்டம் பெற்ற அரிவையரும், பின்பாட்டுப் பாடும் தோரிய மடந்தையரும், தலைப்பாட்டுப் பாடும் கூத்தியரும், இடைப்பாட்டுப் பாடும் கூத்தியரும் என்னும் நால்வேறு



குறிப்புகள்

குறிப்புகள்

வகையினரோடும் கூடி , யாவரும் விரும்பத்தக்க தன்மையொடு ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பசும் பொன்னை நாள்தோறும் முட்டுப்பாடின்றிப் பெறும் தன்மையில் வழுவாத, தாக்கி வருத்தும் அணங்கு போலும் பேரழகுடைய கணிகையர் பலர் அங்கிருந்தனர். அவர்தம் கண் வலைப்பட்டுப் பெறுதற்கரிய தம் அறிவு கெட்டொழிய, தவநெறியிலே நின்றோராயினும், மலர்தோறும் சென்று தேனைப் பருகும் வண்டு போல, அவர்தம் காமப் புன்சிரிப்புக்காக ஏங்கிக் கிடக்கும் இளையோராயினும் காம இன்பத்தை இதுகாறும் அறியாத புதியோராயினும் நாள்தோறும் அவருடன் கூடி மயங்கி இன்துயில் கொள்வர். பண்களையும் அவற்றின் திறங்களையும் பழித்த பின் சொல்லினர் என்னுமாறு அறுபத்து நான்கு கலைகளிலும் வல்ல அம் மகளிர் வாழும் இரு பெரும் விதிகளையும் கோவலன் கண்டான்.

### 3.4.4. நவரத்தினக் கடைவீதி

இருளைத் தெளிய வைத்தாற்போல் விளங்கும் நீலமணி வகைகளும் மஞ்சளும் சிவப்பும் கலந்தாற் போன்ற கோமேதக வகைகளும் ஒன்றுபட்ட பிறப்பினையும் வேறுபட்ட ஐந்து வகை அழகினையும் உடையனவாகி ஒளி விளங்கும் நன்மை பொருந்திய மாணிக்கம், புருடராகம், நீலம் , கோமேதகம், வைடூரியம் என்னும் மணிகளும், இவ்வைந்திற்கும் மூலம் பளிங்கு காற்று மண் கல் நீர் என்பவற்றால் உண்டாகுமென்று ஆராய்ந்து உணர்ந்த மக்கள் தொகையால் சிறந்தோங்கிய, பகைவர் துன்புறுத்தலையறியாத பயன் மிக்க நவரத்தின வீதியையும் கோவலன் கண்டான்.

### 3.4.5. பொன்மிகு கடைவீதி

சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம , சாம்பூநதம் என நான்கு சாதியாகச் சிறந்தோங்கும் இயல்பினையுடைய பொன்னின் வேற்றுமையைப் பகுத்தறியும் பொன் வாணிகர், வாங்குவோர்“ இது எங்கே இருக்கிறது ? ” என ஐயுறும் துன்பத்தைப் போக்க “ இது இங்கே இருக்கிறது ? “ எனக் கொடிகட்டி அறிவிக்கும் நன்மை பொருந்திய பொன் கடை வீதியையும் கோவலன் கண்டான்.

### 3.4.6. துணிக்கடை வீதி

பருத்தி நூலாலும் எலி மயிராலும் பட்டு நூலாலும் இழை சென்ற இடம் தெரியாதவாறு மிகவும் நுணுக்கமாக நெய்யப்பட்டுப் பலநூறு அடுக்குகளாக அடுக்கி வைக்கப்பட்ட நறிய புடவைகள் நெருங்கியிருக்கும் துணிக் கடை வீதியையும் கோவலன் கண்டான் .

### 3.4.7. கூலம் குவித்த கூல வீதி

நிறுக்கும் துலாக் கோலையுடையவராய்ப் பறை என்னும் அளவு கருவியை யுடையவராய், அளக்கும் மரக்காலையுடையவராய்த் தரகு செய்வோர் எங்கும் திரியுமாறு, காலம் அல்லாக் காலத்திலும் பெரிய மிளகு முட்டைகளுடன் பல கூலங்களும் குவித்து வைத்திருக்கும் கூல வீதியையும் கோவலன் கண்டான்.

### 3.4.8. கோவலன் மதுரையைக் கண்டு திரும்புதல்

பகுதி வேறுபாடு தெரிந்த அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நால்வகையினர் வாழும் நால் வேறாகிய தெருக்களிலும், முச்சந்தியிலும், நாற்சந்தியிலும் முடுக்கு வழிகளிலும் குறுக்குத் தெருக்களிலும் வானின் நடுவிலே வெம்மையுடன் தோன்றும் ஞாயிற்றின் கதிர்கள் நுழையாதவாறு சிறிய கொடிகளும், பெரிய கொடிகளும் நெருங்கிப் பந்தல் இட்டதுபோல் விளங்க, அவற்றின் நிழலிலே திரிந்து சென்று, தென்னவன் திருநகர் வளம் கண்டு மகிழ்ந்த கோவலன், கொடிகளையுடைய மதிற்புறத்தே மீண்டும் வந்தான்.

## 3.5. அடைக்கலக் காதை (காதை -15)

### 3.5.1. காதைச்சுருக்கம்

மதுரையை ஒருவாறு சுற்றிப் பார்த்து மீண்டு வந்த கோவலன், அம்மாநகரின் சிறப்பினையும் பாண்டியனின் மேன்மையினையும் கவுந்தியடிகளிடம் கூறும்போது, மாடல மறையோன் அங்கு வந்து சேர்ந்தான். அவன் கோவலனைக் கண்டு வியந்தான். புகார் நகரில் கோவலன் வாழ்ந்த கொடை வாழ்க்கை, வீர வாழ்க்கை ஆகியவற்றை நான்மறையாளன் பெரிதும் பாராட்டினான். ”இந்தப் பிறவியில் நீ செய்ததெல்லாம் நல்வினையே! அப்படியிருக்க கண்ணகியுடன் நீ இங்கு அடைந்தது பண்டை வினையின் பயன் போலும்! ” எனக் கூறினான். கோவலன் தான் கண்ட தீக்கனாவைக் கூறித் துன்பம் விரைவில் வரும் என உரைத்தான். அது கேட்ட மாடலனும் கவுந்தியடிகளும் “இப்புறஞ்சேரி இருக்கை இல்லறத்தார்க்கு உரியதன்று; துறவறத்தார்க்கே உரியது!” என மொழிந்து கோவலனையும் கண்ணகியையும் பாதுகாவலாக மதுரைக்கு உள்ளே செல்லுமாறு விரைவுபடுத்தினர். அவ்வேளையில், மாதரி என்னும் ஆயர்குல முதுமகள் ஒருத்தி, அங்கு வந்து கவுந்தியடிகளை வணங்கினாள். பின் அடிகள், பெருமை மிக்க கண்ணகியைப் பாதுகாக்குமாறு அம்மாதரியிடம் கூறிக் கற்பின் செல்வியை அவளிடம் ஒப்படைத்தார். மாதரி மகிழ்ந்து, கண்ணகியையும் கோவலனையும் அழைத்துப் புறம்சேரியின் நீங்கித் தனது இல்லத்தை அடைந்தாள்.

### 3.5.2. மாடலன் வருகை

குறிப்புகள்

ஆழமான நீரை வேலியாக உடைய தலைச்செங்கானம் என்னும் ஊரில் உள்ளவனும், நான்கு வேதங்களையும் நன்கு அறிந்தவனும், நன்மையை விரும்பும் கொள்கை உடையவனுமாகிய அந்தணர் தலைவனான மாடலன் என்பவன் அங்கு வந்து சேர்ந்தான். அவன், மிக்க தவத்தினையுடைய அகத்திய முனிவனின் பொதிய மலையை வலம் கொண்டு வணங்கி, குமரியின் பெரிய துறையில் முறைப்படி நீராடி தன் சுற்றத்தார் இருக்கும் இடத்திற்குத் திரும்பி வருபவன். வழிநடை வருத்தத்தால் நேர்ந்த துன்பம் ஒழிய, நிழல்மிக்க சோலையில் கவுந்தியடிகள் இருந்த பள்ளியை அடைந்தான். அங்கிருந்த கோவலன் அவனது திருவடிகளை வணங்கினான்.

### 3.5.3. மாடலன் கோவலனைப் புகழுதல்

*ஒல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து*
*நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ*

சொல்லாற்றல் மிக்க அந்த அந்தணன் கோவலனைச் சில வினவித் தானே பல உரைக்கலுற்றான் ” அரசன் அளித்த ( ஆயிரத்தெட்டுக் கழஞ்சுபொன் ) சிறப்பினால் மிக்க புகழடைந்த, மாந்தளிர் போலும் மேனியுடைய மாதவி மடந்தை, பச்சிளங் குழந்தையை ஈன்றெடுத்தாள். தூய்மையின்மையாகிய நாட்கள் கழிந்தபின், வயது முதிர்ந்த கணிகை மகளிர், “ மாதவியின் புதல்விக்கு நல்ல புகழ் வாய்ந்த பெயரை இடுவோம்! “ எனத் தாம் இன்புறுதற்கு ஏற்ற தகுதியான சொற்களைக் கூற, நீயும் அவற்றைக் கேட்டாய் கேட்டு நின் மனக் கருத்தைப் புலப்படுத்தினாய்; முன்னொரு நாள், இருள் நிறைந்த நள்ளிரவில் அலை மோதும் பெரிய கடலிலே எம் முன்னோன் ஒருவனின் மரக்கலம் உடைந்தது! ஆயினும் முற்பிறவியில் புண்ணிய தானம் புரிந்தவனாதலின் ( அவனுக்கு மரணம் நேரவில்லை ) கடலில் சில நாட்கள் நீந்திக் கொண்டேயிருந்தான். அப்போது ஒரு தெய்வம் தோன்றி “ இந்திரன் ஏவலால் இங்கு வாழ்கிறேன்; அவன் ஏவலால் நின் துயர் துடைக்க வந்தேன்; இனி நீ அஞ்ச வேண்டா; உனது சிறந்த தானப் பயன் உன்னைவிட்டு நீங்காது; ஆதலால் இக்கடல் துன்பத்தின் நீங்கித் துயரக் கடலினின்றும் கரையேறுவாயாக! ” என்று கூறி மந்திரத்தால் கரையை அடையச் செய்து அவன் துயர் நீக்கியது! “ அந்த எமது குல தெய்வமான, மணிமேகலையின் பெயரையே எம் மகளுக்கு இடுவீராக! “ என்று கூறினாய்! அவ்வாறே அழகு செய்யும் மேகலை அணிந்த ஆயிரம் கணிகையர் கூடி நின்று குழந்தைக்கு“ மணிமேகலை “எனப் பெயரிட்டு

வாழ்த்தினர். அப்பொழுது, மங்கல மடந்தையான மாதவியுடன் சேர்ந்து நீ உன் செங்கையினால் செம்பொன்னை மழை எனப் பொழிந்தாய்!"



### 3.5.4. கருணை மறவன் நீ

வீடு பெறுதற்கு ஏற்ற நல்ல நெறியாகிய ஞானத்தின் எல்லையாக விளங்கிய ஒருவன், தானம் பெறும் நோக்கத்தோடு தளர்ந்த நடையுடன் கோலையே காலாக ஊன்றி உன்னிடம் வரலானான்! கூனுடைய அந்த மறையோனை, பாகர்க்கும் அடங்காது எங்கும் எச்சரிக்கைப் பறை முழங்க வந்த மதயானை சினத்துடன் துதிக்கையால் பற்றிக் கொள்ள, அது கண்ட நீ விரைந்து வந்து அம் மறையவனை யானையினின்றும் காப்பாற்றினாய்! அதனுடன் அமையாது யானையின் துதிக்கையைத் தாவிப் பிடித்து, போர் செய்யும் வளைந்த வெள்ளிய தந்தங்களிலே அடங்கி, கரிய பெரிய குன்றின்மீது இருக்கும் வித்தியாதரனைப் போல் அதன் பிடரியிலே அமர்ந்து, மிக்க சினம் நீங்காத, மதமுடைய அந்த யானையை அடக்கிய கருணை மிகுந்த வீரன் நீ!". கருணை காரணமாக யானையைக் கொல்லவில்லை; மறம் காரணமாக யானையை அடக்கினான்; அதனால் கோவலன் கருணை மறவன் எனப்பட்டான்.

குறிப்புகள்

### 3.5.5. திருவருள் செல்வன் நீ

மாடலன் தொடர்ந்து பேசினான். " பிள்ளையைக் காத்த ஒரு கீரியைத் தன் மனைவி அடித்ததால் அது இறந்தது. அதன் காரணமாகப் பெரிதும் துன்புற்ற மறையோன் அவளை வெறுத்து ஒதுக்கி விட்டுக் கங்கை ஆட வடதிசை செல்லலுற்றான். மனைவி ஏங்கி அவன் பின் செல்ல, " உன் கையில் உணவு வாங்கி வாழும் வாழ்வு இனி முறையன்று; ஆதலால் வடமொழி வாசகம் எழுதிய இந்த நல்ல ஏட்டினை மக்கட் பிறப்பின் மாண்பினை - குறிக்கோளை உணர்வார் கையிலே தருக! " எனச் சொல்லிப் போனான்! அவள் கடைவீதிகளிலும் இல்லந்தோறும் அலைந்து திரிந்து, " எனது கொலைப் பாவம் தொலையத் தானம் செய்தற்குப் பொருள் அளித்துப் புண்ணியம் பெறுங்கள்! " என்று கூறிப் புலம்பினாள்! நீ அப் பார்ப்பனியை அழைத்து , நீ உற்ற துன்பம் யாது? இ∴தென்ன ஏடு? " என்று வினவ, அவள் தான் அடைந்த மிக்க துன்பத்தினைக் கூறி, பொருள் பொதிந்த இந்த ஏட்டினை வாங்கி, கைப்பொருள் தந்து என் கடுந்துயர் களைக! என்றாள். "அஞ்சாதே ! பொறுத்தற்கரிய உனது துயரினைப் போக்குவேன்! நின் நெஞ்சறு துயரம் நீக்குக! " என அவளுக்கு ஆறுதல் மொழிந்து, அப்போதே வேதம் ஓதும் அந்தணர் வகுத்த நெறிப்படி, கொலைத் தொழில் புரிந்தாளின் பாவம் தொலையுமாறு தானம் செய்து அளவது துன்பத்தினைத்தொலைத்தாய்!காடு சென்ற கணவனையும் தேடிக்

கொணர்ந்து இருவரையும் ஒன்று சேர்த்து, தளராத செல்வம் உடைமையினால் மிக்க செல்வத்தையும் அவர்களுக்கு அளித்து அவர்களை நன்னெறிப்படுத்திய தொலையாத செல்வம் உடையவன் நீ! ".

**3.5.6. இல்லோர் செம்மல் நீ**

குறிப்புகள்

மேலும் மாடலன் தொடர்ந்து பேசினான்: " பொருளுக்காக ஒருவன் பத்தினி ஒருத்தி பழி எய்துமாறு அவள் கணவனிடமே சென்று பல பொய் கூறினான். தவறு செய்பவரைப் பாசக்கயிற்றால் பற்றி அறைந்து உண்ணும் பூதம் பொய்க்கரி கூறியவனைப் பற்றியது! அவ்வாறு பூதத்திடம் அகப்பட்டவனுடைய தாய் படும் துன்பத்தினைக் கண்டு வருந்திய நீ அவளைக் கட்டிய பாசத்தினுள் விரைந்து சென்று, " என்னுயிரைப் பெற்றுக் கொண்டு இவனுயிரைத் தந்தருள்வாய் " என்று வேண்டினாய் ! ஆனால் அந்த நல்ல நெடும் பூதமோ , " கீழோனுடைய உயிருக்குப் பதிலாக நல்ல உயிரைக் கொண்டு மேலான கதியை இழக்கும் தன்மை என்னிடம் இல்லை! ஆதலால் உன் எண்ணத்தை விடுக" என்று கூறித் தாயின் கண்ணெதிரிலேயே அவனை அறைந்து கொன்றது! செயலற்ற அத்தாயோடு சென்று அவனுடைய சுற்றத்தாரையும் நெருங்கிய உறவினர்களையும் அன்பால் பிணித்த நினது சுற்றம் போலக் கருதி, அவர்தம் பசிப்பிணி போக்கி, அவர்களைப் பல்லாண்டு காத்த வறியோர் தலைவன் நீ! "

**3.5.7. இம்மைச் செய்தது நல்வினை** !

*இம்மைச் செய்தன யானறி நல்வினை*
*உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்தித்*

மேலும் மாடலன் தொடர்ந்து பேசினான். " அறிவால் முதிர்ந்த கோபாலனே! கோவலனே! இம்மையில் நீ செய்ததெல்லாம் நல்வினைகளே! அவற்றை நான் நன்கு அறிவேன்! ஆயினும் ஒப்பற்ற துன்பத்தால் நடை மெலிந்து மிக வருந்தி திருமகளைப் போன்ற இந்த மாணிக்கக் கொழுந்தான கண்ணகியுடன் வந்ததற்குக் காரணம் பண்டை வினை போலும் என்றான்.

**3.5.8. மாதரியிடம் அடைக்கலம் அளித்தல்**

*தவத்தோர் அடக்கலம் தான்சிறி தாயினும்*
*மிகப்பே ரின்பம் தருமது கேளாய்*

அறத்தையே விரும்பும் நெஞ்சினரான துறவிகள் நிறைந்த மதில்புறத்து மூதூரில் எழுந்தருளிய பூப்போலும் கண்ணுடைய இயக்கிக்குப் பால் சோறு படைத்துத் திரும்பி வந்து கொண்டிருந்த ஆயர்குல மூதாட்டியான மாதரி, கவுந்தியடிகளைக் கண்டு அடி தொழுது வணங்கினாள். அவளை வாழ்த்திய கவுந்தியடிகள், பசுக்களைப் பிணி

முதலிய வற்றினின்றும் காப்பாற்றி அந்தப் பசுக்கள் தரும் பயனை யாவர்க்கும் நல்கும் ஆயர் வாழ்க்கையில் சிறிதும் தீமை இல்லை; மேலும் இவள் குற்றமற்றவள்; முதியவள்; பண்புடையவள்; அருள் உள்ளம் கொண்டவள். ஆதலால் இம்மாதரியிடம் கண்ணகியை அடைக்கலமாகத் தருவதில் குற்றம் ஒன்றும் இல்லை! என்று எண்ணினார். பின் அவளை நோக்கி, ” மாதரி , கேட்பாயாக! இப்பெண்ணின் கணவனுடைய தந்தையின் பெயரைக் கேட்ட அளவில் அவன் குலத்தைச் சார்ந்தோர் , பெறற்கரிய பொருளைப் பெற்றவர் போலத் தமது விருந்தினராக எதிர் கொண்டு அழைத்து, இக்கரிய பெரிய கண்களையுடைய கண்ணகியுடன் அவள் கணவனையும் தமது காவல் மிக்க இல்லத்தில் தங்கச் செய்வர். அங்ஙனம் அச்செல்வமுடையார் இல்லத்தின்கண் செல்லும் வரை இடைக்குலப் பெண்ணாகிய உன்னிடம் இவளை அடைக்கலமாக அளிக்கின்றேன்! ” என்றார். மேலும் கவுந்தியடிகள் மாதரியை நோக்கி, “ இந்த அழகிய கண்ணகியை நன்னீராட்டி செங்கயல் போலும் நீண்ட கண்களில் மை எழுதி, தேன் பொருந்திய மென் கூந்தலிலே சில மலர்களைச் சூட்டி, தூய புடவையை உடுத்து, முன்னோர் கூறிய சிறப்பினையுடைய தோழியும், செவிலியும், தாயும் நீயேயாகிக் காப்பாற்றுவாயாக. இங்கு என்னுடன் வந்திருக்கும் இந்த இளங்கொடி போலும் நங்கைதன் வண்ணச் சீறடிகளை முன்னர் நிலமகளும் கண்டறியாள் . ஞாயிற்றின் கொடிய வெம்மையினால் துன்புற்ற தன் கணவன் பொருட்டு, கண்டார் நடுங்கத்தக்க துயரத்தை அடைந்து நாவும் உலருமாறு வாட்டமுற்று, தன் துயரத்தினைச் சிறிதும் உணராத தகுதி மிக்க பூங்கொடி இவள்! தம் கணவர்க்கு இனிய துணையாக விளங்கும் மகளிர்க்கு இன்றியமையாத கற்பாகிய கடமையை மேற்கொண்ட இத்தெய்வமே அல்லாது, வேறு பொலிவுடைய தெய்வம் ஒன்றினை யாம் காணவில்லை! ” பருவ மழை தவறாது; நிலவளமும் குன்றாது; பெரிய நிலப்பரப்பை ஆளும் வேந்தரின் வெற்றியும் சிதையாது: கற்புடைய மகளிர் வாழும் நாட்டில்! “ என்று சான்றோர் கூறும் தகுதி மிக்க நல்ல மொழியை நீ உணராயோ?” என்று கண்ணகியின் பெருமையினை உணர்த்தினார்.

குறிப்புகள்

## 3.6. கொலைக்களக் காதை (காதை -16)

### 3.6.1. காதைச்சுருக்கம்

மாதரி கண்ணகியைப் பாராட்டினாள், நீராட்டினாள்; தன் மகள் ஐயையை அவளுக்குப் பணி புரியச் செய்தாள்; உணவு செய்தற்குரிய பொருள்களை அளித்தாள். கண்ணகி சமைத்த உணவைக் கோவலன் இனிதாக உண்டான். அந்தக் காட்சியைக் கண்ட மாதரியும் ஐயையும்,” இவன் நம் குலக் கண்ணனே! இவள் நம் குல நப்பின்னையே!” எனக்

குறிப்புகள்

கூறிப் பெருமிதம் அடைந்தனர். கோவலன் தன்னால் கண்ணகிக்கு நேர்ந்த துன்பம் குறித்துப் பெரிதும் வருந்தினான்; அன்போடு அவளை அழைத்து உள்ளம் உருகப் பேசினான். என்னோடு போந்து ஈங்கு என் துயர் களைந்த பொன்னே! கொடியே! " எனப் புகழ்ந்தான்; புலம்பினான்! " சீறடிச் சிலம்பில் ஒன்றை விற்று வருவேன்; மயங்காதிரு " என்று கூறிச் சென்றவன், கடை வீதியில் பொற்கொல்லனைச் சந்தித்தான்; சிலம்பை விற்பது குறித்து வினவினான், " இச் சிலம்பு கோப்பெருந்தேவிக்கே பொருந்தக் கூடியது! " என்ற பொற்கொல்லன், தனது திருட்டைக் கோவலன் மீது சுமத்த விரைந்து செயல்பட்டான், தீவினைப் பயனைத் தந்தது! தன் மனைவியின் ஊடல் தீர்க்கச் சென்று கொண்டிருந்த பாண்டியனைக் கண்டு அவன் காலில் வீழ்ந்து வணங்கி, " பாண்டிமாதேவியின் சிலம்பைத் திருடிய கள்வன் அகப்பட்டான்; என் குடிலகத்தான்! " என்று கூறினான். கள்வனைக் கொன்று சிலம்பினைக் கொணருமாறு காவலர்க்குக் கட்டளையிட்டான் வேந்தன்! கோவலனைக் கண்ட காவலர் " ஆளைப் பார்த்தால் திருடன் போல் தெரியவில்லையே! " என்றனர். பொற்கொல்லன் பதறினான்! அவர்கள் மனத்தில் பதியுமாறு களவு நூல் பற்றிப் பேசினான்; கள்வரின் திறத்தைப் பலவாறு கூறினான். அப்போது காவலருள் கல்லாத மூர்க்கன் ஒருவன் கோவலனை வாளால் வெட்டினான், கோவலன் உடல் மண்ணில் சாய்ந்தது! கூடவே வேந்தனின் செங்கோலும் வீழ்ந்தது!

### 3.6.2. கண்ணகி சமைத்தல் - கோவலனுக்குப் பரிமாறுதல்

கண்ணகி, அவர்கள் அளித்த பல்வேறு வகைப்பட்ட காய்களை, வளைந்த அரிவாள்மணையின் உதவியால் அரிந்தாள்; அதனால் அவளது மெல் விரல்கள் சிவந்தன; முகம் வியர்த்தது; கண்கள் சிவந்தன; அப்போது சமையல் அறையில் எழுந்த புகையைக் கண்டு சென்று வைக்கோலால் தீயை மூட்டிய ஐயையுடன் சேர்ந்து, தனது கணவனுக்கு ஏற்ற உணவைச் சமைத்து முடித்தாள். அடிகளே அமுதம் உண்க! கண்ணகி பனையினது வெண்மையான ஓலையால் கைத் தொழிலில் வல்ல பெண்ணால் அழகாகச் செய்யப்பெற்ற தடுக்கையிட்டாள்! கோவலன் அதில் அமர்ந்தான். புதிய மண் பாத்திரத்தில் உள்ள நீரை வார்த்துத் தனது தாமரை மலர் போன்ற கையினால் கோவலனுடைய அடிகளைக் கழுவித் துடைத்து வணங்கினாள்; பின்னர்ப் பூமி தேவியின் மயக்கத்தை ஒழிப்பவளைப் போல நிலத்தில் நீர் தெளித்து மெழுகினாள். அதன்பின் குலை ஈனாத வாழையின் குருத்தைத் தான் மெழுகிய இடத்தின் மேல் பரப்பினாள் ; அதில் உணவை இட்டாள்; தன் கணவனை நோக்கி,

“அடிகளே, இப்போது உணவை உண்பீராக! ” என்று அன்புடன் இயம்பினாள்.



### 3.6.3. கண்ணகி கற்பின் திறம்

*அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்*
*துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்*
*விருந்தெதிர் கோடலும் இழந்த என்னைநும்*
*ஊர்காப் பாளரைக் கூவி ஈங்கென்*



கண்ணகி உள்ளம் நைந்து உருகும் கோவலனை நோக்கி, ” ஐயனே! தாங்கள் என்னைப் பிரிந்ததால் நான் அறவோர்க்கு அளித்தலையும், அந்தணரைப் போற்றுதலையும், துறவிகளை எதிர்கொண்டு பணிவிடை செய்தலையும், சான்றோர் போற்றும் சிறப்புடைய விருந்தினரை வரவேற்று உபசரித்தலையும் இழந்திருந்தேன். அப்போது பெரிய புகழ், அரசர் போற்றும் சிறப்பு ஆகியவற்றையுடைய தங்கள் தந்தையார், உம் தாயாருடன் வந்து என்னைக் காண, நான், தாங்கள் என் முன் நில்லாது என்னை விட்டுப் பிரிந்ததால் உண்டாகிய துன்பத்தை மறைத்து ஒழுகினேன். அதனை உணர்ந்து கொண்ட அவர்கள் அன்பு மிகுந்து, அருள் மிக்க சொற்களால் எனது பொறுமையைப் பாராட்ட, அப்போது நான் உள்ளத்தில் மறைத்து வைத்திருந்த பிரிவுத் துயரமும் மெய் வருத்தமும் ஆகியவற்றை வெளிப்படுத்திக் கூறுவது போன்றிருந்த எனது பொய்ப் புன் சிரிப்பைக் கண்டு அவர்கள் மனம் வருந்தினர். அங்ஙனம் பெற்றோர் வருந்துமாறு தாங்கள், போற்றுதற் குரியதல்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்தீர்! நானோ, தங்கள் மனக் கருத்துக்குச் சிறிதும் மாற்றமில்லாத வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறேன்! ஆதலால்” மதுரைக்குப் புறப்படுக, என்றதும் உடனே தங்களுடன் புறப்பட்டேன்! ” என்றாள்.

### 3.6.4. வினை விளை காலம் விளைவித்த கோலம் !

*தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு*
*கன்றிய கள்வன் கைய தாகில்*
*கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கெனக்*

”கொம்பின்கண் மலரும் வேப்ப மாலையை அணிந்த பாண்டியன், தன் தீவினை தோன்றிப் பயனைத் தரும் காலமாதலால், அந்தப் பொற்கொல்லனின் சொல்லைச் சிறிதும் ஆராய்ச்சி செய்யாமல், ஊர்க்காவலரை அழைத்து, “ தாழ்ந்த மலர் மாலையுடைய அரசமாதேவியின் சிலம்பு, இவன் கூறிய கள்வன் கையில் இருக்குமானால், ( அவனைக் கொல்வதற்கு அச்சிலம்புடன் இங்குக் கொண்டு வருக எனக் கூற எண்ணியவன் அவ்வாறு கூறாமல்) அவனைக் கொன்று அந்தச்

குறிப்புகள்

சிலம்பை இங்குக் கொண்டு வருக! ” என்று கட்டளையிட்டான் . நான் எங்கும் பார்க்கவில்லை! ஆகவே இக்கள்வரின் செய்கை எவராலும் அறிய இயலாது! இவனைக் கொல்லாமல் விட்டால் அரசன் நம்மைத் தண்டிப்பான்“ எனவே , படைக்கலன் உடைய காவலர்களே! நாம் இனிச் செய்ய வேண்டியதைச் சிந்தித்துச் சொல்வீராக! ” எனக் காவல் இளையோன் கூறினான்.

*கல்லாக் களிமக னொருவன் கையில்*
*வெள்வாள் எறிந்தனன் விலங்கூ டறுத்தது*
*புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப*
*மண்ணக மடந்தை வான்றுயர் கூரக்*
*காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்*
*கோவலன் பண்டை ஊழ்வினை உருத்தென்.*

அக்காவலர்களுள் கல்வி அறிவற்ற ஒரு கள்குடியன் கோவலனைத் தன் வாளினால் வெட்டினான். அது கோவலனின் உடலை இடையே வெட்டியது. வெட்டப்பட்ட புண்ணிலிருந்து வெளிப்பட்ட இரத்தம் குதித்து எல்லா இடங்களிலும் பரந்தது. நிலமகள் மிக்க துயரத்தை அடைய பாண்டியனின் செங்கோல் வளைய , கோவலனின் முன் வினையானது முதிர்ந்து வந்து ஊட்டுதலால் அவன் வெட்டுண்டு தரையில் வீழ்ந்தான்.

## 3.7. ஆய்ச்சியர் குரவை (காதை -17)

### 3.7.1. காதைச்சுருக்கம்

ஆயர்பாடியில் பலவகைத் தீ நிமித்தங்கள் நிகழ்ந்தன ! தயிர் கடையச் சென்ற மாதரி திடுக்கிட்டாள்! பால் உறையவில்லை! வெண்ணெய் உருகவில்லை. ஆட்டுக் குட்டிகள் துள்ளி விளையாடவில்லை! பசுக்கள் அழுகின்றன! இவற்றால் ஏதோ துன்பம் வரப்போகிறது என வருந்தினாள் மாதரி. அவள் முன்னர் ஆயர் சேரியில் கண்ணனும் பலராமனும் பின்னையுடன் ஆடிய குரவையை இப்போது துயர்தீர ஆடுவோம்! ” என ஐயையை நோக்கிக் கூறினாள். கன்னியர் எழுவர் திருமாலின் சிறப்பைப் பாடிக் குரவை ஆடினர்.

### 3.7.2. தீய நிமித்தங்கள்

*குடப்பால் உறையா குவியிமில் ஏற்றின்*
*மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு;*
*உறிநறு வெண்ணெய் உருகா உருகும்*
*மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு;*
*நான்முலை யாயம் நடுங்குபு நின்றிரங்கும்*
*மான்மணி வீழும் வருவதொன் றுண்டு;*

*Self Instructional Material*

குறிப்புகள்

1 . "நாம் நேற்று உறையிட்ட தாழிகளில் பால் தோயாதிருக்கிறது! திரண்ட திமிலையுடைய ஆனேற்றின் அழகிய கண்களினின்றும் நீர் வழிகிறது! ஆதலால் நமக்கு வருவதொரு தீங்கு உண்டு! '

2 . "உறியிலே முதல்நாள் வைத்த மணமிகு வெண்ணெய் உருக்கினாலும் உருகவில்லை! ஆட்டுக் குட்டிகளும் துள்ளி விளையாடாமல் சோர்ந்து இருக்கின்றன! ஆதலால் நமக்கு வருவதொரு தீங்கு உண்டு! '

3 . "நான்கு முலைக் காம்புகளைக் கொண்ட பசுக்கள் தம் உடல் நடுங்கி அலறுகின்றன! அப்பசுக்களின் கழுத்திலே கட்டிய மணிகளும் அற்று நிலத்தில் விழுகின்றன ! ஆதலால் நமக்கு வருவதொரு தீங்கு உண்டு!" என்று கூறி , இத்தகைய தீய நிமித்தங்களால் ஏதோ துன்பம் நேரப் போகிறது என மனம் மயங்கினாள் மாதரி.

## 3.8. துன்ப மாலை (காதை - 18)

### 3.8.1. காதைச்சுருக்கம்

குரவை முடிந்ததும் மாதரி வைகைக்கு நீராடச் சென்றாள். அப்பொழுது, கோவலன் கொல்லப்பட்ட செய்தி ஊரில் பரவியது! ஊர்ப் பேச்சைக் கேட்ட ஒருத்தி வந்து, அரண்மனையில் சிலம்பு திருடிய கள்வன் என்று கூறித் கோவலனைக் கொலை செய்தனர்" என்றாள். அவ்வளவுதான்! கண்ணகி பொங்கியெழுந்தாள்! சீறிச் சினந்தாள்! காண்பார் எல்லாரும் இரங்க , அழுது துடித்தாள் ! " காய்கதிர்ச் செல்வனே! கள்வனோ என் கணவன் எனச் சூரியனை நோக்கி வினவினாள்! " நின் கணவன் கள்வன் அல்லன் ; கள்வன் என்று கூறிய ஊரைத் தீயுண்ணும் ! " எனப் பதில் கிடைத்தது .

### 3.8.2. துன்பச்செய்தி

அசைந்த சாயலையுடைய ஆயர் முதுமகளான மாதர் பூவும் புகையும், புனைவதற்கு அமைந்த சந்தனமும் மாலையும் கொண்டு, நீர் நிறைந்து இடையறாது செல்லும் வையையாற்றின் கரையில் இருக்கும் திருமால் அடிகளைப் போற்றித் துதிக்க விரும்பி, நீராடச் சென்றாள். அப்போது ஒருத்தி , ஊரினுள்ளே பிறந்த ஒரு சொல் கேட்டு அதனைக் கூற, ஆயர்பாடிக்கு விரைந்து வந்தாள். அங்ஙனம் கூற வந்தவள் அத் துயர மொழியினைக் கண்ணகிக்குக் கூறாது நின்றாள். அப்போது கண்ணகி ஐயையை நோக்கி, தோழி! மதுரைக்குச் சென்ற காதலன் இன்னும் வரக்காணேன்! அதனால் நெஞ்சு கலங்கித் துன்புறுகிறது! மூச்சும் கொல்லன் ஊதும் துருத்தியும் தோல்வியுறுமாறு அழல் எழ உயிர்க்கின்றது! ஆதலால் அயலார் கூறியது, யாதோ? " தோழி! நல்ல பகற்பொழுதிலேயே நடுங்கச் செய்யும் துன்பம் மிகுதியாயிற்று;

குறிப்புகள்

அதுவுமன்றி, என் கணவனைக் காணாது உள்ளம் பெரிதும் வருந்துகிறது : இங்ஙனம் எனது உள்ளம் வருந்துமாறு அயலார் கூறியது யாதோ? ” தோழி! என் கணவன் வரக்காணேன்! ஆதலால் இனி எனக்கோர் அடைக்கலமும் உண்டோ? என் தலைவனுக்கு யாரோ வஞ்சகம் செய்து விட்டார்கள் என்றே என் நெஞ்சம் மயங்குகிறது. ஆதலால் அயலார் கூறியது யாதோ? ” எனக் கூறித் தவித்தாள் கண்ணகி அப்போது ஐயை , ” அரசன் உறையும் அரண்மனையிலிருந்த, அழகு பொருந்திய சிலம்பினைச் சிறிதும் சத்தம் இல்லாமல் கவர்ந்த கள்வன் என்று கூறி, ஒலிக்கும் வீரக்கழல் புனைந்த ஊர்க் காவலர் கோவலனைக் கொலை செய்தனர்! ” என்றாள். கண்ணகி திங்கள் வீழ்ந்தது போல் வீழ்ந்தாள்.

### 3.8.3. கண்ணகி புலம்பல்

*காய்கதிர்ச் செல்வனே கள்வனோ என்கணவன்*
*கள்வனோ அல்லன் கருங்கயற்கண் மாதராய்*
*ஒள்ளெரி உண்ணுமிவ் வூரென்ற தொருகுரல்.*

அல்லலுற்று ஆற்றாது அழும் கண்ணகி, ” எல்லாரும் காணுங்கள்! தீமை நீங்கும் பொருட்டு, குரவைக் கூத்தினுள் வந்து திரண்ட ஆயர்குல மகளிர் எல்லாரும் கேளுங்கள்! காய் கதிர்ச்செல்வனே! பரந்த அலைகளையுடைய கடலை வேலியாக உடைய இவ்வுலகில் நிகழ்வனவற்றையெல்லாம் நீ அறிவாய் ! ஆதலால் நீயே சொல்! என் கணவன் கள்வனா? ” எனக் கேட்டு உள்ளம் நைந்தாள் . அப்போது, “ கரிய கயல் போலும் கண்களையுடைய மாதே! நின் கணவன் கள்வன் அல்லன்; அவனைக் கள்வன் என்று கூறிய இவ்வூரைத் தீ பற்றியுண்ணும்! ” என்று ஒரு குரல் விண்ணிலிருந்து ஒலித்தது.

## 3.9. ஊர்சூழ் வரி (காதை -19)

### 3.9.1. காதைச்சுருக்கம்

கதிரவன் உரைத்ததைக் கேட்ட கண்ணகி, வீறு கொண்டு தனது மற்றொரு சிலம்புடன் புறப்பட்டாள். மதுரைத் தெருக்களில் தன் கண் எதிரில் வந்த மகளிரையெல்லாம் நோக்கி அரற்றி அழுதாள்; “ கணவனைக் காண்பேன்; அவன் வாயிலிருந்து ஒரு தீதறு நல்லுரை கேட்பேன்!“ எனச் சூள் உரைத்தாள், வெட்டுண்ட கணவனைப் பலர் காட்டக் கண்டு துடிதுடித்தாள்! ” பொன்னறு நறுமேனி புழுதியிலே கிடப்பதா! ” என மருண்டாள்! ” நீ இங்கே இரு” எனக் கணவன் வாய் திறந்து மொழியக் கேட்டுக் கடமை உணர்ந்தாள்; பழி துடைக்கப் பாண்டியனைக் காண அரண்மனையை நோக்கி விரைந்தாள்.’

### 3.9.2. கண்ணகி வஞ்சினம்

*களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி*

*வளையாத செங்கோல் வளைந்த திதுவென்கொல்*
*மன்னவர் மன்னன் மதிக்குடை வாள்வேந்தன்*
*தென்னவன் கொற்றம் சிதைந்த திதுவென்கொல்*

ஈதொன்று கேள் ! காய்கதிர்ச் செல்வன் " நின் கணவன் கள்வன் அல்லன் " என்று கூறக் கேட்டதும், வளையலை அணிந்த கண்ணகி சிறிது நேரமும் அங்கு நில்லாளாகி மற்றொரு சிலம்பினைக் கையில் ஏந்தி ஆயர்பாடியினின்று நீங்கி, நகரத்துள் சென்று துயர மிகுதியால் பலவாறு பேசினாள். " நீதியற்ற இவ்வரசனது ஊரில் வாழும் பத்தினிப் பெண்டிரே ! இ∴து ஒன்று கேளுங்கள்; இம்மாலை நேரத்தில் யாரும் படாத துயரம் பட்டேன்; யாரும் உறாத துயரம் உற்றேன்; இ∴து ஒரு வினைப் பயன்! - " என் கணவன் கள்வன் அல்லன் ; எனது காற் சிலம்பின் விலையைத் தராது அதனைக் கைக்கொள்ளும் பொருட்டுக் கள்வன் எனப் பழி சுமத்திக் கொன்றனரே! இ∴து ஓர் அநியாயம்! தம் கணவரால் விரும்பப்படும் தகுதியினையுடைய மாதரார் கண்முன்னே என் அம்பு நிறைந்த கணவனைக் காண்பேன்! இ∴து ஒரு புதுமை! காதற் கணவனைப் பண்டுபோல் கண்டு அவன் வாயில் தீதற்ற நல்லுரை கேட்பேன்; இ∴து ஒரு சூளுரை! அவ்வாறு அவன் கூறும் நல்லுரையைக் கேளேனாயின், " வருந்தத் தக்க செயல் செய்தவள் " என்றும் , " கள்வன் மனைவி இவள் " என்றும் என்னை இகழுங்கள்! இ∴து ஓர் அவலம்! " வளையாத செங்கோல் வளைந்தது இதுவென் கொல் ' எனத் துன்புற்று ஆற்றாது அழுது புலம்பும் கண்ணகியைக் கண்டு ஏங்கி , வளமான மதுரை வாழ் மக்கள் எல்லாரும் செய்வதறியாது திகைத்தனர். " நீக்க முடியாத துன்பத்தினை இக்காரிகைக்குச் செய்து , எக்காலத்தும் வளையாத மன்னவனின் செங்கோல் வளைந்ததே! இதற்கு யாது காரணமோ? மன்னவர்க்கெல்லாம் மன்னனும் திங்களைப் போன்ற குடையினையும், வாளினையும் உடைய வேந்தனும் ஆகிய தென்னவனின் அரசாட்சி அழிவுற்றதே! இதற்கு யாது காரணமோ? " தன் ஆட்சிச் சிறப்பால் நிலவுலகினைக் குளிரச் செய்யும் வீரம் மிக்க வேலையும், சிறந்த தகுதியும் உடையவன் தென்னவன் அவனது தண்மையுடைய குடை நிழலா இவ்வாறு கொடுமையைச் செய்தது? இதற்கு யாது காரணமோ? " செம்பொன்னாலான சிலம்பு ஒன்றினைக் கையிலே ஏந்தியவாறு புதிய பெரிய தெய்வம் வந்துள்ளதே! இதற்கு என்ன காரணமோ? அழகிய செவ்வரி பரந்த மை பூசிய கண்ணினையுடைய இவள், இவ்வாறு அழுது ஏங்கிப் புலம்புகின்றாளே! இக் காரிகை தெய்வத்தன்மை பொருந்திய பெருமையுடையவள் போலும்! இனி இங்கு என்ன நேருமோ! " கண்டாளைத் தான் காணான் என்றின்னவாறு பல கூறி

குறிப்புகள்

குறிப்புகள்

வருந்தி ஏங்கித் தம் மன்னனைப் பழி கூறும் மக்களையுடைத்தாயிற்று மதுரை! அங்கு ஆரவாரத்துடன் திரியும் சிலர் செம்பொன் கொடி போன்ற கண்ணகிக்குக் கோவலனைக் காட்டினர் . ஆயினும் தன்னைக் காண்பாளை அவன் காணான்! அப்போது , வளம் நிறைந்த பெரிய உலகத்திற்கு இருளை ஊட்டி மாமலை மேல் தனது சிவந்த கதிர்களைச் சுருக்கிக் கொண்டு ஞாயிறு மறைந்தான், மயக்கத்தைத் தரும் அம்மாலை நேரத்தில், பூக்கள் உதிர்ந்த கொடி போன்ற கண்ணகி, தன் கணவன் உடல்மேல் விழுந்து அழுது அரற்றலால் அவ்வூரெங்கும் அவலப் பேரொலியெழுந்தது! அன்று காலையில் தன் கணவனைத் தழுவி அவளிடமிருந்து, வண்டுகள் ஒலிக்கும் கரிய அவனது தலை மாலையை வாங்கித் தனது நீண்ட கூந்தலில் குடிக் கொண்ட அவள் , மாலையில், அவனது வெட்டுண்ட புண்ணினின்றும் பொங்கிய குருதி உடலெங்கும் நனைக்கக் கண்டு பதறினாள்! அக்கணவன் தன்னைக் காணாத “ துயரத்தினையும் கண்டு திடுக்கிட்டாள்! “ இது தீவினை என்று உரையீரோ? ” எனது மிக்க துயரைக் கண்டும், “ இவள் இதற்குத் துன்புறுவாளே” என நினைப்பீரோ? நமது பொன் போன்ற மேனி புழுதியிலே படிந்து கிடக்கத்தக்கதோ? மன்னன் செய்த இக்கொலை எதனால் நிகழ்ந்தது என அறியாத எனக்கு, இக்கொலைக்குக் காரணம் முற்பிறப்பில் யான் செய்த தீவினையேதான்! “ என உரையிரோ ? எனக்குத் துணையாக யாருமில்லாத மயக்கம் தரும் இம்மாலைக் காலத்தே, துயருறுகின்ற தனியளான என் கண் முன் , மாலைகள் நிறைந்த நினது அழகு மார்பு இப்படி வெறுநிலத்தே படிந்து கிடக்கத் தக்கதோ? பாரோர் பழிச் சொல் கூறித் தூற்றும் வண்ணம் பாண்டியன் தவறு செய்ய நேர்ந்த இது. தீவினையின் பயன் என உரையீரோ? கண்ணீர் சோர்ந்து வீழ்கின்ற தீவினையுடையேன் கண்முன், புண்ணின்று ஒழுகும் குருதியினையுடையவராய் நீர் புழுதியிலே படிந்து கிடக்கத் தக்கதோ? மக்களெல்லாம் பழி கூறித் தூற்றுமாறு மன்னவன் தவறு செய்ய நேர்ந்த இது தீவினையின் பயன் என உரையீரோ? உண்டு கொல் ” இம்மதுரை மாநகரில் மகளிரும் உள்ளாரோ? மகளிரும் உள்ளாரோ? தாம் கொண்ட கணவர்க்கு உற்ற துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளும் மகளிரும் உள்ளாரோ? மகளிரும் உள்ளாரோ? ” இம்மதுரை மாநகரில் சான்றோரும் உள்ளாரோ? சான்றோரும் உள்ளாரோ? பிறர் ஈன்ற குழந்தையைத் தாங்கி வளர்க்கும் சான்றோரும் உள்ளாரோ? “ சான்றோரும் உள்ளாரோ ? ” இம்மதுரை மாநகரில் தெய்வமும் உள்ளதோ தெய்வமும் உள்ளதோ ? என் கணவனைக் கூரிய வாளால் வெட்டியதனால் அறம் தவறிய பாண்டியனின் மதுரை மாநகரில்

தெய்வமும் உள்ளதோ? தெய்வமும் உள்ளதோ?" "தீவேந்தன்தனைக் காண்பேன் ! என்று இவ்வாறான சொற்களைச் சொல்லிச் சொல்லி அழுதவள், தன் கணவனுடைய திருத்தங்கும் மார்பினைத் தன் மார்போடு பொருந்தும் வண்ணம் தழுவிக் கொண்டாள். அவன் உயிர் பெற்று எழுந்து நின்று கண்ணகியை நோக்கி, " முழுமதி போன்ற ஒளியுடைய நின் முகம் இப்படி வாடி விட்டதே" என்று கூறி, அவள் கண்ணிரைக் கையால் துடைத்தான். கண்ணகி புலம்பி அழுது நிலத்திலே விழுந்து தன் காதலனுடைய தொழத்தக்க திருந்திய அடிகளைத் தனது வளையலை அணிந்த இரு கைகளாலும் பற்றிக் கொண்டாள், பழுதற்ற உடலை விட்டு நீங்கி எழுந்தவன் , "எழுதிய அழகிய மலர் போன்ற மை தீட்டிய கண்களையுடையவளே! நீ இங்கு இருப்பாயாக !" எனக் கூறிப் பல தேவர் கூட்டத்துள் ஒருவனாய், விண்ணுலகு அடைந்தான், ' கண்ணகி," இ:.து என்ன மாயமோ? மற்று யாதோ? என்னுள்ளத்தை மயக்கியது ஒரு தெய்வமோ? இனி எங்குச் சென்று என் கணவனைத் தேடுவேன்? இங்கே கூறியது பொருளுரையன்று! கணவனைக் கூடுதல் எளிதாயினும் எனது மிக்க சினம் தணிந்தாலன்றி அவரைக் கூடேன்! அந்தச் சினம் தணிதற்கே கொடுமை செய்த வேந்தனைக கண்டு இக்கொலைக்குரிய காரணம் யாது? என யானே கேட்பேன்! " என்று கூறி எழுந்தாள், நின்றாள்; தன்னூரில் கண்ட துன்பம் மிக்க தீய கனவினை நினைத்தாள். நீண்ட கயல் போலும் கண்களினின்றும் நீர் பெருகியது !

## 3.10. வழக்குரை காதை (காதை -20)

### 3.10.1. காதைச்சுருக்கம்

பாண்டிமாதேவி தான் கண்ட தீய கனவை மன்னனிடம் சொல்லிக் கொண்டிருந்தாள் . அப்பொழுது கடுஞ்சினத்துடன் அரண்மனையை அடைந்த கண்ணகி, பாண்டியன் முன் தோன்றினாள். தன் கணவனை ஆராயாது கொன்ற கொடுங் கோன்மையை அஞ்சாது எடுத்துரைத்தாள். நீதிச் செருக்கு மிக்க பாண்டியன், தான் செய்தது தவறு என்பதனை முதலில் உணராது பேசினான். கண்ணகி சீறியெழுந்து தனது காற்சிலம்பை வேந்தன் முன் வீசியெறிந்தாள். உண்மையுணர்ந்த பாண்டியன், " யானோ அரசன் ; யானே கள்வன், கெடுக என் ஆயுள்" என்று கூறி உள்ளம் தளர்ந்தான். உயிர் துறந்தான். பாண்டிமாதேவி கணவனின்இணையடி தொழுது சோர்ந்து வீழ்ந்தாள்.

### 3.10.2. பாண்டிமாதேவியின் தீக்கனவு

கண்ணகி அரண்மனை வாயிலை நெருங்கியபோது, பாண்டிமாதேவி தான் கண்ட தீக் கனவைத் தோழியிடம் கூறிக் கொண்டிருந்தாள்: " தோழி! நம் வேந்தனது வெண்கொற்றக் குடையும் செங்கோலும் கீழே

குறிப்புகள்

விழக் கனவு கண்டேன்! வாயிலில் இடைவிடாது அசையும் மணியின் ஓசையையும் நான் கனவிலே கேட்டேன்! எட்டுத் திசைகளும் அப்போது அதிர்ச்சியுற்றன! அன்றியும் தோழி! சூரியனை இருள் விழுங்கவும் கனவு கண்டேன்! இரவு நேரத்தில் வானவில் தோன்றக் கண்டேன்! நண்பகலிலே விண்மீன்கள் எரி கொள்ளிகளாகக் கீழே விழக் கனவு கண்டேன். இவற்றின் பயன் யாதோ தோழி! அறிகுறி" செங்கோலும் வெண்கொற்றக் குடையும் செறிந்த நிலத்திலே முறிந்து வீழ்ந்தன; நம் வேந்தனது கொற்ற வாயிலின்கண் கட்டிய மணி என் உள்ளம் நடுங்குமாறு அசைந்து ஒலித்தது; இரவில் வானவில் தோன்றியது. பகலில் விண்மீன்கள் எறிந்து கீழே வீழ்ந்தன; எட்டுத் திக்கும் அதிர்ந்தன; ஆதலால் நமக்கு வரக்கூடிய துன்பம் ஒன்று உளது! எனவே மன்னனிடம் சென்று கனவைக் கூறுவோம்! " என்று கூறி மன்னனை நாடிச் செல்லலானாள்.

**3.10.3. கண்ணகி வழக்காடுதல்**

*தேரா மன்னா செப்புவ துடையேன்*
*எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்*
*புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்*
*வாயிற் கடைமணி நடுநா நடுங்க*
*ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்*
*அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்*
*பெரும்பெயர்ப் புகாரென் பதியே அவ்வூர்*
*ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி*
*மாசாத்து வாணிகன் மகனை யாகி*
*வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்*
*சூழ்கழல் மன்னா நின்னகர்ப் புகுந்தீங்கு*
*என்காற் சிலம்புபகர்தல் வேண்டி நின்பாற்*
*கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி*
*கண்ணகி யென்பதென் பெயரே*

சீறிச்சினந்து அங்கு வந்த கண்ணகி, "வாயில் காப்பவனே ! வாயில் காப்பவனே! அறிவு முழுதும் அற்றுப்போன அறநினைவு அற்ற நெஞ்சத்துடன் அரச நீதியினின்றும் தவறியவனின் வாயில் காப்பவனே! " பரலினையுடைய இரண்டு சிலம்புகளில் ஒன்றினைக் கையில் ஏந்தியவளாய்க் கணவனை இழந்த ஒருத்தி, நம் அரண்மனை வாயிலின்கண் உள்ளாள்" என்று வேந்தனிடம் சென்று அறிவிப்பாய்! அறிவிப்பாய்! " என்றாள். கேட்ட வாயிலோன் அரசனிடம் சென்று, " எமது கொற்கை நகரத்து வேந்தே! வாழ்க! தெற்கே உள்ள பொதிய மலைக்குத் தலைவனே! வாழ்க! செழியனே! வாழ்க! பாண்டியனே! வாழ்க! இதுவரை

பழிச்சொற்கள் படராத பஞ்சவனே, வாழ்க! வெட்டுவாயினின்றும் பீறிட்டெழும் குருதி நீங்காத பசிய முண்டமாகிய பிடர்த்தலையாகிய பீடத்தின்கண் ஏறியிருந்த இளங்கொடியாகிய வெற்றி தரும் வேலினைத் தன் பெரிய கையிலே ஏந்திய கொற்றவையும் அல்லள் ; கன்னியர் எழுவருள் பிடாரியும் அல்லள்; இறைவனை நடனமாடச் செய்த பத்திரகாளியும் அல்லள்; கண்டார்க்கு அச்சத்தைத் தரும் காட்டைத் தான் விரும்பும் இடமாகக் கொண்ட காளியும் அல்லள்; தாருகனின் பரந்த மார்பைப் பிளந்த துர்க்கையும் அல்லள்; மிக்க சினம் கொண்டவள் போலவும் விளங்குகின்றனள் ! வேலைப்பாடு மிக்க பொற்சிலம்பு ஒன்றினைக் கையில் ஏந்தியவளாய்த் திகழ்கிறாள் “ கணவனை இழந்த அவள் நம் வாயிலின் முன்னே நிற்கின்றாள்” என்று அறிவித்தான். யாரையோ நீ மடக்கொடி? ” அத்தகையவளை“ வருக “ எனக் கூறி இங்கே அழைத்து வருக! ” என ஆணையிட்டான், மன்னன். கண்ணகி அரசனை அணுகிச் சென்றபோது, அவன், ” நீர் பெருகும் கண்களையுடயவளே! என்முன் வந்து நிற்பவளே! இளங்கொடி போன்றவளே! நீ யார்? ” என்று கேட்டான். “ ஆராய்ச்சியில்லாத மன்னனே ! நின்னிடம் சொல்ல வேண்டியதொன்று உண்டு! கேள்! இகழ்தலற்ற சிறப்பினையுடைய தேவர்களும் வியப்புறுமாறு, புறா ஒன்றின் துயரத்தினைப் போக்கிய சிபியும், கட்டிய மணியின் நடுவிலுள்ள நாவானது அசைய, பசுவின் கடைக் கண்களினின்றும் ஒழுகும் நீர் தனது உள்ளத்தைச் சுட, தானே தன் அரும்பெறற் புதல்வனைத் தேர்ச்சக்கரத்தி லிட்டுக் கொன்ற மனுநீதி சோழனும் ஆண்ட மிக்க புகழினையுடைய புகார் நகரமே நான் பிறந்த ஊர்’ அவ்வூரில் பழியற்ற சிறப்புடன் கூடிய புகழ் எங்கும் விளங்கும் பெருங்குடிக்கண் மாசாத்துவான் என்னும் வணிகனுக்கு மகனாகத் தோன்றி , பொருளீட்டி வாழ்க்கை நடத்தலை விரும்பி, முன்னைத் தீவினை செலுத்துதலால் வீரக்கழலணிந்த மன்னனே! நினது மதுரை நகரத்தினுள் புகுந்து, இங்கு என் காற்சிலம்பினை விற்றல் காரணமாக நின்னிடத்துக் கொலையுண்ட கோவலன் மனைவி நான்; என் பெயர் கண்ணகி!” என்றாள். அது கேட்ட மன்னன், ” பெண் அணங்கே! கள்வனைக் கொலை செய்தல் கொடுங்கோன்மை அன்று! அதுவே அரச நீதி! ” என்றான். கண்ணகி, அறநெறியில் செல்லாத கொற்கை வேந்தே! என் கால் பொற் சிலம்பு மாணிக்கக் கற்களைப் பரல்களாகக் கொண்டது! ” என்றாள் . பாண்டியனோ, “ தேன் போலும் இனிய மொழி பேசுபவளே! நீ உரைத்தவை நீதியை நிலைநாட்ட உதவும் நல்ல சொற்களாகும்! எம் சிலம்பு முத்துக்களைப் பரல்களாகக் கொண்டது” என்று கூறிப் பின் ஏவலரை நோக்கி “முன்னர்க் கோவலனிடமிருந்து பெற்ற அச்சிலம்பைக்

கொணர்க! “ எனக்கட்டளையிட்டு, வரவழைத்து அதனைத்தானே கண்ணகியிடம்வைத்தான்! உடனே கண்ணகி, தான் அணியும் அழகிய சிலம்பை வீசியெறிந்து உடைத்த அளவில், அதனின்றும் எழுந்த மாணிக்கப் பரல் ஒன்று பாண்டியனின் வாயருகே தெறித்துக் கீழே வீழ்ந்தது. அவ்வாறு தெறித்த மாணிக்கப் பரல் கண்டு திடுக்கிட்ட பார்வேந்தன், தாழ்வுற்ற குடையனாய், தளர்ந்த செங்கோலனாய், ” பொன் செய் கொல்லன் பொய்யுரை கேட்டு நீதி தவறிய யானோ அரசன். அரசன் அல்லன்: கோவலன் சிலம்பை என்னுடையதாக் கொண்டதால் நானே திருடன்! ” எனக் கூறி உள்ளம் குமுறினான்; துடித்தான்; மக்களைக் காக்கும் பாண்டி நாட்டு ஆட்சிக்கு என் காரணமாகத் தவறு நேர்ந்து விட்டதே! இது, இனி வரும் பாண்டியன் பரம்பரைக்கெல்லாம் பழியாயிற்றே எனப் பதறினான்! - கெடுக என் ஆயுள் ” எனக் தனக்குத் தானே தண்டனை விதித்துக் கொண்டு மயங்கி வீழ்ந்து மாண்டு போனான்! தென்னவனின் தெய்வக் கற்பினளாகிய கோப்பெருந்தேவி உள்ளம் குலைந்தாள்; உடல் நடுங்கினாள்; தாய் தந்தையரை இழந்தவர்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டி ஆறுதல் கூறமுடியும்! ஆனால் கணவனை இழந்தோர்க்கு அங்ஙனம் காட்டலாகாது எனக் கருதித் தன் கணவனின் இணையடிகளைத் தொட்டு வணங்கி வீழ்ந்து இறந்தாள்.

## 3.11. வஞ்சின மாலை (காதை – 21)

### 3.11.1. காதைச்சுருக்கம்

அரச மாதேவி உயிர் நீத்ததை அறியாத கண்ணகி அவளை நோக்கி, ” ஒப்பற்ற கற்புடை மகளிர் பலர் பிறந்த ஊரில் நானும் பிறந்தேன், யானும் ஒரு பத்தினியாவேன். அரசரோடு மதுரையையும் அழிப்பேன்” என்று வஞ்சினம் கூறி அவ்விடத்தை விட்டு அகன்றாள். பின், நான்மாடக்கூடலில் உள்ள மகளிரே, ஆடவரே, மாதவரே, கேளுங்கள் ! குற்றமில்லாத என் கணவனைக் கொலை செய்த மதுரையை நான் அழிப்பது குற்றமாகாது” என்று கூறி இடமுலையைக் கையால் திருகி எறிந்தாள். உடனே தீக் கடவுள் வெளிப்பட்டு ஏவல் கேட்டுப் பணிந்து நின்றது! ”நல்லோர் பக்கம் சாராது தீயோரை அழிப்பாயாக! ” என ஆணையிட்டாள். அவ்வாறே தீத்திறத்தார் பக்கம் சேர்ந்தது தீ!

### 3.11.2. கண்ணகி மதுரை நகர் மீது கொங்கையை எறிதல்

” நான்மாடக்கூடல் என்னும் மதுரைவாழ் மகளிரும், ஆடவரும், தேவரும், மிக்க தவமுடையோரும் கேளுங்கள்! ’ நான் விரும்பிப் போற்றிய என் கணவனைக் கொலை செய்த மன்னனையும் அவன் ஆட்சி செய்த இந்நகரத்தையும் சீறினேன் ; ஆதலால் நான் குற்றமேதும் செய்திலேன்! ” என்று கூறி, விளங்கிய அணியினையுடைய கண்ணகி,

மதுரை நகரை மூன்று முறை வலமாக வந்து, தேன் நிறைந்த மணமுடைய தெருவில் நின்று, தனது இடப்பக்கத்துக் கொங்கையை வலக்கையினால் திருகி எடுத்துச் சுழற்றி விட்டெறிந்தாள்!

### 3.11.3. கண்ணகி மதுரையை எரித்தல்

*பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்*
*மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்*
*தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று*

அவ்வாறு அவள் எறிந்தபோது , தான் பற்றிய பொருளை எரிக்கும் அக்கினி தேவன், நீல நிறத்தையும், முறுக்குண்ட சிவந்த நீண்ட சடையையும் பால்போன்ற வெண்பற்களையும் உடைய பார்ப்பன வடிவத்தோடு, தானே கண்ணகி முன்னர் வந்து தோன்றினான்! - தோன்றி , “சிறந்த பத்தினித் தெய்வமே! நினக்கு மிகவும் தவறு இழைத்த அந்நாளிலே, இந்நகரில் பரவி எரியூட்ட யானோர் ஏவலை முன்னரே பெற்றுள்ளேன்! ஆதலால் இங்கு அத்தீயினின்றும் பிழைத்தற்குரியோர் யார்? யார் ? அறிவிப்பாயாக ! ” என இரங்கிக் கேட்டான் . “ அந்தணர் , அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர், முதியோர், குழந்தைகள் ஆகியோருடைய இருப்பிடங்களை விட்டு விட்டு, தீவினையாளர் பகுதிகளை மட்டுமே எரிப்பாயாக!” எனச் சினம் கொண்ட கண்ணகி ஏவிய அப்பொழுதே, நல்ல தேரையுடைய பாண்டிய வேந்தனது மதுரை நகரத்தைப் புகையுடன் கூடிய தீப்பிழம்பு பற்றி அழித்தது!.

## 3.12. அழற்படு காதை (காதை -22)

### 3.12.1. காதைச்சுருக்கம்

அரசு கட்டிலில் வீழ்ந்த அரசனும் அரசியும் இறந்து விட்டனர் என்பதை அறியாது, ஆசான் முதலானோர் ஓவியம் போல் உரைபின்றி அசைவற்றுக் கிடந்தனர். படைவீரர் தீயைக் கண்டு அஞ்சி அரண்மனை வாயிலில் வந்து கூடினர். நால்வகை வருணப் பூதங்களாகிய தெய்வங்களும் நகரை விட்டு நீங்கின. பசுக்களும் கன்றுகளும் மேல் அகப்படாது அகன்ற தெருவில் ஓடின. பானைகளும் குதிரைகளும் மதிற்புறத்தே சென்றன, தீ அறவோர் பக்கம் சாராது மறவோர் பக்கம் மண்டியது, இல்லற நெறியினின்றும் பிறழாத முது மகளிர் கணவனை இழந்த கண்ணகியின் செயல் சிறந்ததே” எனத் தீக்கடவுளை வணங்கினர் . தீயின் வெம்மையைத் தாங்காத மதுராபதித் தெய்வம் கண்ணகியின் முன் வந்து தோன்றியது.

### 3.12.2. மதுரையில் நிகழ்ந்த மாற்றம்

கண்ணகி என்னும் கற்புத் தெய்வத்தின் ஏவல் பெற்ற தீக்கடவுளின் எரி முகம் திறந்தது; நகரெங்கும் தீப்பற்றியது, நகரைக் காக்கும்

குறிப்புகள்

தெய்வங்கள் கோட்டை வாயிலைக் காவாது ஒழிந்தன. வெல்லும் போரினையுடைய நெடுஞ்செழியன், தனது நீதி வளைந்ததனை அறிந்தான். அப்பொழுதே , வளைந்த செங்கோலைத் தன் உயிராகிய ஆதாரத்தினை ஈடாகக் கொடுத்து அதனைப் பெரிய நிலமடந்தைக்கு உணர்த்தும் பொருட்டு, குற்றமற்ற கற்பினையுடைய தன் பெருந்தேவியுடன் அரியணையிலே இறந்தான். புரோகிதன், பெருங்கணி தலைமை நிமித்திகன், அறங்கூறு அவையத்தார், வரியிலார், ஆலோசனை முடிவுகளை ஓலையில் எழுதுவோர் என்னும் இவர்களுடன் அரண்மனையில் உள்ளாரும் வளையணிந்த ஏவல் மகளிரும் ஆகியோர் சுவர் ஓவியம் போல் பேச்சின்றி அச்சத்துடன் அசைவற்றிருந்தனர். குதிரைப் பாகர், யானைப் பாகர், விரைந்து தேரோட்டும் தேர்ப்பாகர், வெற்றி பொருந்திய வாளை ஏந்திய மறவர் ஆகியோர் மன்னனது வெற்றி மிக்க அரண்மனை வாயிற்கண் தீயின் பெருக்கத்தை நோக்கித் திகைத்து அங்கிருந்து விலகிச் சென்றனர். 'ஆதிப் பூதமாகிய கடவுளும், மதுரையை விட்டு அகன்றது! ' அரச பூதமாகிய கடவுளும் மதுரையை விட்டு அகன்றது. வணிகப் பூதமாகிய மிகப்பெரிய கடவுளும், மதுரையை விட்டு அகன்றது வேளாண் பூதம் மதுரையை விட்டு அகன்றது. “ பூதங்கள் அனைத்தும் வெளியேறின. ” இந்நாட்டு மன்னன் செங்கோன்மையில் தவறிய நாளிலே, இந் நகரினைத் தீயானது உண்ணும் முறையால் உண்ணும் என்பதனை யாம் அறியும் முறையாலே அறிந்தோம்! ஆதலால் அதற்கேற்ப யாமும் காவலைக் கைவிட்டுப் போவது இயல்பேயன்றோ? ” எனக் கருதி , தனது கொங்கையால் நகரத்தை எரியூட்டி வெற்றி கொண்ட கண்ணகியின் எதிரே நால்வேறுபட்ட பூதங்களும், வெவ்வேறிடங்களை நோக்கிச் சென்று விட்டன. நெல் முதலான கலப் பொருள்கள் விற்கும் கடை வீதியும், கொடியுடைய தேர் ஓடும் வீதியும், பகுதி வேற்றுமை உணரப்பட்ட நான்கு வேறு வகையான தெருக்களும், வலிய குரங்குக் கொடியுடைய வில்லாளனாகிய அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டிய அந்நாளில், அவ்வனத்தில் வாழ்ந்த உயிரினங்கள் கலங்கினாற் போலக் கலங்கி, முழுதும் எரிந்து சாம்பலாயிற்று. நெருப்பு அறநெறியாளர் வாழும் இடங்களில் செல்லாது தீயோர் வாழும் இடங்களையே பற்றி எரித்தது“ யானையும் குதிரையும் விரைந்தோடின. கறவைப் பசுக்களும் அவற்றின் கன்றுகளும் கொளுத்தும் தீயில் துன்புறாமல் அறப்பண்புமிக்க ஆயர்களின் அகன்ற தெருக்களை அடைந்தன, அஞ்சாமை மிக்க ஆண் யானைகளும் பெண் யானைகளும் விரைந்து செல்லும் குதிரைகளும் மதில் அரணுக்குப் புறத்தே ஓடிய பிழைத்தன. மாலையிலே நிகழும் விழாக்களும், வேத ஒலியும் , சிவந்த

குறிப்புகள்

தீயில் ஓமம் செய்தலும், தெய்வ வழிபாடும் , மகளிர் மலர் தூவி விளக்கேற்றி மகிழ்தலும் , மாலைக் களியாட்டமும் , முரசின் முழக்கமும் ஆகிய அனைத்தும் அன்று நிகழா தொழிந்தன; எங்கும் துயரம் படர்ந்தது.

### 3.12.3. கண்ணகி முன் மதுராபதித் தெய்வம்

*காதலற் கெடுத்த நோயொ டுளங்கனன்று*
*ஊதுலைக் குருகின் உயிர்த்தன ளுயிர்த்து*
*மறுகிடை மறுகுங் கவலையிற் கவலும்*
*இயங்கலும் இயங்கும் மயங்கலும் மயங்கும்*
*ஆரஞ ருற்ற வீரபத் தினிமுன்*
*கொந்தழல் வெம்மைக் கூரெரி பொறாஅள்*
*வந்து தோன்றினள் மதுராபதியென்.*

கண்ணகி தன் கணவனை இழந்த பெருந்துன்பத் தீயினால் உள்ளம் வெதும்பி, கொல்லனது உலைக் களத்துத் துருத்தியைப் போல வெய்தாக நெடு மூச்செறிந்து நெடுந் தெருக்களிலே சுழன்று திரிவாள்; குறுந் தெருக்களிலே கவலையுடன் திகைத்து நிற்பாள்; சென்று கொண்டே இருப்பாள்; பின் மீண்டும் செயலற்று மயங்கி நிற்பாள்! இவ்வாறு பொறுத்தற்கரிய வீரபத்தினியின் முன், திரண்ட அழலாகிய வெம்மைமிக்க தீயினைக் கண்டு நெஞ்சு பொறுக்காத மதுராபதி என்னும் காவல் தெய்வம் வந்து தோன்றியது.

## 3.13. கட்டுரை காதை (காதை -23)

### 3.13.1. காதைச்சுருக்கம்

மதுராபதித் தெய்வம் கண்ணகியை நோக்கி, " நான் மதுரையின் காவல் தெய்வம் ! உனக்குற்ற துன்பம் கண்டு நானும் துன்புற்றேன்! இந்நாட்டை ஆண்ட பாண்டியர் அனைவருமே பதியுடன் படராதவர். நெடுஞ்செழியனும் அத்தகையவனே ! ஊழ்வினை காரணமாக உனக்கு இத்துன்பம் நேர்ந்தது, நின் கணவனின் பழம் பிறப்பைக் கூறுகிறேன் கேள் ! கலிங்க நாட்டில் சிங்கபுரத்தில் இருந்த வசு என்பவனும், கபிலபுரத்தில் இருந்த குமரன் என்பவனும் தாய் உரிமை காரணமாகப் பகை கொண்டிருந்தனர் . ஒருநாள் சங்கமன் என்னும் வணிகன் வாணிபத்தின் பொருட்டுச் சிங்கபுரத்துக் கடைவீதியில் சென்று கொண்டிருந்தான் . அப்போது பரதன் என்பவன் அச்சங்கமனைப் பகைவனின் ஒற்றன் என்று கருதி மன்னனிடம் அழைத்துச் சென்று கொன்று விட்டான் , கொலை செய்யப்பட்ட சங்கமன் மனைவி நீலி தாங்கொணாத் துயருடன் பதினான்கு நாட்கள் எங்கும் திரிந்து ஒரு மலை உச்சியை அடைந்து, " எனக்குத் துன்பம் செய்தவர் மறுபிறப்பில் இத்தகைய துன்பத்தை அடைவாராக! " எனச் சாபமிட்டுக் கீழே வீழ்ந்து மாண்டாள்! அந்தச் சாபமே இன்று

செலுத்தி, அரசாட்சியில் கவனம் செலுத்தத் தவறி விடுகிறான். சூழ்ச்சியால் அமைச்சன் கட்டியங்காரன், அரசனைக் கொன்று ஆட்சியைப் பிடித்துக் கொள்கிறான். கட்டியங்காரன் சூழ்ச்சியையும், தன் இறுதி முடிவையும் அறிந்த சச்சந்தன் கரு உற்றிருந்த தன் மனைவியை, மயிற்பொறியில் ஏற்றி அனுப்பி விடுகிறான். பொறியை இயக்கத் தெரியாததால் அது சுடுகாட்டில் இறங்க, அங்கு அவளுக்குச் சீவகன் பிறக்கிறான்.

ஏதுமற்ற சூழலில் தன்மகனை எப்படிக் காப்பாற்றுவது என எண்ணிய போது, தெய்வ அருளால் கந்துக்கடன் என்ற வணிகன் குழந்தையை எடுத்துச் சென்று வளர்க்கிறான். பின்னர்க் கந்துக்கடனுக்கு நந்தட்டன், நபுலன், விபுலன் என்ற மகன்கள் பிறக்கின்றனர். சீவகன் தம்பியரொடும் தோழர்களோடும் சேர்ந்து அச்சணந்தி என்ற ஆசிரியரிடம் வித்தைகளைக் கற்றனர். ஆசிரியரே சீவகன் தந்தை சச்சந்தன் என்பதை அவனுக்குத் தெரிவித்துக் கட்டியங்காரனை வெல்லும் வழிவகைகளைச் சொல்கிறார். இவை நாமகள் இலம்பக நிகழ்வுகள்.

### 2. கோவிந்தையார் இலம்பகம்

கட்டியங்காரனின் அரசவைப் பசுக்களை வேடர்கள் கவர்ந்து செல்ல, ஆநிரை மீட்பதற்குக் கட்டியங்காரன் படை வீரர்களால் இயலாது போகிறது. இதனை அறிந்து வருந்திய இடையர் தலைவன் நந்தகோபன்ஆநிரை மீட்போர்க்குத் தன் மகள் கோவிந்தையை மணம் செய்து தருவதாக அறிவிக்கிறான். சீவகன் ஆநிரைகளை மீட்டுக் கொடுத்துக் கோவிந்தையைத் தன் தோழன் பதுமுகனுக்குத் திருமணம் செய்கிறான்.

### 3. காந்தருவ தத்தையார் இலம்பகம்

வெள்ளி மலை வித்தியாதர அரசன் கலுழவேகன், தன்மகள் காந்தருவ தத்தையை மணப்பவன் இராசமாபுரத்தில் உள்ளான் என்பதைச் சோதிடத்தால் அறிந்து, தத்தையை அந்நகர் வணிகன் சீதத்தன்இல்லத்தில் தங்கச் செய்கிறான். அங்குத் தத்தையை யாழ் இசைப்போட்டியில் வெல்வார்க்கு அவளை மணஞ்செய்து கொடுப்பதாக அறிவிக்கிறான். அப்போட்டியில் பன்னாட்டு அரசர்களும், மேல்வருணத்தாரும் தத்தையிடம் தோல்வி அடைகின்றனர். சீவகன்தத்தையை யாழிசைப் போட்டியில் வென்று அவளை மணக்கிறான். இதனை எதிர்த்த அரசர்களைச் சீவகன் போரில் வெல்கிறான்.

### 4. குணமாலையார் இலம்பகம்

இளவேனில் காலத்தில் பொழில் விளையாடச் சென்ற தோழியர் குணமாலை, சுரமஞ்சரி ஆகியோருக்கு இடையே சுண்ணப் போட்டி

எற்படுகிறது. யார் இடித்த சுண்ணம் சிறந்தது என்பதே இங்குப் பிரச்சினை; இப்பிரச்சினை பலரால் தீர்க்கப்படாதிருக்க, சீவகனிடம் காட்டுகின்றனர். அவன் இருவரின் சுண்ணத்தை எடுத்து வானிலே வீச, குணமாலையின் சுண்ணத்தை வண்டுகள் உண்ணக் கண்டு, அதுவே சிறந்தது என்கிறான். சுரமஞ்சரி, சீவகன் தன் சுண்ணத்தை இகழ்ந்தான் என வருந்தித் ‘தன்னை வந்து சீவகன் கெஞ்சும்படி செய்வேன்’ என வஞ்சினம் கூறி,‘ஆடவரையே பார்க்கமாட்டேன்’ எனச் சூளுரைத்துக் கன்னிமாடத்தில் தவமிருக்கிறாள். அப்போது, அந்தணன் ஒருவனின் சோற்றை நாய் கவ்வ, அதனை அவன் அடித்துத் துன்புறுத்துகிறான். அதற்கு இரங்கிய சீவகன், அதன் காதில் பஞ்ச நமஸ்காரம் எனும் மந்திரம் ஓதினான். அது, சுதஞ்சணன் எனும் தேவனாக மாறுகிறது. தன்னை எப்பொழுது நினைத்தாலும் உடனே உதவிக்கு வருவதாகக் கூறிச் சுதஞ்சணன்விண்ணகம் செல்கிறான். அப்போது, கட்டியங்காரனின் பட்டத்து யானை அசனிவேகம் மதம் கொண்டு, குணமாலையைக் கொல்ல முற்பட, சீவகன் யானையை அடக்கிக் குணமாலையைக் காக்கிறான். அன்னத்தைத் தூது விட்டுக் குணமாலை தன் காதலைச் சீவகனுடன் பரிமாறிக் கொள்கிறாள். அவள் பெற்றோர் சம்மதத்துடன் சீவகன் அவளை மணக்கிறான். சீவகன் அடக்கிய அசனிவேகம் யானை சீவகனிடம் தோற்றதற்காக நாணி உணவு கொள்ளாதிருக்க, கட்டியங்காரன் சீவகனைச் சிறைப்பிடிக்கிறான். ஓராண்டுக் காலம், தான் யார் என்பதை வெளிப்படுத்தக் கூடாது என்ற ஆசிரியர் ஆணையால் சிறைப்பட்ட சீவகனை மீட்கத் தத்தையின் ஏவலால் தெய்வங்கள் வருகின்றன. இதனால் நாணிய சீவகன், சுதஞ்சணனை நினைக்க, அவன் சீவகனை மீட்டுத் தேவலோகம் எடுத்துச் செல்கிறான். சீவகனைச் சிறைப்பிடித்த மதனன், கட்டியங்காரனுக்கு அஞ்சி, வேறு ஒருவனைக் கொன்று, சீவகனைக் கொன்றதாகக் கூறிப் பரிசு பெறுகிறான்.

**5. பதுமையார் இலம்பகம்**

சீவகன் பல நாடுகளைக் காணவேண்டும் என விரும்பியதை அறிந்த சுதஞ்சணன், அழகுமேனி பெறுதல், விடம் நீக்குதல், விரும்பிய உருவம் எடுத்தல் குறித்த மூன்று மந்திரங்களைச் சீவகனுக்குஉரைக்கிறான். அதோடு, சீவகன் செல்லும் வழி கூறி, நெறிப்படுத்துகிறான். அவ்வழி, சீவகன், பறவைகளையும் விலங்குகளையும் வேட்டையாடும் வேடனைத் திருத்தி, கொல்லாமை விரதம் ஏற்கச் செய்கிறான். பின் காட்டுத்தீயால் சூழப்பட்டு வருந்திய யானைகளை மீட்கிறான். அடுத்து அரணபாதம் மலையை அடைந்து, அருகனை வழிபடுகிறான். இறுதியில், பல்லவ நாடு அடைந்து, அதன் தலைநகர் சந்திராபம் சென்று, அந்நாட்டு அரசன் தனபதியின் மகன்



குறிப்புகள்

உலோகபாலனுடன் நட்புக் கொள்கிறான். அங்கு, உலோகபாலன் தங்கை பதுமையைப் பாம்பு தீண்ட, அதன் விடம் நீக்கிப் பதுமையை மணந்து இரு திங்கள் தங்குகிறான்.

**6. கேமசரியார் இலம்பகம்**

பதுமையைப் பிரிந்து சித்திர கூடம் எனும் தவப்பள்ளி அடைந்து அங்குள்ள தாபதர்களைத் திருத்தி, தக்கநாட்டின் தலைநகர் கேமமாபுரம் அடைகிறான். அந்நகரத்தில் சுபத்திரன் என்ற வணிகனுக்கு கேமசரி என்ற ஓர் அழகிய மகள் இருந்தாள். சுபத்திரனிடம் சோதிடர்கள் "நின் மகள் எவனைக் கண்டு நாணுகின்றாளோ, அவனே அவளுக்குக் கணவன் ஆகுவன்; பிற ஆடவரைக் கண்டால் அவளுக்கு நாணம் தோன்றாது" எனக் கூறியிருந்தனர். கேமமாபுரத்தை அடைந்த சீவகன் சுபத்திரன் வீடு செல்ல, அங்கே கேமசரி அவனைக் கண்டு நாணுகிறாள். சோதிடர்கள் கூறியபடி, சீவகனே தன் மகளுக்குக் கணவன் என்பதறிந்து மணஞ்செய்கிறான். கேமசரியுடனும் இரு திங்கள் இருந்துவிட்டுப் பின் பிரிகிறான்.

**7. கனகமாலையார் இலம்பகம்**

தன் பயணத்தைத் தொடர்ந்த சீவகன், பல இடங்களைக் கடந்து மத்திம நாட்டின் தலைநகர் ஏமமாபுரம் சென்று, அந்நகருக்கு அருகே உள்ள ஒரு சோலையை அடைகிறான். அங்கு, காந்தருவ தத்தை மற்றும் குணமாலையை எண்ணிக் கலங்கி இருக்க, அந்நாட்டு அரசன் மகன் விசயன் வருகிறான். அவனால் எய்து வீழ்த்த முடியாத மாங்கனியைச் சீவகன் ஒரே அம்பில் வீழ்த்தித் தன் கைக்கு வரச் செய்கிறான். சீவகனின் வில்லாற்றலை அறிந்த விசயன், தன் நாட்டுக்கு அழைத்துச் சென்றதுடன், அரசன் மக்களுக்கு வில் வித்தை கற்பிக்கும் ஆசிரியராக்குகிறான். மகிழ்ந்த அரசன், தன்மகள் கனகமாலையைச் சீவகனுக்கு மணம் முடித்து வைக்கிறான். சீவகன் பிரிவால் வருந்திய நந்தட்டன் காந்தருவ தத்தையின் வித்தையால் சீவகன் இருப்பிடம் அறிந்து அவனைக் காண்கிறான். ஏனையத் தோழர்களும் அவனைக் காணச் சென்ற வழியில் உள்ள தவப் பள்ளியில் சீவகன் தாயைக் கண்டு, சீவகன் அரச குமாரன் என்பதை அறிகின்றனர். பின்னர் சீவகனைக் கண்டு அவன் தாயின் இருப்பிடத்தை அறிவிக்கின்றனர். சீவகன் தோழர்களுடன் தாயைக் காணப் புறப்படுகிறான்.

**8. விமலையார் இலம்பகம்**

சீவகன் தண்டகாரணியம் சென்று தாயை வணங்கி அறிவுரை பெறுகிறான். அங்கு ஆறு திங்கள் தங்கி, பின் தாயின் ஆணைப்படி, மாமன் கோவிந்தனைக் காண ஏமாங்கத நாட்டின் தலைநகர் இராசமாபுரம் செல்கிறான். அங்குப் பந்தாடிய விமலையைக் கண்டு காமுற்று, அவள்

தந்தை சாகரதத்தன் கடையில் சென்று அமர, கடைப்பொருள் அனைத்தும் விற்பனையாகி விடுகிறது. சோதிடத்தின்படி, அவனே தன் மகளுக்குரிய மணாளன் என்பதை அறிந்து, சீவகனுக்கு விமலையைத் திருமணம் செய்து வைக்கிறான். அவளுடன் இருநாட்கள் தங்கிய சீவகன், மீண்டும் தன் பயணத்தைத் தொடர்கிறான்.

காப்பிய இலக்கியம்

**9. சுரமஞ்சரியார் இலம்பகம்**

சீவகனைக் காம திலகன் என நண்பர்கள் பாராட்ட, புத்திசேனன், 'இங்குச் சுரமஞ்சரி ஆடவரையே வெறுத்து வாழ்கிறாள்; அவளை மயக்கித் திருமணம் செய்தால்தான் அவனைக் காமத் திலகனாக ஏற்க முடியும்' என்கிறான். சீவகன் முதிய அந்தணர் வடிவு கொண்டு, சுரமஞ்சரியின் அந்தப்புரம் அடைந்து அவளை மயக்கி மணக்கிறான். ஒருநாள் அவளுடன் தங்கி, பின்னர், வளர்ப்புத் தந்தை கந்துக்கடனை வணங்கி, தத்தை, குணமாலையார் துயரினை நீக்கி, ஏமாங்கத நாட்டைக் கடந்து செல்கிறான்.

குறிப்புகள்

**10. மண்மகள் இலம்பகம்**

விதேய நாடு சென்று, மாமன் கோவிந்தனின் படைத்துணை பெற்று ஏமாங்கத நாட்டுக்கு மீண்டும் வந்து, கட்டியங்காரனுடன் போரிட்டு வென்று, இழந்த தன் நாட்டின் ஆட்சியைப் பெறுகிறான். மாமன் கோவிந்தன் அறிவித்த சுயம்வரத்தின்படி திரிபன்றிப்பொறி போட்டியில் வென்று இலக்கணையைப் பெறுகிறான்.

**11. பூமகள் இலம்பகம்**

சீவகன் ஆட்சியைத் தொடங்குகிறான். கட்டியங்காரன் உறவினர்களுக்கு ஆறுதலும் பாதுகாப்பும் அளிக்கிறான். கட்டியங்காரனால் துன்புறுத்தப்பட்டவர்களுக்குச் சீவகன் வாழ்வளிக்கிறான்.

**12. இலக்கணையார் இலம்பகம்**

சீவகன் தன்தோழர் எல்லோரையும் வரவழைத்து, முறைப்படி இலக்கணையை மணம் செய்கிறான். பின், நகர்வலம் சென்று அருகனை வழிபடுகிறான். தன்னை அன்புடன் வளர்த்த தந்தையாகிய கந்துக்கடனுக்கும் தாயாகிய சுநந்தைக்கும் அரசு பட்டம் வழங்குகிறான்; நந்தட்டனை இளவரசனாக்குகிறான். மற்றைத் தோழர்களுக்கும் உரிய சிறப்புகளைச் செய்கிறான். சுதஞ்சணனுக்குக் கோயில் எழுப்புகிறான்; தான் இளமையில் விளையாடிய ஆலமரத்துக்குச் சிறப்புச் செய்கிறான்.

**13. முத்தி இலம்பகம்**

தவப் பள்ளியில் விசயை அருகனுக்கும் தன்னைப் பாதுகாத்த தெய்வங்களுக்கும் கோயில் எடுக்கிறாள். தன்னையும் மகனையும் காப்பாற்றத் துணை செய்த மயிற்பொறியை அரண்மனை மாடத்தில்

*Self Instructional Material*

குறிப்புகள்

இடம்பெறச் செய்கிறாள். சீவகன் பிறந்த சுடுகாட்டை அன்னதானச் சாலையாக்கி நாளும் 505 குழந்தைகளுக்கு அன்னதானம் வழங்குகிறாள். பின்னர் ‘பிறவிக்கடல் நீந்தச் சுநந்தையுடன் தவப்பள்ளி அடைந்து தன் துறவைத் தொடர்கிறாள். சீவகன் தேவியர்க்கு எட்டு மகன்கள் பிறக்கின்றனர். சீவகன் தேவியர் எண்மருடன் பொழில் வளம் காணச் செல்கிறான். அங்குக் கடுவன் - மந்தி (குரங்குகள்) பெற்ற பலாப்பழத்தை வேடன் கவர்ந்து செல்வதைக் கண்டு செல்வம் நிலையாமையை உணர்கிறான். பின் நகரை அடைந்து அருகனை வழிபட்டுச் சாரணர் மூலம் பிறவிப் பெருங்கடல் நீந்தும் முறையைத் தெரிந்து கொள்கிறான். அவர் மூலம் தன் முற்பிறப்பு வரலாற்றையும் அறிகிறான். பின் அரண்மனை சென்று தன் துறவை அறிவிக்கிறான்; தன் மகன் சச்சந்தனை அரசனாக்கித் தேவியர் எண்மரோடும் துறவு மேற்கொள்கிறான். வர்த்தமானரைத் தரிசித்து, விபுலகிரியில் தவம் செய்து சித்த சேத்திரம் அடைந்து வீடுபேறு அடைகிறான்

சீவகன் கல்வி கற்றதைக் கூறுவது நாமகள் இலம்பகம். கட்டியங்காரனை வென்று நாட்டை அடைந்தது மண்மகள் இலம்பகம். சீவகன் ஆட்சி எய்தியது பூமகள் இலம்பகம், வீடுபேறடைய விரும்பியது முத்தியிலம்பகம். பிற எட்டு இலம்பகங்களும் முறையே, காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, மாமன்மகள் இலக்கணை ஆகிய எட்டுப் பேரைச்சீவகன் திருமணம் செய்த செய்திகளைக் கூறுகின்றன. நண்பன் பதுமுகனுக்கு நந்தகோபன் மகள் கோவிந்தையை மணம் முடித்துவைத்த செய்தியும் ஓர் இலம்பகத்தில் கூறப்படுகிறது. இப் பெண்களின் பெயர்களாலேயே இலம்பகப் பெயர்கள் அமைந்துள்ளன.

சீவகன், எட்டுப் பெண்களைத் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சிகள் காப்பியத்தின் பெரும் பகுதியாக அமைந்துள்ளன. சீவகனின்நண்பன் பதுமுகன் திருமணம் செய்து கொண்ட நிகழ்ச்சியும் இடம் பெற்றுள்ளது. இவை மட்டுமல்லாமல் சீவகன் கல்வி பயின்றுசிறப்புற்ற செய்தியைக் கூறுமிடத்தும், சமண நெறி பெற்ற செய்தியைக் கூறுமிடத்தும், அவை திருமணமாகவே கூறப்பட்டுள்ளன. அதனால் இந்நூலை மணநூல் என்று கூறுவர்.

## 6.5. திருத்தக்க தேவர்

சீவக சிந்தாமணியை இயற்றியவர் திருத்தக்க தேவர். இவர் சோழர் குலத்தில் பிறந்தவர் என்று நச்சினார்க்கினியர் உரை குறிப்பிடுகின்றது. இவர், தமிழிலும் வடமொழியிலும் புலமை உடையவர். இளமையிலேயே சமண சமயத்தைத் தழுவித் துறவுபூண்டவர்.

குறிப்புகள்

திருத்தக்க தேவர் சான்றோர்களுடன் தொடர்புகொள்ளக் கருதி, மதுரைக்குச் சென்று, அங்கு சங்கப் புலவர்களோடு கூடி அளவளாவிஇருந்தபோது அங்கிருந்த தமிழ்ப் புலவர்களில் சிலர், ஆருகத சமயத்தைச் சார்ந்தவர்கள் துறவு முதலியவற்றையே பாடுவார்களே யன்றிக்காமச் சுவைபடக் காப்பியம் பாட இயலாதவர் என்று கூறினர் என்றும் இதைக் கேட்ட திருத்தக்க தேவர், காமச் சுவையுடன்சிந்தாமணியை இயற்றினார் என்றும் ஒரு கதை நிலவுகிறது.

காப்பியம் செய்யக் கருதிய திருத்தக்க தேவர், தம் கருத்தினைத் தம் ஆசிரியருக்குக் கூற, அதற்கு அவர், திருத்தக்க தேவரின் புலமையைஅறிய, அப்பொழுது அங்கே ஓடிய ஒரு நரியைச் சுட்டிக் காட்டி, 'நீங்கள் காவியம் பாடுமுன்னர், இந்த நரியைப் பொருளாக வைத்துஒரு நூல்இயற்றிக் காட்டுக' என்று கட்டளை இட்டார் என்றும், உடனே தேவரும் ஒரு சிறு நூல் பாடி அதற்கு 'நரிவிருத்தம்' என்றுபெயரிட்டுத் தம் ஆசிரியருக்குக் காட்டினார் என்றும் குறிப்பிடுவர். அது நரியின் செயலைக் கொண்டு நீதியை வற்புறுத்தும் நூல். நூலின்சிறப்பினை அறிந்த ஆசிரியர், 'இனி நீயிர் நினைத்தபடியே பெருங்காப்பியம் செய்க' என்று பணிக்க அப்பணியைத் தலைமேற்கொண்டு, அக்காப்பியத்திற்குக் கடவுள் வாழ்த்துப் பாடி வழங்குமாறு வேண்டினார் என்றும், ஆசிரியரும், 'செம்பொன் வரைமேற்பசும்பொன்' என்று தொடங்கும் பாட்டைப் பாடிக் கொடுத்தார் என்றும், பின்னர்த் திருத்தக்க தேவர், 'மூவர் முதலா உலகம்' என்னும்கடவுள் வாழ்த்தைப் பாடிக் காப்பியத்தைத் தொடங்கினார் என்றும் குறிப்பிடுவர்.

## 6.6. தொகுத்துக் காண்போம்

நாம் இக்கூறின் மூலமாகச் சீவக சிந்தாமணி என்னும் நூலின் இலக்கிய வரலாற்றையும் திருத்தக்க தேவர் பற்றிய செய்திகளையும் அறிந்து கொண்டோம்.

## 6.7. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. சீவக சிந்தாமணியின் நூல் அமைப்பினை புலப்படுத்துக
2. திருத்தக்கதேவர் குறித்த செய்திகளை தருக.

## 6.8. மேலும் பயில்வதற்கான நூல்

1. சீவகசிந்தாமணி – ஞா. மாணிக்கவாசகன் உரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1

# கூறு.7-சீவகசிந்தாமணி-கேமசரியார் இலம்பகம்

குறிப்புகள்

### 7.1. கேமசரியார் இலம்பகம் கதைச்சுருக்கம்

பல்லவ நாட்டை விட்டு நீங்கிய சீவகன், சித்திர கூடம் என்னும் தவப்பள்ளியைச் சார்ந்தான். அங்கிருந்த தவ முனிவர்களுக்கு நல்லுபதேசம் செய்தருளி, அவர்களைத் திருந்துமாறு செய்து, பின், தக்க நாட்டுத் தலைநகரான கேமமாபுரத்தை அடைந்தான். அந் நகரத்துள் சிறந்த வணிகன் சுபத்திரன். அவன் மனைவி நிப்புதி; மகள் கேமசரி. அவள் பிறந்தபோது சாதகம் கணித்தவர்கள், "இவள் எந்த ஆடவனைக் கண்டு நாணம் கொள்கிறாளோ அந்த ஆடவனே இவளுக்குக் கணவனாவான்" எனக் கூறியிருந்தனர். அதனால் சுபத்திரன் பலரையும் தன் மனைக்கு அழைத்து விருந்தளித்து உபசரித்து வந்தான். ஆயினும் கேமசரி யாரையும் கண்டு நாணம் கொள்ளவில்லை, ஒரு நாள் சுபத்திரன், அருகன் கோயிலில் சீவகனைச் சந்தித்து அவனது அழகைக்கண்டு வியந்து தன்னில்லத்திற்கு அழைத்து வந்தான். அப்பொழுது கேமசரி சீவகனைக் கண்டு நாணமுற்றுக் காதல் கொண்டாள். சுபத்திரன் மகிழ்ந்தான். சீவகன் - கேமசரி திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அவளுடனும் சீவகன் இரண்டு திங்களே தங்கியிருந்து பிரிந்து சென்றான். செல்லும்போது எதிரில் வந்த ஒருவனுக்கு அறிவுரை கூறி அணிகலன்களைக் கொடுத்தான். பிரிவாற்றாமையால் வருந்திய கேமசரிக்குத் தாய் நிப்புதி ஆறுதல் கூறினாள். கேமசரியும் ஆற்றியிருந்தாள்.

### 7.2 சீவகனின் காட்டு வழிப்பயணம்

*வானின் வழங்கும் வண் கை மணி செய் ஆர மார்பின்*
*தேனும் வழங்கும் பைம் தார் விசையை சிறுவன் தேம் கொள்*
*நானம் வழங்கும் கோதை நைய வெய்ய ஆய*
*கானம் வழங்கல் மேவி காலின் ஏகினானே*

மேகம் போலக் கொடை கொடுக்கும் கையினையும், முத்துக்களாலான மாலையை அணிந்த மார்பினையும், தேன் சிந்தும் மாலையினையும் உடைய, விசயையின் மகனான சீவகன், வண்டுகள் தங்கும் புனுகு கமழும் மாலையை உடையவளான பதுமை வருத்தம் அடைய, கொடுமை நிறைந்த காடுகளில் காலால் நடந்து சென்றான். வில்லிடம் உள்ள நாணின் முறுக்கு அந்த வில் அழியும்வரை தீராது. அது போலத் தாம் இறக்கும் வரை அழியாத திருந்திய கற்பினை உடைய மகளிரிடம், தான் அணிந்த இலை கலந்த மலர் மாலை செய்த துன்பம் நீங்க அம் மகளிருடைய கொங்கைகளைத் தன் கண்களால்

உற்றுப் பார்த்து, பிறகு அணைத்துக் கொள்ளும் தோள்களை உடையவனான சீவகன், மலைகளை இடையே கொண்ட காட்டை அடைந்து மகிழ்ச்சியோடு சென்றான். பழங்கள் நிறைந்த வாழைக் காட்டிலே, கரிய மையைப் பூசி வைத்தது போன்ற அழகில்லாத முகங்களை உடைய குரங்குகளும் முசு எனப்படும் கருங்குரங்குகளும் சீவகனைக் கண்டு பயந்து ஓடின. அவற்றின் அச்சம் அகலுமாறு அருளோடு பார்த்தவாறு சீவகன் செல்லும் அவ்வழியின் முன்னே குளிர்ந்த வெள்ளிய அலைகள் நிறைந்த கடலைப் போல, நடப்பதற்கு இனிமையான ஒரு காடு தோன்றியது. வேட்கை கொண்டு நீரைப் பருகுபவர்களைப் போல ஆர்வத்தோடு தழுவி, பொருள் தீர்ந்தவுடனே தம்மை நாடிய ஆடவரைப் பிரியும் மணம் கமழும் கூந்தலைத் கொண்ட வேசிகளைப் போல, மொய்க்கும் இயல்புள்ள வண்டுகள், அழகிய மலர்க் கொடி சாயும்படி தழுவி இனிய தேனைப் பருகிவிட்டு, தேன் தீர்ந்தவுடன் அதைப் பிரிந்து அருகே நின்று தூற்றுவதைப் போல ஆரவாரிக்க, சீவகன் அதைப் பார்த்துக் கொண்டே மெதுவாகச் சென்றான்.

குறிப்புகள்

## 7.3. சீவகன் தவப்பள்ளியை அடைதல்

*புல்லும் அல்லியும் போகு உயர் நீள் கழை*
*நெல்லும் நீர் விளை கேழலும் தோரையும்*
*அல்ல தீம் பழம் காய் கிழங்கு ஆதியா*
*நல்லவே நுகர்வார் பள்ளி நண்ணினான்*

இவ்வாறு சென்ற சீவகன் இறைவனை எளிதாக வாழ்த்தி வலம் செய்துவிட்டு, முனிவர்கள் வாழும் சித்திரகூடம் முன்னே உள்ளது என்று சுதஞ்சணன் கூறியதால் அதனைக் காண விரும்பித் தனியே சென்று, முனிவர்கள் வாழ்கின்ற ஒரு குளிர்ச்சி பொருந்திய மலாப்பொழிலில் உள்ள பள்ளியைக் கண்டான். புல்லரிசி, அல்லிக்காயில் உள்ள அரிசி, மிக உயர்ந்த மூங்கில் அரிசி, நீரில் விளைகின்ற குளத்து நெல், தோரை என்னும் நெல் ஆகியவற்றையும், இவையல்லாதவையான இனியபழம், காய், கிழங்கு முதலானவையுமான நல்ல உணவுப் பொருள்களையே உண்பவரான முனிவர்கள் வாழும் பள்ளியைச் சீவகன் அடைந்தான். அங்குள்ள முனிவர்கள் அரிய கோட்பாடுகளைக் கொண்டவர்; நிறைந்த ஐந்து தீக்களின் நடுவில் இருந்து வீட்டுலகை வளைத்திடும் பெருமை உடையவர்; விளக்கமான நான்மறைகளைப் பயின்ற நாவைப் பெற்றவர்; விளக்கமற்ற இத்தொழிலான காமத்தொழிலைச் சிந்தையில் கொண்டவர். வள்ளிக் கிழங்காகிய சுவைமிகுந்த உணவும், மலையில் உள்ள வாழையின் தேர்ந்தெடுத்த இனிய பழமும் ஆகிய இவற்றுள் சிலவற்றைத் தந்த பிறகு, மிகுதியான நீரைப் பொழியும் மேகம் போன்றவனே! விருந்து

உண்பாயாக! என்று கூறி, சீவகனை மகிழ்ந்து உபசரித்தனர். ”இந்தச் சீவகன் எல்லாக் கலைகளும் நிறைந்த கல்வியை உடையவன், உண்மைப் பொருளைக் கேட்டறிந்தவன். இவனிடமுள்ள அக்கல்வி, கேள்விகளை நாமும் அறிவோம்” என்று எண்ணி, தம் உயர்ந்த கட்டுரைகளில் ஒன்றிரண்டை உரைத்தனர்.

## 7.4. சீவகன் முனிவர்களுக்கு உபதேசித்தல்

குறிப்புகள்

*ஐயர் கூறலும் அண்ணலும் கூறுவான்*
*சையம் பூண்டு சமுத்திரம் நீந்துவான்*
*உய்யுமேல் தொடர்ப்பாட்டின் இங்கு யாவையும்*
*எய்தினார்களும் உய்ப என்று ஓதினான்*

அங்குள்ள முனிவர்கள் சில கட்டுரைகள் கூற, சீவகனும் தன் கருத்தைக் கூறினான். கல்லைக் கழுத்திலே கட்டிக்கொண்டு கடலிலே நீந்துபவன் பிழைப்பான் என்றால், இவ்வுலகில் காம நுகர்ச்சியோடு கூடவே விரதங்களை மேற் கொண்டவர்களும் பிழைப்பர்” என்று பல நூல்களைச் சான்று காட்டிச் சீவகன் ஓதினான். வீடு பெறுவதற்காகச் சடையைச் சிறப்பாக வளர்த்தல் உடம்பைக் காவி நிறம் ஊட்டிய ஆடையாலே போர்த்துக் கொள்ளுதல் மண்டையோட்டைக் கைக் கொள்ளுதல் தனியே இருத்தல் என்று கூறப்படும் இத் தன்மையவை, சிறப்பற்ற பிறவிக்கு விதையாகும் என்று சான்றோர் கூறுவர் என்று சீவகன் ஒதினான். அங்குள்ள முனிவர்கள், ” காளையே! நாங்கள் மேற்கொண்ட வழி நல்ல வழி இதுவல்லாததான நீ கூறிய வழி தூய்மையற்ற வழி. அதனை நாங்கள் தெரிந்திருக்கிறோம் திருமால் கூறிய இந்த வழியிலே தீமை இருந்தால் அதை நீ கூறுக” என்று கேட்க , சீவகன் பின் வருமாறு விளக்கினான். திருமால் எங்களுக்கு, காயும் கனிகளும் உண்பதனால் நல்லவை அல்லாத வினைகள் எல்லாம் நில்லாமல் நீங்கும் என்று உரைத்தார் என்று நீங்கள் கூறுகிறீர்கள். அவ்வாறானால், உயர்ந்த நீண்ட மரங்களிலே தொங்குகின்ற சிறந்த சிறகுகளை உடைய ஒடுங்கும் இயல்பைக் கொண்ட வௌவால்கள், அருகில் உள்ள பழங்களை உண்பதால் அவற்றின் பழவினைகள் நீங்கும் அல்லவா?.,“ அல்லிக்காயில் உள்ள அரிசியையும் புல்லரிசியையும் சாப்பிட்டு திருமால் கூறிய நெறியிலே நோற்பதனால் தீவினைகள் நீங்கும் என்றால் கொடிய வெம்மை உடைய காட்டிலே கற்களை உண்டு வாழும் புறாக்கள் யாவும், தம்மைப் பிணித்த இரு வினைகளைப் புறங்கண்டு வெற்றி பெறும் அல்லவா? நாங்கள் நீண்ட சடை முடியை உடையவர்களாக, நீரிலே குளித்து, நிலத்திலே தங்கி வாழ்ந்து வருத்திய உடம்பைப் பெற்றதாலே சிறந்த வீட்டைப் பெறுவோம்“ என்றால், கரடி காட்டிலே சென்று, குளத்திலே

*Self Instructional Material*

குளித்து வாழ்வதால் அது அக் காட்டிலிருந்தே வீட்டை அடைய வேண்டும். அவ்வாறு கரடி அடைவதில்லை. அதனால் உமது பொருளற்ற உரையை விடுங்கள்" என்று சீவகன் ஓதினான். இசைக்கலை வளர்கின்ற இனிய மொழி பேசும் மகளிருடன் துயிலும் அழகிய மெல்லிய படுக்கையை விடுத்துச் சென்று, இலைகளால் மூடப்பட்ட குடிசைகளில், பெருநிலமே படுக்கையாக, அந்த மகளிரின் கொங்கை வளர்ந்த மார்பினைத் தழுவினால் வினைகள் யாவும் அழியும் என்றால் மலையில் வாழும் குறவர்களுக்கும் அக்கொடிய வினைகள் யாவும் அழியும் அல்லவா?" என்று சீவகன் ஓதினான். " நுண்ணிய ஆடை எரிந்து அழிவதற்கு அஞ்சி, நெருப்பை அந்த ஆடைக்குள்ளே வைத்து மூடி, அதைக் கொண்டுபோய் மறைவான இடத்தில் வைத்தால், அப் பொங்கும் நெருப்பு ஆடையைச் சுட்டு எரிக்காமல் விட்டு விடுமா? கழுத்திலே புனுகைப் பூசியுள்ள மகளிரின் காவலுடைய வீட்டை நீங்கிக் காட்டுக்குச் சென்று, அங்கு முன்பு செய்த கலவித் தொழிலையே மேற்கொண்டு பாவத்தைப் போக்க நினைத்தால், போக்க முடியுமா? முடியாது என்று சீவகன் ஓதினான். காமநோயில் முதிர்ச்சி பெற்ற குரங்கைப் போலக் காமநுகர்ச்சியை நோக்க வேண்டாம். காய்முதிர்ச்சி பெற்றால் கனியாகி விழுவதைப் போல முதிர்ச்சியடையும் இவ்வுடம்பு விழுந்து விடும். மூங்கில் முற்றி வளர்ந்த இந்தக் காட்டிலே, காமனை வென்ற அருகக் கடவுளின் உருவத்துடன் நின்று விளக்கமுற இப்பொழுதே தோற்றுச் சென்று, முற்றிய சொர்க்க இன்பத்தை பெற்று, அனுபவிப்பதை விரும்புங்கள்" என்று சீவகன் ஓதினான். "ஞானம் என்பது, உண்மையை அறிவது. காட்சி என்பது அவ்வாறு அறிந்த பொருள்களைப் பொய்யின்றித் தெளிந்து நம்பிக்கை கொள்வது. ஒழுக்கம் என்பது ஐம்பொறிகளையும் ஐம்புலன்களில் செல்லாமல் தடுத்து, உயிரைக் கெடாமல் அவ்வுயிர் உய்யும் வகையில் நடப்பது' இம்மூன்றும் ஒழுக்கமும் ( மும்மணிகள் ) இப்படி நிறைந்த பொழுதே இருவினையும் கெடும் " என்று சீவகன் ஓதினான். மலை போன்றவனான சீவகன் இவ்வாறு கூறியதைக் கேட்டு, நல்வினை வந்தடையும் பக்குவம் பெற்ற முனிவர்கள் தம் மனைவியரைத் துறந்து, "இன்று தாங்கள் உன்னால் அறிவுண்டாக்கப் பட்டோம்" என்று கூறி, எழுந்து சென்று, காமனை வென்ற அருகனின் திருவடியை அடைந்து வீட்டை அடையும் நல்வழியில் சேரப் பெற்றனர். அச்சமயம் சூரியன் மறைந்தான். சீவகனும் இளைப்புத் தீர்ந்தான். இவ்வாறு இளைப்பாறியபிறகு, இருள் மறைந்த விடியற்காலையில், குற்றத்திலிருந்து விடுபட்டவர்களான முனிவர்கள் வழிகாட்டியதால், மேல் உலகத்தில் இல்லாத மேன்மை மிக்க உண்மை இலக்கணம் பொருத்திய உடம்பை

உடையவனான சீவகன், செல்ல வேண்டிய திசையும் அங்கே உள்ள ஆறும் தெரிந்து கொண்டு சென்றான் .

## 7.5. சீவகன் தக்க நாட்டை அடைதல்

*படம் புனைந்து எழுதிய வடிவில் பங்கய*
*தடம் பல தழீஇயது தக்க நாடு அது*
*வடம் கெழு வரு முலை மகளிர் மாமை போன்று*
*இடம் பெரிது இனிது அதன் எல்லை எய்தினான்*

குறிப்புகள்

ஒப்பனை செய்து தீட்டப்பட்ட ஓவியத்தின் வடிவம் போன்ற தாமரைக் குளம் பல சூழ்ந்ததும் முத்துவடம் பொருந்திய வளரும் கொங்கையை உடைய மகளிரின் அழகு போல அனுபவிப்பதற்கு மிகவும் இனிமையானதும், “ தக்கநாடு “ என்னும் பெயரை உடையதுமான நாட்டின் எல்லையைச் சீவகன் அடைந்தான். இனிய குளத்தில் உள்ள அழகிய மலர் விரிந்து வெளிப்படுத்திய மணமும், மலரை அணிந்த கூந்தலை உடைய மகளிர் பூசிய சந்தன வாசமும், அகிற்புகை கலந்த மணமும், அந்த நாட்டின் எல்லா இடங்களிலும் தங்கியிருத்தலால் அது தக்க நாடு என்னும் பெயரைப் பெற்றது. அந்தத் தக்க நாடு, சண்பக மலர்களால் தொடுக்கப் பட்ட மணம் மிகுந்த மாலையும், மணக்கும் சந்தனமும், சிறந்த பாக்கும், அழகிய வெற்றிலையும், உண்ணும் உணவும் என்னும் இவற்றை, எல்லார்க்கும் குறைவில்லாமல் பெற்றிருப்பது, வளமும் புகழும் வாய்ந்த தக்க நாட்டின் இயல்பு இத்தகையதே. கரும்பைப் பெற்றுள்ள வளத்தை உடைய வயலில், அழகான தாமரை மலர் சாய்ந்து வரப்பைச் சேர்ந்திருக்க, அத் தாமரையின் வெற்றியிலே கிடந்த செந்நெற் கதிர், அரங்கிலே ஆபரணம் அணிந்து வரும் நாடக மகளிரின் அழகிய நெற்றியிலே வண்டுகள் சூழ்ந்த தலைக் கோலம் என்னும் அணிகலனின் தோற்றம் போலத் திகழ்ந்தது.

## 7.6. கேமமாபுரத்தின் எழில்

வண்டுகள் வாழும் வளைந்த நீர்த்துறையில் கன்னியாகிய வாளைமீனின் மேல், நண்டின் நகம் பட்டது. அதனால் அந்த வாளை நடுக்கம் அடைந்து, நாணத்தால் அவ்விடத்தை விட்டு, உணவை வெறுத்து, ஒடுங்கியிருக்கும் நீரைத் தன்னிடம் பெற்றுள்ள அகழி சூழ்ந்த கேமமாபுரம் என்னும் நகரத்தின் இயல்பை இனி இயம்புவோம். மதில் என்னும் செல்விக்கு, தோண்டி அமைக்கப்பட்ட அகழியே அழகான ஆடை; மதிலின் அடியில் உள்ள ஆளோடிகள் ஆகிய பாம்புரிகளே, புகழத்தக்க மேகலாபரணம், மதிலின்மேல் உள்ள ஞாயில் என்னும் உருப்பே, அணிகள் அணிந்த கொங்கை; விளங்கும் அழகிய கோபுரமே, திங்களைப் போல ஒளிவிடும் முகம்; நீண்ட கொடியே மயிர் முடி என்று அறிந்தோர்

கூறுவர். அந்த ஒளி வீசும் பொன் மதில், மத்தரம் என்னும் மலையைப் பாற்கடலில் காட்டிக் கடைந்து அமுத்ததை ஊட்டினாலும், அந்த அமுதத்துக்காக ஆசைப்பட்டு அந்த நகரை விட்டு நீங்குபவர்கள் இல்லை. ஆதலால், ஈட்டப்பட்ட வளம் மிகுந்த செல்வம் சேர்ந்திருக்கும் அப்பெரியநகரம் நகரங்களுக்கெல்லாம் தலைமையானது என்று உச்சிச் சூட்டு வைத்ததைப் போல் திகழ்ந்தது. பேரொலியை உடைய அந்த வளம் மிகுந்த நகரம், வீரர்களே எறியும் சுறாமீன்களாகவும் , ஏந்திய பூங்கொடிகளே மடங்கிவிழும் அலைகளாகவும், மலையைப் போன்ற மாளிகைகளே பெரிய மரக்கலங்களாகவும், கிடைத்தற்கரிய திருமகள் போன்ற மகளிரே அமுதமாகவும் திகழ ஆரவாரமுடைய கடலைப் போலத் திகழ்ந்தது. அந்த நகரம், சந்திரனின் தண்டுவடத்தைத் தேய்க்கும் உச்சியை உடைய மாளிகைகளைக் கொண்ட நீண்ட தெருக்கள் தோறும், கூந்தல் அவிழ்தலின் முத்து மாலைகள் விழுந்து, பொன்னால் செய்யப்பட்ட சிறந்த அணிகலன்கள் சிந்துவதாலே, நிதி அறையைத் திறந்து பார்த்ததை ஒத்த ஒரு தன்மை பெற்றது; அச்சம் உண்டாக்குவதால் புதியவர்கள் அங்குச் செல்ல முடியாத அழகோடு விளக்கம் பெற்றது .

குறிப்புகள்

## 7.7. சுபத்திரன் மகள் கேமசரி

*மாசு இலாள் பிறந்த ஞான்றே மதி வலான் விதியின் எண்ணி*
*காசு இலாள் கண்ட-போழ்தே கதுமென நாணப்பட்டான்*
*தூசு உலாம் அல்குலாட்கு துணைவனாம் புணர்-மின் என்று*
*பேசினான் அன்று கொண்டு பெரு விருந்து ஓம்புகின்றான்*

உலகத்திற்குத் திலகம் வைத்தாற் போன்றது கேமமாபுரம் என்னும், கேடற்ற நற்புகழ் பெற்ற பொன்னகரம். அந்நகரில் மாலைகள் நீண்ட வெண்கொற்றக் குடையைப் பெற்ற, உலகத்தின் காவலன் இருந்தான். அவனே, அச்சந்தரும் வேலேந்திய நரபதி தேவன் ஆவான். அந் நகரத்தில் அரசனை ஒத்த ஆண்டகையனாகச் சுபத்திரன் வாழ்ந்தான். அவன் வடிவத்தில் ஒப்பில்லாதவன்; வேத விதிப்படி வாழும் வணிகன், கைக்கு நிகராக அமைந்த வேலை ஏந்தியவன். மணம் பரப்பும் மாலை சூடியவன்; மைபூசிய குளிர்ந்த கண்களைப் பெற்ற மகளிர் மயக்க, அவர்கள் இன்பத்தே தங்குவான். சுபத்திரன் நீண்ட வில் கொண்டு பயிற்சி செய்தலால் , பருத்து மலைபோலத் தோன்றும் தோளையுடையவன். மழை பெய்யும் முகிலை வென்ற வண்மை மிக கையையுடையவன், அவனுடைய மனைவி நிப்புதி என்பாள் கேமசரி என்னும் பெண்ணைப் பெற்றெடுத்தாள். கேமசரி , பிற மகளிரின் சிறந்த அழகை வென்றவள் என்று எல்லாத் திசைகளிலும் தன் பெயரின் நலத்தைப் பொறித்துப் பெண்மைக்குப்

குறிப்புகள்

பெருவிளக்காகி நின்றாள். மாசிலாத மங்கை கேமசரி பிறந்தபோது, சோதிடன் ஒருவன், முறையாக ஆராய்ந்து, "இவள் கண்டபோதே, இவளை நாணமுறச் செய்பவன், ஆடையணிந்த அல்குலையுடைய இவளுக்குக் கணவனாவான். அவனுக்கே இவளை மணம் செய்து கொடுங்கள்" என்று கூறினான். அன்று முதல் தன் மகள் ஆடவர் பலரையும் காண்பதற்காகப் பெருவிருந்து அளித்தலைக் கைக்கொண்டான் சுபத்திரன்.

ஒரு பிடிக்குள் அடங்கும் இடையினாளும், வளை சூழ்ந்த தோளினாளுமான கேமசரி, தொங்கும் பைம்பொன் மாலை, பெரிய மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை, விருப்பம் தோற்றுவிக்கும் மணிகளால் செய்யப்பட்ட மாலை ஆகிய இவற்றுக்கிடையே மின்னலைப் போல நின்று, செம்பொன் துணைப் பொருந்தி, ஊழ் தனக்குத் தரவிருக்கும் கணவனைத் தேடி நோக்கினாள். சேயிழையாளான கேமசரிக்குக் கணவனாகும் திருமகனைக் கண்டுபிடிப்பதற்காக அவள் தந்தை ஒவ்வொரு நாளும் ஆயிரத்தெட்டு இளைஞர்க்கு ஆரமுது போன்ற சோறளித்து வந்தான். இவ்வகையில் பூங்கொடி போலும் மென்மை பெற்ற கேமசரிக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் சென்றன. முருக்கமலரின் இதழில் குங்குலிகத்தை ஊட்டி வைத்தாற் போன்ற, முறுவலையுடைய சிவந்த வாயையும், திருமகளின் அழகமைந்த விருப்பந்தரும் விழிகளையும், பருத்த கொங்கைகளையும், தேன் பொருந்திய மலர்மாலையையும், நெறித்த கூந்தலையும், அழகு செய்யும் பொன்னணிகளையும் பெற்ற கேமசரியின் வடிவ முதிர்ச்சியைக் கண்டு, அவளுடைய தாய் பொறுக்க முடியாமல் வருந்தினாள். ஆடவரை மருட்டும் பார்வை பெற்ற மாவடுவையும் மழையையும் ஒத்த விழிகளைக் கொண்ட மதி முகத்தையும், பூப் போன்ற மென்மையையும் பெற்ற கேமசரி, ஒப்பனை செய்த அழகுடன், திருமணமின்றித் தனியே பிருப்பதைக் கண்டு, அம்பு பட்ட மான் போலப் பார்த்து, கைவளை சுழலும்படி மெலிந்து நின்றாள் கேமசரியின் தாய்,

## 7.8. சீவகனைக் கண்ட சுபத்திரன்

கேமமாபுரம் வந்த சீவகனைக் கண்டான் சுபத்திரன். அவனுடைய துடைகள் மயிருடன் பொருந்தி அழகுடன் விளங்கின . அவை மற்ற உறுப்புக்களைக் காட்டிலும் சிறந்திருந்தன. பிடரி ஒலிக்கும் இசையையுடைய அழகிய முழவை ஒக்கும், வாயின் அழகு, வீரம் பொருந்திய புலியின் வாயை ஒக்கும். மலை போல அகன்ற மார்பில் வரிகள் மூன்றுள்ளன குற்றமற்ற பொன்னை யொத்த நாவும் கூர்மையுடைய தாயிருந்தது. அரிய மலை போன்ற தோள்கள் , தேவர்களின் அரசனாகிய இந்திரனுக்குரிய ஐராவதம் என்னும் யானையின் அழகு மிக்க துதிக்கையின் வடிவு கொண்டன. பெரிய பொன்மலை

குறிப்புகள்

போன்ற தலைவனுக்குத் தாமரைப் மொட்டுப் போன்றதாய் , வலமாகச் சுழித்து பொருந்திக் குழிந்த இயல்போடு அழகோடு அமைந்த நாபியும் இனிதாகத் தோன்றும். தடித்து வரிகள் திரண்டு , பொன்னிற மூங்கிலரிசி அனையவாய் வெண் சிறு கடுகும் நுழைய முடியாதபடி நெருங்கி ஒளி செய்யும் கைவிரல்கள், தம் அளவிற்கேற்ற சூல் கொண்ட கெளிறு என்னும் மீளின் அழகைக் கெடுத்தன . முகத்திற்குப் பொருத்திய மூக்கு, வயிரத் தோட்டியை ஒத்தது. நீண்டு விளங்குகின்ற பற்களையுடைய வாய் பவழத்தை ஒக்கும். அகங்கையும், உள்ளங்காலும் பொருந்திய தாமரைப் பூவை ஒக்கும். ஆதலால் இவன் திருமகள் கணவனான திருமால் எனத்தேர்ந்த சுபத்திரன், இவனோடு பேசி " இவன் திருமால் அல்லன் " எனத் தெரிந்து பின் சீவகனைத் தேரிலே அமர்த்தி அழைத்துச் சென்றான். இவர்கள் இருவரும் தேரிலே வந்து கொண்டிருக்கும் போது, சுபத்திரன் வீட்டிலே, கூரிய நகத்தால் வலிய மலரச் செய்து தொடுத்த ஒரு செங்கழுநீர் மாலையை, நல்லிசை நல்கும் வீணையில் சூட்டி உலகுணர்ந்த கடவுளைப் பெண் கொடியாகிய கேமசரி பாடிக் கொண்டிருந்தாள். முத்து உமிழும் கடல் நீரின் நிறம் பெற்ற மணிவண்ணனும் மூன்று உலகும் பக்தியோடு பாடப் பெறுபவனுமாகிய அருகப் பெருமாளின் திருவடியைக கேமசரி பாடினாள். அதைக் கேட்ட அரம்பை போன்ற நிப்புதி தன் கருத்தும் தன் மகள் கருத்தும் ஒத்திருத்தல் கண்டு உவகை அடைந்து, இவளழகுக்கு ஏற்ற ஒரு வித்தகனை இவள் இப்போதே அடைய வேண்டும் என வேண்டினாள்.

## 7.9. சீவகன் சுபத்திரன் வீட்டை அடைதல்

மண் தின்னுமாறு மண்டிக் கிடந்த செல்வத்தைப் பெற்ற அப்பெரிய வீட்டினுள், அங்குள்ளோரின் வருத்தம் நீங்கப் பொலிவோடு சீவகன் புகுந்த போது, கல்துணைப் போன்ற கேமசரியின் பார்வையும் ஒன்றிப் பொருந்தின. சீவகனைக் கண்டவுடனே கேமசரியின் கை வளைகள் அவள் காலடியில் வீழ்ந்து மண்ணிலே பொருந்தின. மாமையும் உள்ளிருந்த நிரையும் நாணமும் கெட்டன, ஆசையை ஒளிரும் தீயாய் அவள் வளர்த்துக் கொண்டு , அத் தீயாலே அவளும் உருகினாள். திருத்தமுற்ற தெய்வத்தன்மை மிகுந்த அழகிய சீவகனுக்கு அவள் நோக்கம் துன்பம் தர, மனநோய் பெற்று வருந்தி, கச்சினால் இறுக்கப்பட்டுத் துன்பங் கொள்ளும் கொங்கையினையும் , மூங்கில் போதும் தோளினையும் உடைய இவள் தாக்கி வருத்தும் தெய்வ மகளோ, மானிட மகளோ என ஐயுற்றான்.' நல்ல வளமிக்க தாமரை நாணும் ஒளி முகத்திலே கொல்லும் தொழிலில் வல்ல வேலைப் போன்ற விழியை உடையவளான கேமசரி வருந்தினாள் என்று, சோர்ந்த குழலையுடைய கேமசரியின்

தோழியர்கள் இச்சொல்லைப் பரப்பியவராகி மல்லிலே வல்ல மார்பனாம் சீவகனை வந்து சூழ்ந்தனர். நினைவில் அடங்காத பெருங் கற்பினளாகிய நிப்புதி அங்கு வந்து, பசுக்கூட்டத்திடையே நிற்கும் ஏறு போன்ற சீவகனின் எழிலை நோக்கி, புனக்கொடி போன்ற கேமசரியின் அழகோடு புண்ணிய நம்பியாம் சீவகனின் அழகை ஒப்பிட்டுப் பார்த்து, அவ் வாள்கண்ணாள் அகன்றாள். சீவகனை , வாசநெய் பூசி , மணிக் குடத்திலிருந்து தெளிந்த நீரைப் பெய்து நீராட்டினர். இனிய புகையைத் தன்னிடம் கொண்ட ஆடையை அவன் அணிந்த பின்னர், தேன் சொரியும் மாலையையும், மற்றுள்ள அணிகளையும் அவனுக்கு மகளிர் அணிவித்தனர். உண்ணுமிடத்தைச் சந்தனத்தால் மெழுகி , முத்தாலே கோலமிட்டனர் . பின், தேன் மலர்மாலை யணிந்த , கயற் கண்ணைப் பெற்ற மகளிர் சீவகனை அழைத்துச் சென்று உட்புகுந்தனர். அழகிய பொற்கலத்திலே சிறந்த உணவை அளித்தனர். அவனும், அவர்கள் புகழ்ந்து கூற, உண்டான். பத்தியாகச் வரிசையாக செய்யப்பட்ட பசுந் திண்ணையின்மேல், ஓவியச் சிறப்புப் பெற்ற இருக்கையிலே, அலர்ந்த மாலையணிந்த சீவகன் அமர்ந்து, முத்துமணி போன்ற கரகத்திலிருந்து வார்த்த நீரைக் கொண்டு ஒழுங்காகக் கையலம்பி முடித்தான். ஒரு முழுப் பளிங்கை அறுத்து , அதன் பக்கத்தே பொன்னிடப்பட்ட பத்தியில், விளிம்பில் முத்துக்களை அழுத்திய, பவளத் தச்சர் கைவினையுடைய, தெளிந்த பொன் அடைப்பையில் பாக்கும், மணங்கமழ் வெற்றிலையும், " முகவாசமும், தனிப்பாகும் சென்றன.

## 7.10. சீவகனைக் கண்ட கேமசரி

*கண்ணுற காளையை காண்டலும் கை வளை*
*மண் உற தோய்ந்து அடி வீழ்ந்தன மாமையும்*
*உள் நிறை நாணும் உடைந்தன வேட்கையும்*
*ஒள் நிற தீ விளைத்தாள் உருக்குற்றாள்*

சீவகன் மணியாற் செய்த குண்டலம் அசைந்து ஒளி வீசும்படி வெற்றிலையைச் சுருட்டி மென்று ஒளியுண்டாகும் படி பல்லைத் துடைத்து, உமிழ்ந்து, இனிமை கமழும் வாசத்தை உட்கொண்டான். பண்ணொத்த சொற்களை அடையாளின் பரந்த ஏந்திய அல்குல், வண்ணமுறும் மேகலை ஆகிய இவை பொருத்திய ஆடையின் உள்ளே நிலை பெற்று நின்று புத்தொளி உமிழுகின்றன. இவை பாவியேனுடைய கண்ணையும் மனத்தையும் தமக்கு இருப்பிடமாகக் கொண்டன. என் உடல் முழுவதையும் தன் மணம் கமழும் கூந்தலினால் கட்டி நடுவே வளைந்த வலிய வில்லாகிய தன் புருவத்தால் புடைத்து , வருத்தும் மலரனைய நெடுங் கண்களால் உயிரைப் பிளந்து, கொடியவளுடைய

இளங்கொங்கைகள் என்னைக் கொல்லும், கொல்லும். மணமுள்ளவையாய், கச்சினாலே கட்டப்பட்டவையாய், கொடிய தன்மையுடையவையாய், குங்குமம் பூசப்பட்டவையாய், அடியிடம் பரந்து முத்துகளை அணிந்தவையாய் விளங்கும், விருப்பந் தோற்றுவிக்கும் கொங்கைகள் தம்மைச் சுமந்திருக்கும் இடையாகிய இடத்தைத் துன்புறுத்துவனவாம். இவை என்னை என்ன செய்யா? எல்லாத் துன்பத்தையும் தரும்.' கரிய நிறமுடையனவாய் உள்ளே மணமுடையனவாய், கட்டி முடிக்கப்பட்டனவாய், கடைக் குழைதலுடன் கழுத்தின் புறத்தே யிருக்கும் கூந்தல் , சிவந்த நீண்ட, பெரிய விழிகளைப் போலவும் வருத்தம் தருகின்றன. ஆராயின் இவை எல்லாம் செய்ய வல்லன. காதல் தன்மையைத் தன் கண்ணுள்ளே அடக்கி , அக்கண் என்னும் தூதினால் தான் கருதிய பொருளை எனக்கு அறிவித்து, தன் சுற்றத்தார்க்குத் தன் காதல் தன்மை வெளிப்படாதவாறு மறைத்த கேமசரியின் நோக்கம் கடலில் தோன்றிய அமுதையும், இந்த உலகையும் தனக்கு விலையாகக் கொள்ளும். முல்லை மலர் மாலையையுடைய, இணையாக விளங்கும் வெய்ய கொங்கைகள், மற்றைய உறுப்புகளுக்குக் கொடாத, மிகுகின்ற வலிமையைத் தீர்த்து முத்துக்களை அணிந்து, மின்னும் இகழாத மணிகளில் நல்லனவற்றைக் கரைத்துக் கொண்டு எழுதி, நல்ல பொற்கச்சாகிய முகபடாத்தையும் வைப்ப, இதனால் வெளிப்பட்டுக் கொல்ல முடியாமல் படாத்துள்ளேயே நின்று, ஆளைக் கோபித்து நோக்கி , உள்ளம் அழன்று கண் கரிந்தன. வண்டுகள் உண்ணக் கற்ற கூந்தலையுடைய கேமசரியின் கண்கள் , ஊனைத் தின்னக் கற்ற எமனது கையிலுள்ள மணிகள் பதித்த வேலாகும்; கூன் பிறை போன்ற புருவம், ஒப்பற்ற கூற்றின் உருவமாகும். குவிந்த கொங்கைகள், கூற்றுவன் கையிலுள்ள பாசமாகும் . இவ்வாறு இருக்கவும் நான் உயிர் வாழ ஆசைப்படுகிறேன் . எனவே நான் மக்களுக்குள்ளே இரங்கத்தக்கவன். கற்பகமாலையுடையஉருவிற்கு விளக்கமாம் பொற்பூங்கொடியான கேமசரி, திருமகளுக்கும் முருகனுக்கும் காமனுக்கும் எனக்கும் நெருங்கிய சடையை யுடைய சிவபெருமானுக்கும் பகையாக இருக்கின்றாள்.

## 7.11. சீவகன் கேமசரி திருமணம்

*இடி உமிழ் எறி திரை முழக்கில் பல்லியம்*
*கொடி அணி வியல் நகர் குழுமி ஆர்த்து எழ*
*கடி மணம் இயற்றினார் கடவுள் நாளினால்*
*வடி மலர் கோதையை மைந்தற்கு என்பவே*

கலைத் தொகுதிகளின் நலம் பலவற்றையும் அறிந்த சீவகன், தன்மேல் அன்புடைய கேமசரியின் அழகினை இவ்வாறு நினைத்தபடி இருக்க, சுபத்திரன், மலைகளின் திரள் போன்ற மதம் பொருந்திய யானைகளையுடைய அரசனுக்கும், தன் சுற்றத்தார்க்கும் தெரியும்படி மனச் செய்தியை அறிவித்தான். கொடியணிந்த பெருநகரில் , நல்ல நாளில் சீவகனுக்குக் கேமசரியை இடியின் ஒலியும் அலைகடல் முழக்கமும் போலப் பல திருமண வாத்தியங்கள் ஒலிக்கத் திருமணம் செய்து கொடுத்தனர். மணியாற் செய்த குடத்தை அழுத்தி வைத்தாற் போன்ற தோளையுடைய சீவகனது, உருவ அழகிற்குக் கூறப்பட்ட நூலில் வல்லவர்க்கும் புகழ இடம் கொடாத அழகினை, அணிகளுக்கு இடமான கேமசரியின் ஒளிரும் அழகுடனே பிணித்ததால், அவன் நுகர்ந்த இன்பம் நீங்காததாயிற்று. அழகிய ஆடை பெரும் அலையாக, பெரிய, விருப்பமூட்டும் கொங்கை ஏந்திய மலையாக, தனது இரக்கம் நீரின் அசைவாக, வலிய இரு தோள்களும் பாம்பாகக் கொண்டு அவள் கடைதலினால் அக்காமக் கடல் அவனுக்கு அமுதம் ஈந்தது.

சீவகனுடைய மாலைகள் அவன் மார்பிலிருந்த சந்தனச் சேற்றிடையே குழைந்து உடையும்படி, மலர்மாலையணிந்த நெடிய கூந்தலையும் பசிய வளையல்களையும் பெற்ற கேமசரியின், சரியாத கொங்கைகள் முழுகுமாறு பாய்தலால் அழகிய சிலம்பும் அல்குலிலிருந்த மேகலையும் வாய்விட்டு ஆரவாரம் செய்தன. அவளுடைய மாலையும் கூந்தலும் குலைய, குவிந்த கொங்கைமேல் அணிந்த வாச மாலையின் மலர்கள் சிந்த, அணிகலனும் கடல் முத்தும் பிணங்கி ஒன்றில் ஒன்று மூழ்கப் புணர்தலினால் காதலும் களிப்பும் மிகக் கொண்டு, இரவும் பகலும் பிரியாதவராய், இறப்பும் பிறப்பும் அற்ற தன்மை உடைய தேவர்களைப் போன்றவராயினர். ஊழினால் அன்பு மிக்கவரான ஒப்பனை செய்த மாலையணிந்த சீவகனும், மலரணிந்த கொடி போன்ற கேமசரியும், சிறந்த மலர்ச் சோலையிலும், குளிர்ந்த குளத்திலும் ஆடி, சுனையிலுள்ள குவளையைப் பறித்து மலர் சூழ்ந்த கண்ணியாகச் செய்து, புணர்ச்சிச் சிறப்பை நுகர்ந்து வாழ்ந்தனர்.

## 7.12. சீவகன் கேமசரி இரு திங்கள் இன்புறுதல்

*பொழிந்து உகு காதல் பூண்டு புல்லுகை விடாது செல்ல*
*கழிந்தன இரண்டு திங்கள் காளையும் மற்றோர் நாளால்*
*பிழிந்து கொள்வு அனைய பெண்மை பெய் வளை தோளி-*
*தன்னோடு*
*அழிந்து வீழ் அருவி குன்றில் ஆய் மலர் காவு புக்கான்*

நிறைந்து புறத்தும் தோன்றுகின்ற காதல் கொண்டு, இவ்வாறு இணைதலைக் கைவிடாது வாழ, இரண்டு மாதங்கள் சென்றன. வடித்தெடுத்தாற் போன்ற பெண்மையையுடைய, வளையணிந்த தோளினாளாகிய கேமசரியுடன் சீவகன், பெருகி விழும் அருவியையுடைய மலர்ச் சோலையில் புகுந்தான். பொன்னிறக் காய்களை உடைய கமுகும் பொன் போன்ற கனிகளைப் பெற்ற வாழையும் சூழப்பெற்று பூங்கிளையுடைய சுரபுன்னை மரமும், தீம்பு மரமும் பொருந்திய கருப்பூரச் சோலையிலே, மாங்கிளைகளில் மயில்கள் ஆட, சண்பகப் பூக்கள் சிந்துகின்ற இனிய சுளை பெற்ற குன்றிலே சிறப்புற ஏறினான். தினை விளைந்த புனத்திலே சிவந்த வாயையுடைய சிறிய கிளிகளைக் கேமசரி ஓட்ட, அழகிய வளையணிந்த அவளது குரலைக் கிளியின் குரலாகவே கருதி அவை போகவில்லை அதனால் அக்கோதையாள் நாணி பொன்னரி மாலையால் ஓட்ட, அப்போதும் அவை போகவில்லை. ஒலிக்கும் கழலணிந்த சீவகன் அதைக் கண்டு தானே சென்று அக் கிளிகளை ஓட்டினான். எரியும் அழல் கொண்ட வேல்போன்ற கண்களினால் என் உயிரைக் கொள்ளை கொண்ட மலர்க்கொம்பே, செவ்விய தழையினையும் மாலையினையும் ஏந்தி நின் சிற்றடிகளை வணங்க வந்தேன் இனி உயிருடனிருந்து நின் ஏவல் செய்யும் கடமை பெற்றேனோ? உடம்பைவிட்டு இறந்து விடுவேனோ? பைந்தழை யுடுத்த அல்குல் பாவையே, மேற்கூறிய இரண்டில் ஒன்றை அருள்க" என்று அவளைப் புகழ்ந்தான். வீணையும் வேய்ங்குழலும் பாலும் அமுதமும் கரும்பும் தேனும், இன்னிசை தரும் யாழும் இன்சுவைக் களியும் ஆகிய இவற்றை எல்லாம் வென்ற கிளிபோல் பேசும் வணிக மகளிர் முதல் கெட காரியம் செய்யார் என்று தெளிந்து அவளது பூணணிந்த கொங்கைகள் விம்மத் தழுவி இன்ப நலம் பருகினான். பிறைச் சந்திரன் செவ்வானத்தேயிருந்து ஒளிர்வது போல், குங்குமம் அணிந்த மார்பில் பூண்ட கதிர் வீசும் முத்து மாலை மிளறும்படி தனிய கேமசரியுடன் இருந்தபோது, மணமலர் மாலையினான் , வண்டைக் கண்டு இரவு பிரியக் கருதி ஒரு மொழி உரைத்தான். கரிய வண்டே, நீ இம்மாதரின் மலர் மாலையில் தேனைப் பருக வந்தபோது, அங்குள்ள நின் பெடை வண்டு அங்கேயே இறவாமலும், வருத்தம் இன்றியும் இருக்குமோ? நின் பெடை வண்டு இறந்தால் நீயும் இறந்து விடுவாய் என்பதைக் கருதி, உன்னிடத்திலுள்ள தொழிலை முதலிலேயே தன்னிடத்துக் கொள்ளாமையால், இறந்து விடாமல் ஆற்றியிருக்கும் அல்லவா" என்றான் சீவகன். கதிரவன் காலையில் குழவியாய்ப் பிறந்து, நண்பகலில் குமரனாகி வெம்மை மிகுந்து, மாலையில் ஆசை நீங்கிய முதியவனாகிச் சிறந்த கதிர்கள் சிறப்பிழந்து

கெட்டு, மேற்றிசையில் விழுதலின், சீவகன், முரலும் வண்டு ஊதியாடியலர்ந்த மல்லிகை மாலையைச் சூட்டி, குழலிசை போன்ற மொழியாள் கேமசரியோடு வளமான அகிற்புகை பூட்டப்பட்ட அமளியை அடைந்தான். திருமகள் உறையும் மார்பினனான சீவகனது அழகிய மாலை கலக்குதலாலே இன்ப வேதனை யடைந்து இளைத்த கோதையாம் கேமசரி , சிறந்த ஒளிபொருந்திய பெருங் கண்களாகிய நீலத்தைக் குவித்த அளவில் விழி மூடியவுடன் அப்பொன் போன்றாளை நீங்கக் கருதி அமளியிலிருந்து எழுந்து பவழத்தாலாகிய வலிய தாழைப் பெற்ற பலவகை மணிகள் பதித்த கதவை அடைந்தான் சீவகன்.

## 7.13. சீவகன் கேமசரியை விட்டுப் பிரிதல்

*அல்லியுள் பாவை அன்னாள் அறிவுறா வகையின் ஒற்றி*
*மெல்லவே திறந்து நீக்கி மின்னுவிட்டு இலங்கு பைம் பூண்*
*கொல் சின மடங்கல் அன்னான் கொழு நிதி மாடம் நீந்தி*
*பல் கதிர் பருதி போல பாய் இருள் ஏகினானே*

ஒளி வீசித் திகழும் அணிகள் அணிந்த கொல்லும் சினமுடைய சிங்கம் போன்ற சீவகன், தாமரை மலரில் உள்ள திருமகள் போன்ற கேமசரி அறியாதவாறு, மெல்லத் தாழைத் தள்ளிக் கதவைத் திறந்து, வளமிகுந்த செல்வத்தை உடைய மாடங்களைக் கடந்து, நிறைந்த கதிர்களையுடைய சூரியனைப் போலச் செறிந்த இருளிலே சென்றான். ஒளி விளங்கும் அணிகள் அணிந்த பொய்கையில் உள்ள, தண்டையுடைய தாமரை மலர் போன்ற அழகுடன் விளங்கும் முகத்தினையுடைய கேமசரி, தன் வளரும் கொங்கைகளின்மேல் படித்து, நாள்தோறும் வளர்கின்ற பிறைமதி போன்று இன்பம் தரும் காதலனைக் காணாது வருந்தினாள். கனவில் அவள் போகக் கண்டாள்.

## 7.14. கேமசரியின் பிரிவுத்துயர்

*கனி கொள் காமம் கலந்து உயிர் ஒன்றலின்*
*இனியர் மங்கையர் என்பது கூறுவாய்*
*பனி கொள் மா மதி போல் பசப்பு ஊர யான்*
*தனியள் ஆவது தக்கதுவோ சொலாய்*

அரத்தால் அராவுதலால் உண்டாகிய பொன் தூள் போன்ற தேமல் படர்ந்த கொங்கையையுடைய கேமசரியை நீங்கிய சீவகன், அங்ஙனம் இரவில் செல்ல, ஒளி விளங்கும் வளையணிந்து மெலிந்த மென்மையான தோளுடைய, வரம் தரும் தெய்வத்தைப் போன்ற கேமசரி, இருண்ட இரவில் தன் கண்ட கனவால் தூக்க மயக்கம் நீங்கி, விழித்து எழுந்து, எங்கும் தேடிப் பார்த்துக் கணவனைக் காணாது மிகவும் வருந்தினாள். அழகிய மணிகள் பதித்த செம்பொன்னாலாகிய பூங்கொடி போன்ற கேமசரி

தன் கண்ணின் கருமணிப் பாவை போன்ற கணவன் மறைந்து சென்ற இடத்தைக் காணாதவளாய் மாடத்தில் எரியும் மணிவிளக்கின் ஒளியைத் தேடி அலைந்து, ஒரு நாகப் பாம்பு தன் அரிய மாணிக்கமணியை இழந்து வருந்துவதைப் போல் வருந்தினாள். ஐயனே! நீ எங்கே இருக்கின்றாய்; நான் உன்னைப் பிரிந்து தனியாக இருக்க அஞ்சுகிறேன்; நீண்ட தோள்களை உடையவனே, இப்போதே உடலை விட்டு என் உயிர் போகத் துணிகின்றது ; எனவே நான் நிறையழிந்தேன் ஆதலால் என் தலைவனே! என்னை வந்து தழுவிக் கொள்க" என்று தேன் போலும் இனிய சொற்களால் சொல்லி வருந்தினாள். அன்பு களிந்த காதல் உயிரோடு ஒன்றி உறவாடும் போது மங்கையர் இனிமையுடையார் என்று முன்பு நீ கூறினாய்! அவ்வாறு கூறிய நீயே, இப்போது, பனி மூடிய முழுமதி போலப் பசலை படர்ந்து நான் துன்புற என்னைத் தனியே தவிக்க விடுவது உனக்குத் தகுதிதானா? சொல் என்று சொல்லி வருந்தினாள்.

ஐயனே! உன்னை நாடிச் செல்லும் என் நெஞ்சுடன் கை வளையும் கழலும், கண்களும் மயங்கி நாற்புறமும் சுழலும், உடலும் உருகும் பொன்போல் கொதித்து உருகுகின்றது; அதனால் பொறுக்க முடியாது துன்புறுகின்றேன்; நிழலைப் போல நீத்தற்கரிய காதலையும் நீ கைவிட்டாயோ? என்று சொல்லி வருந்தினாள். ஆராய்ந்து தொடுத்த மல்லிகை மாலையை நான் விரும்பிச் சூடினும், பேதையே! பூங்கொடி போன்ற உன் மெல்லிடை வருந்தும் " என்று கூறும் வஞ்சகனே! இப்போது நான் கருகி வருந்த, அதை நீ காண்பதற்கும் வலிமையுடையையோ? எனச் சொல்லி வருந்தினாள். இவளது தொண்டைக் கனி அனைய செவ்வாயையும், தொய்யில் கொடி எழுதிய கொங்கையையும் கண்டு பிரமனும் மனம் வருந்துவான் என்று முன்னிலைப் புறமொழியாக முன்னர்ப் புகழ்ந்து கூறுவாயே, தேன் நிறைந்து வழியும் மாலை அணிந்தவனே! நீ முன்பு வண்டினைப் பார்த்துக் கூறிய மொழியின் பொருளை நான் உணர்ந்து கொள்ளாது போனேனே" என்று சொல்லி வருந்தினாள்.

வில் வல்லோனே! என் உயிர்க்குத் துணையானவனே! ஊடல் தீர்ந்து என் மார்பைத் தழுவ நினைப்பின், தரையிலே உன் தலையைத் தாழ்த்தி என் கால்களை அன்புடன் தடவுவாய்! அத்தகைய நீ இப்போது என்னைப் புறக்கணித்துச் செல்லக் காரணம் யாதொன்று தெரியவில்லையே; தெரிய அருளுவாய்!" என்று சொல்லி, வருந்தினாள்.. கடல் முத்துமாலையணிந்த கொங்கைகளினால், தன் மார்பில் எவ்வளவு இடம் உண்டோ அவ்வளவிலும் தோயும்படி நான் தழுவ, என்னோடு உறைகின்றவன், இனி மீண்டும் என்னிடத்தில் வரவில்லையானால் நான்

இன்னும் உயிர் வாழும் நிலைமை அறியாமையே யாகும்" என்று சொல்லி வருந்தினாள். நறுமணமிக்க மாலையணிந்தவனே ! என்னிடத்தில் காட்டிய அன்பினாலே என் சுற்றத்தார் என்னை நாள்தோறும் பெறுகின்ற அன்புடையவள் என்று கூறுவதல்லாமல், குறையும் அன்புடையவள் என்று கூறுவாரில்லை. எனவே உன்னை நினைத்து, உருகும் எலும்புடனே மனம் அழிகின்ற எனக்கு , அருள் புரிய வருவாய்." என்று சொல்லி வருந்தினாள். தினைப் புனத்தில் வாழும் மயிலே, பொழிலே, நீர் மிகுந்த பொய்கையே, அழகு பொருந்திய சுரபுன்னை மரமே, மலையே, கடலே, பல்வகை மணிகளால் ஆன அழகிய அணிகளை அணிந்த என் கணவனை நான் அடைவேனா? உங்களைப் போற்றி வணங்குகிறேன் , அவன் இருக்கும் இடத்தை உரைப்பீராக என்று சொல்லி வருந்தினாள். வளைந்த வெம்மையான வில்லிலிருந்து வரும் அம்பினும் கொடியதாகிய, நள்ளிரவு செய்யும் வருத்தம் பெரிதாயிருக்கின்றது. நீண்ட ஒளிக்கதிர்களையுடைய வெண்ணிலவும் பிரிந்திருத்தற்கு இரங்காது என்னை வருத்தும். இவ்வளவு துன்பத்திற்கும் எனக்குத் துணையாக இருந்து, அறக்கடவுளே! அருள் செய்யமாட்டாயோ? என்று சொல்லி வருந்தினாள்.

கண் மலர்களே! அவன், " இக் கண்கள் கயல் மீன்கள் " என்று கூறிப் புகழ்ந்தபோது அப்புகழில் மயங்கி நீங்கள் அன்புற்றுக் கிடக்க, அயலேனாகிய நாள் அறியாதவாறு அவன் உங்களுக்குக் கூறியதெல்லாம் இப்பிரிவைப் பற்றித்தானா? இனியேனாகிய எனக்கு முன்பு இனியராக இருந்தீரே, இனி உய்யும் வழியைக் கூறுவீராக!" என்று சொல்லி வருந்தினாள். அவன் நினைவை விரும்பும் தோளிணைகளே! பசித்து வைத்தது போன்ற தன்மையனவாகக் கடலில் பிறந்த சங்கு வளையல்களையும் ஒளியையுடைய முத்துக்களையும் அணிந்து, தோளில் கரும்பையும் கொங்கைகளில் தொய்யில் கொடி முதலியவற்றையும் எழுதி, நம்மைப் புகழும் மணம் கமழ் மாலையணிந்தவன் எவ்வழிச் சென்றான்? தழுவுதலை நெகிழ்ந்து செல்லவிட்ட நீவிர் அவன் சென்ற இடத்தை அறிவீர்! உம்மை நான் இன்றும் புகழ்தற்கு அவள் சென்று இடத்தைக் கூறுவீராக! " என்று சொல்லி வருத்தினாள். கேமசரி " கொடிய கொங்கைகளே ! நெய் பூசிய ஒளிமிக்க வேலினையுடைய சீவகன் மார்பினைத் தழுவிக் கிடந்த நீங்கள், அவனைப் பிரிந்து போகாதபடி பிணிக்கத் தவறிவிட்டீர்கள்; இனி என் செய்வேன்! " என்று கண்ணீர் குளமாகுமாறு அழுதாள்.

பால்போலும் இனிய மொழி பேசும் கேமசரி, தான் அழுத கண்ணீரிலே தோன்றிய, தன் அழகு கெட்ட நிழல் வாடி வருந்தி

அழுவதனைக் கண்டு, " என் அன்பார்ந்த தோழியே, நீ வருந்தாதே! அழவும் செய்யாதே! அவர் நமக்குப் பகையாவாரோ? ஆகார்! " என்று கூறித் தேற்றினாள். தான் அணிந்த மணமிகு தலைமாலைகள் விழுந்து கண்ணீரையுடைய நிலத்தை மறைக்க, ஊழ் விளையால் துன்புறும் கேமசரி , நிழலாகிய தோழியைக் காணாதவனாய், ஒளிவீசும் வளையல்கள் அணிந்த அவள் அவனைத் தேடுதற்குப் போனாள்; தாமதிக்கவும் செய்தாள்; இனி, அவனைத் தேடிக் கண்டு அழைத்து வருவாள் என்றாள். யாழிசை போலும் இனிய மொழியுடைய கேமசரி, அழகிய இளமை பொருந்திய மயிலே! குயிலே! இளமை பொருந்திய நடையழகால் மேம்பட்ட அன்னப் பெடையே! அழகான கிளியே" என்னுடன் விளையாடும் என் தலைவனைத் தேடுங்கள் " என்று கூறுவதற்குள் மெய் சோர்ந்து விழுந்தாள்.

குறிப்புகள்

## 7.15. கேமசரிக்குத் தெய்வம் ஆறுதல் கூறுதல்

மற்போரில் சிறந்த சீவகனது பிரிவுத் துயர் என்னும் தீயில் மலையில் வளர்ந்த இள மூங்கில் போன்ற தோளையும், முத்துப் போன்ற பற்களையும், சிவந்த வாயையும், வில் போன்ற புருவத்தையும் உடைய கேமசரி வெந்து கிடக்கும்போது , ஒளி பொருந்திய அவ் வீட்டில் வாழும் தெய்வம் அவள் நிலையைக் கண்டு வருந்திக் கூறும். பகைவர்தம் உடலில் புண் உண்டாக்க விரும்பும் புலால் மணம் கமழும் வாளேந்திய கையினையும , பொற் கழலினையும், தொடுத்த புதிய மாலையினையுமுடைய, கண் காணவிரும்பும் அழகுடைய சீவகனைக் காமனே கண்டாலும், அக் காமனுக்கும் இசையை விரும்பும் மொழியையும், பவளம் போன்ற செவ்வாயையும், தளராத கொங்கையையும் அகன்ற அல்குலையும் உடைய பெண்மையை அடைய விரும்பும் ஆசை மனத்திலே தோன்றும் என்றால், பெண் மான் போன்ற கேமசரிக்குப் பிழைக்கும் தன்மையுண்டோ?." காட்டில், தேனாகிய நெய்யில் கனியைத் தோய்த்தது போன்ற இனிய கவளத்தை உண்ணும்படி பெரிய துதிக்கையால் ஊட்டித் தழுவுகின்ற மதம் பொருந்திய ஆண் யானை பிரிந்து சென்றால், பெண் யானைக்கு வாழ்வுண்டோ? அதைப் போல, கேமசரியின் கால் அடியில் தன் தலையைத் தாழ்த்தி வணங்கி ஊடல் தீர்த்துக் கூடும் கொடை வள்ளலான சீவகன் பிரிந்த பிறகு கேமசரிக்கு வாழ்வு உண்டோ? தன்னைத் தழுவிய கணவன் கூறிய வண்டின் வடிவாய், மென்கொங்கையையுடைய இல்லுறை தெய்வம் அவள் எதிரிலே வந்தவுடன், வருந்திக் கொண்டிருந்த, விளங்கும் போன் போன்ற தேமல் படந்த மேனியையும், நீல நிறக் கண்களையும் உடைய கேமசரி, வண்டை நோக்கித் தன் கணவன் முன்னர்க் கூறியதை உணர்ந்து கணவனுக்கு

குறிப்புகள்

அத்தகைய பழியும், இறந்துபடுதலும் நேருமோ என அஞ்சி, போதற்குத் துணிந்த உயிரையும் போகாது தாங்கினாள். பஞ்சின்மேல் மிதித்து நடந்தாலும் வருந்துகின்ற அடியுடைய கேமசரி, "வஞ்சித்துக் கூறும் வாயுடைய நீல நிற வண்டுகளே! நீவிர், இறந்து கொண்டிருக்கும் என் துயரம் நீங்குமாறு மழை மேகம் படியும் பொன் மாடத்திலே வந்து தங்கும், தொழத்தக்க இல்லுறை தெய்வமாவீராக " என்றாள். விம்மிப் பருக்கும் அழகிய கொங்கைகளைத் தாங்க முடியாமல் இடை வருந்தி மெலிய , ஒரு பந்தையும் எடுக்க முடியாத கேமசரி, பால் கடைந்தெடுத்த வெண்ணெயால் ஆன பாவை வெயிலில் உருகியதைப் போல உடல் நைந்து கெட , வான நங்கைக்கு இட்ட நெற்றிச் சுட்டி போன்ற அழகுடன் வெள்ளி முளைத்தது.

## 7.16. தாயான நிப்புதி கேமசரியைத் தேற்றுதல்

*பிறங்கின கெடுங்கள் யாவும் புணர்ந்தவர் பிரிவர் பேசின்*
*இறங்கின வீழும் மேலாய் ஓங்கிய எண்ணில் யோனி*
*பிறந்தவர் சாவர் செத்தார் பிறப்பவே என்ன நோக்கி*
*கறங்கு இசை வண்டு பாடும் கோதை நீ கவலல் என்றாள்*

கேமசரி , கொழுந்து விட்டெரியும் தீயில் பட்ட மாந்தளிர் போல மயங்கி வாடித் தன் தொண்டைக் குரல் ஒலியை, முறுக்கிவிடப்பட்ட நரம்பையுடைய பாழொலியினின்றும் வேறாக நீக்கி வருந்தி அழ அதனால் உண்டான அழுகை ஒலி கேட்டு வீட்டிலுள்ளார் திரண்டு வந்தனர். அப்பொழுது அழகான மலர் மாலையுடைய கேமசரியின் தாயான நிப்புதி அவளிடம் கூறலுற்றாள். நற்குடியிலே பிறந்து, கொடிய பிறவித் துயராகிய வேரை அறுத்து, உண்மை நெறியில் நின்று, எவ்வகையிலும் தவறின்றி, நாம் முன் செய்த தவப் பயனாக வந்து, அயன் வச்சிரத்தின் நுனியால் எழுதிய அழியாத எழுத்தைப் போன்றவன் உனக்களித்த இன்பத்தைத் தவறாமல், மேலும் நீ பெறுவாய் " என்றாள். இன்னிசை பாடி வண்டுகள் மொய்க்கும் மாலை அணிந்தவளே! உலகில் அழகுள்ளன யாவும் அழியும்; கூடியவர் பிரிவர்; ஆராய்ந்து பார்த்தால் உயர்ந்தவை தாழும். கணக்கற்ற பிறவிகளில் பிறந்தவர் இறப்பர்; இறந்தவர் பிறப்பர். எனவே இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும் இவ்வுலக இயல்பை உணர்ந்து நீ கவலைப்படுவதை விடுக என்றாள். எரியும் தீயின் தன்மையைத் தன்னிடத்தே கொண்ட காமப்புணர்ச்சியாற் பெறும் இன்பம் நீர்த்துளி போன்றதாகும்; அனால் பிரிவால் நேரும் துன்பமோ பெரிய கடலை ஒத்ததாகும்; இத்தகைய பிரிவுத்துயரால் நைந்து உருகி உடல் அழியுமானால், இம்மை மறுமைகளில் பெறும் தன்மையை ஒருவரும் எய்தார் என ஆன்றோர் கூறக் கேட்டிருக்கிறோம் அல்லவா ? எனவே

பிரிவால் வருந்தாதே! மக்களின் இளமைப் பருவம் நீர்க்குமிழிபோல் விரைவில் அழியும்; அவர்கள் பெறும் இன்பமோ மின்னலைப் போல் மிக விரைவில் மறையும்; அவர்களது செல்வமும் வெயிலைக் கண்ட பனி போல் அழியும்; இனிய இசை பொழியும் நல்ல யாழினது இளிஎன்னும் நரம்பினும் இனிய சொல்லை உடையவளே! தீவினையின் பயன் அப்படி வலிதாயிருக்கும்; ஆகவே பிரிவை எண்ணி வருந்துவதால் என்ன பயன்?' நல் ஆடையின் மேல் புதிய பொன் மேகலையைச் சூழ வைத்து நஞ்சு குடிகொண்ட பாம்பினது படத்தைப் பழித்து அகன்ற அல்குலாலே புறத்தே காவலிட்டு , கொங்கை மார்பே ஒரு சிறைக் கோட்டமாக, அம் மார்பிலேயே தங்கும்படி தம் கணவரைச் சிறைப்படுத்தி வைக்கத் தெரியாத மகளிர் பிரிவுத் துயரத்தை விடுவாராக! " தூய ஆடை அணிந்த , அல்குலையுடைய , மணியால் செய்த பாவை போன்ற கேமசரி , மணம் மிக்க மாலையுடைய சீவகன் வண்டினுக்கு உரைத்த சொல்லாகிய கயிற்றால் அன்பு மிகுதியால் நீங்காதபடி கட்டப்பட்ட உயிரை மட்டுமே உடையவளாகி , மற்ற உடம்பெல்லாம் பிசைந்திடப் பட்டதொரு பிணையல் மாலையை ஒத்தாள்.

## 7.18. சீவகன் பயணம்

படத்தையுடைய பாம்பினால் விழுங்கப்பட்ட ஒளி வீசும் நிலவைப் போல அழகு கெட்டு பிரிவு என்னும் துயரத்திலே மூழ்கி நடுநடுங்கி நெஞ்சுருகி வருந்தும் கரிய கூந்தலையுடைய கேமசரி, தன் கணவனை வலை விரித்துத் தேடுவது போல் எங்கும் தேடியும் காண முடியவில்லை. ஆனால் காளை போன்ற சீவகனோ தன் போக்கில் சென்று கொண்டிருந்தான். ஒளி விடும் பளிங்காற் செய்த குடத்திலே பாலை ஏந்திக் கரிய நிறமுடைய சேற்றிலே வீழுமாறு சொரிவதைப் போல, ஒளி விளங்கும் திங்களாகிய தெய்வம் தன் ஒளிக் கதிர்களை இருளிலே மூழ்கும்படி சொரிந்து, மகளிரது பசலை கொண்ட முகம் போலத் தோன்றி வளைந்த கடல் மேல் முளைத்தது. சீவகன் செல்லும் வழியில் உள்ள இருட்டை ஓட்ட ஏந்திய கை விளக்கைப் போல மிகச் சிறந்த திங்கள் முளைத்ததால் அவனும் சிறிது தூரம் விரைந்து சென்றான். அவ்வளவில் தன் தன்மையில் ஒரு சிறிதும் மாறுபடாத ஞாயிறு அலைகடலில் முளைத்தெழ, அவ்வழியே செல்லும் ஒருவனுக்கு மேலோனாகிய சீவகன் தன் அணிகலன்களைக் கொடுக்க விரும்பினான்.

## 7.19. வழிப்போக்கன் சந்திப்பும் சீவகன் அறவுரையும்

அப்பொழுது அவ்வழியே வந்த வழிப்போக்கன் , சீவகனை நோக்கி, நீர் எந்த ஊர்? இப்போது எந்த ஊருக்கு வந்தீர்? உமக்கு மனைவியர் எத்தனை பேர்? மக்களில் நல்லொழுக்கம் உடையவர்

எத்தனை பேர்? ஒழுக்கம் இல்லாதவர் எத்தனை பேர்? ” என்று கேட்டான். அதற்குச் சான்றோனாகிய சீவகன், நானும் இவ்வுடம்பிடத்தேன்; இவ்வுடம்பு எடுத்தற்கு வந்தேன் எனக்கு மனைவியர் நான்குபேர்; மக்களுள் ஒழுக்கம் இல்லாதார் யாரும் இல்லை: ஒழுக்கம் உடையவன் ஒருவன் இருக்கின்றான்” என்று பதில் கூறினான் . ஒழுக்கம் உடைய மகன் ஒருவனே அவனும் நான்கு தாய்மாரது வயிற்றிலே பிறந்திருக்கிறான் என்று கூறக்கேட்டு உலகில் இவனைப் போல் இனியவர்கள் யார் இருப்பார்களே? என்று கூறி அறிவில்லாத வழிப்போக்கன் நகைத்தான். பின், அறிவுடைய இவன் கூற்றிலும் ஒரு பொருள் இருக்கும்; எனவே விரிவாகக் கேட்போம் என்று எண்ணி, “ நல்லவனே, நீ இப்போது கூறியதன் பொருளை , நன்கு விளக்க வேண்டும்” என்று வேண்டிக் கொண்டான். அவ்வாறே சீவகன் விளக்க, வழிப்போக்கனும் கவனமாகக் கேட்டான் . . ” நல்ல தானம் , நல்ல ஒழுக்கம் , தவறில்லாத தவம், அறிவர் வழிபாடு என்று சொல்லப்படும் இந்நான்கும் நான் முன் கூறிய மனைவியர்; இத்தகைய நான்கு மனைவியர் வயிற்றிலும் பிறந்து, பயன் அளிப்பவனாகிய “ நல்வினை “ என்னும் அந்த ஒப்பற்ற மகனே மோட்சகதிக்குக் கொண்டு செல்லும் உரவோனாவான்; அவனைப் பெற்றவரே மக்களைப் பெற்றவராவர்; அவ் வுரவோனைப் பெறாதவர் மக்களைப் பெறாதவர் ஆவர்; அவர் பெற்ற பிற மக்களும் அவர் மக்கள் அல்லர். படமெடுக்கும் பாம்பு மேல்தோலை உரிப்பதைப் போல அகப்பற்றும், புறப்பற்றும் துறந்து பார்ப்பவர் மெய் சிலிர்க்கத் தவ நெறியை மேற்கொண்டு, ஐம்பொறிகளால் தோன்றும் ஆசைகளை வென்றார்க்கு மகிழ்ந்து அளிப்பதே தானம் என்றும், இன்சுவைத் தேனும் தெளிந்த கள்ளும் , உயிர்கள் தங்குதற்கு இடமாகிய ஊனும் ஆகிய இவற்றை அறவே நீக்குதலே “ ஒழுக்கம் “ என்றும் உரைத்தார் மிக்கோர்.“ அதனுடன் தவறாமல் சதுர்த்த சியிலும் அட்டமியிலும் பட்டினி கிடந்து நோன்பு மேற்கொள்வதே கெடாத தவம் “ என்றும் , குளிர்ந்த திங்களைப் போன்ற முக்குடைக்கீழ் அமர்ந்த அருகப்பெருமான் திருவடிகளை மலராலும், அகிற்புகையாலும், சந்தனத்தாலும் அர்ச்சித்தலும் அலங்கரித்தலும் ஆராதனை செய்தலும் பிற வழிபாடுகளும் ஆகிய இவற்றையே “ பூசை “ என்றும் உரைத்தனர், ஆகம நூலை உணர்ந்த சான்றோர். மேற்கூறிய தானம் , சீலம் , தவம் , அறிவர் சிறப்பு என்னும் நான்கு நெறிகளை மனைவியர் ஆகவும் , நல்வினையை மகனாகவும் உடையவர் வானவர் உலகை அடைந்து, பொன்மாலை புரளும் மார்பினையுடைய இந்திரராய் விண்ணுலகை ஆண்டு பின் சக்கரவர்த்தியாய் உலகம் முழுதும் ஆண்டு, முக்குடைக்கீழ் அமர்ந்த

திரட்டி கங்கையின் தென்கரை வந்து அடைந்தான். அங்கு தன் படை வீரர்களை நோக்கி "வீரர்களே! நம் அன்பிற்குரிய இராமபிரான் பதினான்கு ஆண்டுகள் கழித்துத் திரும்பிவந்து அரசு கொள்ள இடமின்றி, இப்போதே அவரைத் தொலைத்துவிடும் சூழ்ச்சியோடு அந்தக் கரையில் இந்தப் படை வந்திருக்கிறது. அது மேலே செல்லாதவாறு நாம் தடுத்து அவர்களை இங்கேயே அழித்துவிடவேண்டும்" என்றான்."மேகவண்ண இராமபிரான் என் உயிர் நாயகன். அவனை நாடு ஆள விடாதபடி வஞ்சனையால் அரசைக் கைப்பற்றிய மன்னர்கள் வருகிறார்கள். என்னுடைய தீ கக்கும் அம்புகள் அவர்கள் மீது பாயாதா என்ன? அப்படி இவர்கள் என்னிடமிருந்து தப்பிப் போய்விட்டால் மக்கள் என்னை "நாய்க்குகன்" என்று ஏசமாட்டார்களா?"

"ஆழமான இந்த கங்கையாற்றைக் கடந்து இவர்கள் போய்விடுவார்களோ? பெரிய யானைப் படையைக் கண்டு அஞ்சி வழிவிடுபவனா நான்? என்னைப் பார்த்து அவர் "நீ எனக்குத் தோழன்" என்று சொன்னாரே. அதுவன்றோ நான் பெற்ற பேறு. இவர்களை உயிர் பிழைத்துப் போக நான் விட்டுவிட்டால், அறிவிலி இந்த குகன் இறக்கவில்லையே என்று மக்கள் என்னை ஏசமாட்டார்களா?"

"பரதன் தனக்கு அரசு வேண்டுமென்ற ஆசையால், தமையன் என்றும் கருதாது இராமபிரானை அழிக்கத் துணிந்தாலும் இலக்குவன் இருக்கும்போது அது நடக்குமா? அது கிடக்கட்டும், நான் ஒருவன் இருப்பதை இவன் மறந்து விட்டான் போலும். அன்றி என்னைப் பொருட்படுத்தவில்லையா? அரசர் உயர்ந்தோர், வேடர் தாழ்ந்தோர் என்பதனால், வேடர்விடும் அம்புகள் அரசர் மார்பில் தைக்காதோ? அதையும் நான் பார்த்துவிடுகிறேன். இவனை அழிக்காமல் விடமாட்டேன்".

"மண்ணாசை பிடித்த மன்னர்கள், அவ்வாசையால் எத்தகைய தீங்கையும் செய்வார்கள் போலும். மற்றவர்கள் எப்படி இருந்தாலும் இராமபிரானின் தம்பியாகிய இவன் எப்படிச் செய்யத் துணிந்தான்? என்னிடமிருந்து தப்பிப்பிழைத்துப் போனால்தானே! பார்க்கலாம்."

"அரசாளப் பிறந்த தலைவன் இராமன் தவம் மேற்கொள்ள, அரசுரிமை இல்லாத இவன் தவறான வழியில் அரசினைப் பெறுவதோ? அதற்கு நான் இடம் கொடேன். இவனைத் தடுத்து அழித்து புகழைப் பெறுவேன். இதில் என் உயிர் போனாலும் எனக்குக் கவலை இல்லை".

"தனக்கு உரிய நாட்டை இராமபிரான் இவனுக்குக் கொடுத்துவிட்ட பின்பும் இந்த பரதன் நாம் ஆளுகின்ற இந்த காட்டையும் கொடுக்க மனமின்றி படையெடுத்து வந்துவிட்டான் பாரீர்! என்ன கொடுமையிது! ஆகையால் ஆடுகின்ற கொடிகளோடு கூடிய இந்தப் படையினை அழித்து, அதன்பின்

இராமபிரானை நாட்டை ஆளும்படி மீட்டுக் கொடுத்து, உலகோர் சொல்லும் புகழை நீங்களெல்லாம் அடையவேண்டும்".

குகன் இப்படியெல்லாம் பேசினானே தவிர உள்ளூர அவனுக்கு ஒரு பயம். இராமபிரானுக்குத் தன் தம்பியை நாம் அழித்து விட்டோம் என்று கோபம் வந்தால் என்ன செய்வது என்ற கவலை வந்துவிடுகிறது அவனுக்கு. அப்போது குகனை முன்பே அறிந்தவனான சுமந்திரன் மறுகரையில் தன்னருகில் நின்றிருந்த பரதனிடம் குகனைப் பற்றி கூறுகிறான். "பரதா! அதோ பார். அந்தக் கரையில் தன் படைகளுடன் வந்து கையில் வில்லுடன் நிற்கிறானே, அவன்தான் குகன். இந்த கங்கையின் இரு கரைகளிலும் உள்ள நிலப்பகுதிக்குச் சொந்தக்காரன். உங்கள் குலநாதனாம் இராமனுக்கு உயிர்த் துணைவன். கணக்கற்ற படகுகளுக்குச் சொந்தக்காரன்; மகாவீரன். வீரத்தில் ஆண் யானையைப் போன்றவன்;. வில்லேந்திய வீரர்களையுடைய படையை உடையவன் நெஞ்சம் முழுவதும் அன்பை உடையவன். உன்னுடைய வரவை எதிர்பார்த்து அதோ அந்தக் கரையில் அவன் தன் படைகளுடன் நிற்கிறான் பார்!"

சுமந்திரன் குகனைப் பற்றி 'உங்கள் குலத் தனி நாதற்கு உயிர்த் துணைவன், கரைகாணா காதலான்' என்று சொன்னவை பரதனுக்கு உடனே அவனைக் காணவேண்டுமென்ற ஆவலைத் தூண்டியது. உடனே தன் தம்பியையும், உடன் அழைத்துக் கொண்டு எழுந்து சென்று கங்கைக் கரையை அடைந்தான். பரதன் அப்படி வந்து நிற்கும் காட்சியை மறுகரையில் நின்ற குகனும் காண்கிறான். பரதன் அணிந்திருந்த மரவுரிக் கோலத்தைப் பார்க்கிறான்.

## 10.32. பரதனின் கோலம் கண்டதிர்ந்த குகன்

பொலிவிழந்து வாடியிருக்கும் அவன் பரிதாப நிலை கண்டு குகனுக்கு பகீர் என்றது. இராமன் மீது படையெடுத்து வருகிறான் என்றல்லவோ நினைத்தேன். ஆனால் இவனோ இப்படி வருகிறானே! இதோ இந்த பரதன் என் நாயகன் இராமனைப் போலவே இருக்கின்றான். அருகில் நிற்கும் அவன் தம்பி, இலக்குவனைப் போலவே இருக்கிறான். தவ வேடம் மேற்கொண்டிருக்கிறான். மனத்தில் அளவற்ற துன்பத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறான். இராமபிரான் சென்ற திசை நோக்கித் தொழுது கொண்டிருக்கிறான். அடடா! எம்பெருமான் இராமனுக்குத் தம்பியராகப் பிறந்தவர்கள் தவறு செய்பவர்களாகவா இருப்பார்கள்? நிச்சயம் மாட்டார்கள்". இவன் மனதில் ஏதோவொரு இடுக்கண் துன்புறுத்துகிறது. இராமன் மீது ஆறாத காதல் கொண்டிருக்கிறான். இராமன் மேற்கொண்ட அதே தவக் கோலத்தையே இவனும் மேற்கொண்டிருக்கிறான். இவன்

உளக் கருத்தை அறிந்து வருகிறேன்" என்று சொல்லி, தான் மட்டும் ஒரு படகில் ஏறி கங்கையைக் கடந்து வடகரையைச் சென்றடைகிறான்.

*"வந்தெதிரே தொழுதானை வணங்கினான், மலர் இருந்த*
*அந்தணனும் தலை வணங்கும் அவனும் அவனடி வீழ்ந்தான்*
*தந்தையினும் களிகூரத் தழுவினான் தகவுடையோர்*
*சிந்தையிலும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தியான்".*

குறிப்புகள்

படகைவிட்டு இறங்கி வந்து தொழுத குகனை பிரம்ம தேவனும் தலை வணங்கும் தகுதியுடைய பரதன் வணங்கினான். அந்த குகனும் பரதன் அடிகளில் விழுந்து வணங்கினான். தன் அடிகளில் விழுந்து வணங்கிய குகனை பரதன் தூக்கி நிறுத்தித் தந்தையினும் களிகூரத் தழுவினான். அப்படி வீழ்ந்த குகனைத் தந்தையினும் களிகூர பரதன் தழுவினான், அந்த பரதன் தகவுடையோர் சிந்தையிலும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தியான். இந்த பாடலுக்கு இருவிதமாகவும் பொருள்கூறி வருகின்றனர். யார் யார் அடியில் விழுந்து வணங்கினார் என்பதில் குழப்பத்தைத் தெரிவிக்கின்றனர். குகன் பரதனிடம் "நீ வந்த காரியம் என்ன?" என்று கேட்கிறான்."அயோத்தி அரசுக்கு உரிமையுள்ளவருக்கு அரசைக் கொடுக்காமல் முறைதவறிவிட்டனர், அந்த முறைகேட்டை நீக்கி அயோத்திக்கு உரிமையுள்ள அரசனை அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறேன்" என்கிறான் பரதன். இதைக் கேட்ட குகன் மகிழ்ச்சி பொங்க மீண்டுமொருமுறை, பரதன் காலில் வீழ்ந்தனன். கைகளைக் கூப்பிக்கொண்டு குகன் சொல்லுகிறான்.

*"தாய் உரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னைத்*
*தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்துத் தேக்கி*
*போயினை என்றபோது புகழினோய் தன்மை கண்டால்*
*ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா".*

"பரதா! ராஜ்யத்தை நீ விரும்பவுமில்லை; கேட்கவுமில்லை. தாய் கேட்டு, தந்தை கொடுத்த ராஜ்யத்தை வேண்டாம், இது தவறு என்று சொல்லி மறுத்துவிட்டு, முகத்தில் கவலை படர இராமனைத் தேடி கானகம் வந்திருக்கிறாய் என்பதைக் காணும்போது, பரதா! ஆயிரம் இராமர் உனக்கு இணையாவாரோ?"

"பரதா! உன்னை என்ன சொல்லிப் புகழுவேன். நானோ கற்றறியா வேடன். சூரியனுடைய பிரகாசமான ஒளி எப்படி சந்திரன், நட்சத்திரங்கள் இவற்றின் ஒளியையெல்லாம் இருக்குமிடம் தெரியாமல் செய்து பிரகாசிப்பது போல, நீயும் உன் ரவிக்குலத்தொன்றல் அனைவரின் புகழையும் உன் புகழுக்கெதிரே ஒன்றுமில்லாமல் செய்து விட்டாய்".

இராமபிரானின் குண விசேஷங்களைக் கண்டுதான் குகன் இராமனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்தான். அது போலவே பரதனின் குண நலன்களைக் கண்டு இவன் மீதும் பக்தி கொண்டான். இங்கே இராமபிரான் எவ்விடத்தில் தங்கியிருந்தார் என்று குகனிடம் கேட்டான் பரதன். குகனும் அந்த இடத்தைக் காட்டுகிறான். இரு பாறைகளின் இடையில் புற்கள் பரப்பிய இடத்தைக் கண்டான். துடித்துத் தரையில் வீழ்ந்தான். கண்ணீர் விட்டுக் கதறி அழுதான்.

என்னால் அன்றோ அண்ணா உனக்கு இப்படிப்பட்டத் துன்பங்கள் நேர்ந்தன. புல்லில் படுத்தாய், கிழங்கையும், கனிகளையும் உண்டாய். நீ பட்ட துன்பங்களை அறிந்த பின்னரும், நான் உயிர் துறக்காமல் வாழ்கிறேனே.

இராமபிரான் பிராட்டியோடு துயின்றதால் இலக்குவன் அங்கு இருந்திருக்க முடியாது. எனினும் இவர்களைக் காக்கும் பணியைத் தலைமேல் கொண்டிருந்ததால் உறங்கியிருக்கவும் மாட்டான். எனவே குகனை நோக்கிக் கேட்கிறான் "குகனே! இலக்குவன் எங்கே தங்கி இரவுப் பொழுதைக் கழித்தான்?" இந்தக் கேள்வியை பரதன் கேட்கவும் குகன் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தது.

*"அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச*
*வில்லை ஊன்றிய கையொடும் வெய்து உயிர்ப்போடும் வீரன்*
*கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய், கண்கள் நீர் சோரக் கங்குல்*
*எல்லை காண்பளவும் நின்றான், இமைப்பிலன் நயனம் என்றான்".*

"பரதா! அண்ணலும் பிராட்டியும் தூங்கும்போது, வில் ஊன்றிய கையனாய், பெருமூச்சுடனும், கண்களில் நீர் சோர விடிய விடியக் கண்விழித்துக் காவல் காத்தான் இலக்குவன்" என்றான் குகன்.

## 10.33. பரதன் குகனிடம் உதவி வேண்டுதல்

அன்றிரவு இராமன் படுத்திருந்த இடத்தில் பரதன் படுத்திருந்து மறுநாட்காலை கங்கை ஆற்றைக் கடந்து செல்லும் விருப்பத்தைக் குகனிடம் சொல்ல, அவ்வண்ணமே அவனும் நாவாய்களைக் கொண்டு வந்து சேர்க்கிறான். பரதனும் அவனுடன் வந்தவர்களும் படகுகளில் ஏறி கங்கை ஆற்றைக் கடந்து தென் கரையை அடைகின்றனர். அங்கே பரதனுடன் அவனது தாய்மார்கள் கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகியோர் நிற்கின்றனர். அவர்களில் கோசலையைப் பார்த்து குகன், இவர்கள் யார்? என்கிறான்."இவர்தான் தசரத சக்கரவர்த்தியின் முதல் தேவி. மூன்று உலகங்களையும் படைத்த பிரம்மனைப் பெற்றெடுத்த திருமாலாகிய இராமபிரானைத் தன் வயிற்றில் சுமந்தவர், நான் பிறந்தமையால் அந்த மகனை காட்டுக்கு அனுப்பிவிட்டு பெருந்துன்பத்தை

அடைந்தவர், இவர் தான் கோசலை" என்றான்.உடனே குகன் கோசலையின் கால்களில் வீழ்ந்தான், அழுதான். இவனது அன்புகண்டு நெகிழ்ந்த கோசலை பரதனிடம் "இவன் யார்?" என்றாள்.அதற்கு பரதன் "இந்த நின்ற குரிசில் (வீரன்) இராகவனின் இன்னுயிர் தோழன். இலக்குவனுக்கும், சத்ருக்குனனுக்கும் எனக்கும் மூத்த அண்ணன். பெயர் குகன்" என்றான். உடனே கோசலை "என் அருமைக் குமாரர்களே! இனி துன்பத்தால் வருந்தாதீர்கள். இராம இலக்குவர் காட்டுக்குப் போனதும் நல்லதாயிற்று. இல்லாவிட்டால் உங்களுக்கு இப்படியொரு சகோதரன் கிடைத்திருப்பானா? இனி நீங்கள் ஐவீரும் ஒருவர் போல பிரியாமல் ராஜ்யத்தை நெடுநாள் ஆளக்கடவீராக!" என்றாள். அடுத்ததாக சுமித்திரையைக் காட்டி, இவர் இலக்குவனையும், சத்ருக்குனனையும் பெற்றெடுத்த தேவியென அறிமுகப் படுத்துகிறான். அடுத்ததாக கைகேயைக் காட்டி, குகன் "இவர் யார்?" எனக் கேட்க, பரதன் சொல்லுகிறான்.

குறிப்புகள்

*"படர் எலாம் வளர்த்தாளைப் பழிவளர்க்கும்*
*செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்*
*குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்*
*உயிர்ப்பாரம் குறைந்து தேய*
*உடரெலாம் உயிர் இழந்தவெனத்*
*தோன்றும் உலகத்தே ஒருத்தி அன்றே*
*இடரிலா முகத்தாளை உணர்ந்திலையோ,*
*இந்நின்றாள் என்னை ஈன்றாள்".*

உலகத்தில் வேறெங்கும் காணமுடியாத கொடுமை மிக்க பாவி இவள். இவள் பெற்று வளர்த்தது துன்பங்களையும், பழிகளையுமே! இவள் வயிற்றில் கிடந்ததால் இவளைப்போல் கல் நெஞ்சு எனக்கு இல்லை. இவ்வளவு பேரும் துன்பக் கடலில் துவண்டு கிடக்கையில், இவள் ஒருத்தி மட்டும் துயர் இல்லாதவள் என்பது முகத்திலேயே தெரியுமே! எனவே இவள் யார் என்று உனக்குத் தெரிந்திருக்கலாம். இவள்தான் என்னைப் பெற்றவள்" என்றான் பரதன்.

பரதனின் தாய் என்று தெரிந்ததும் குகன் அவளையும் வணங்கினான். படகுகள் கரை அடைந்தபின் தாயர் சிவிகையில் ஏறிச் செல்ல, பரதனும் குகனும் நடந்து செல்கின்றனர். அந்தப் பகுதியில் வாழ்ந்த பரத்வாஜ முனிவ்ரது பெருமையை அறிந்து அவரைக் காண, அவர் ஆசிரமம் சென்றடைந்தனர். முனிவரும் பரதனின் வருகையறிந்து எதிர்கொண்டழைத்துச் சென்றார். முனிவர் பரத்வாஜரைத் தன்

தந்தைபோல நினைத்து வணங்குகிறான் பரதன். முனிவர் அன்போடு ஆசி கூறுகிறார். முனிவர் பரதனை நோக்கி "ஐயனே! அயோத்தியின் அரச முடிசூடி ஆளும் உரிமை கிடைத்த பின்னும், நீ முனிவர்களுக்குரிய மரவுரி உடுத்து, கானகம் வந்த காரணம் என்னவோ?" என்றார். நீ முடிசூடி அரசாள்வதே முறை, அதைவிடுத்து ஏன் கானகம் வந்தாய் என்று முனிவர் கேட்டதால், பரதனுக்கு மனதில் சினம் உண்டாகியது. "அறிவார்ந்த பெரியோய்! தாங்கள் சொல்வது நியாயமல்ல. வேதநாயகனாம் இராமனுக்கு உரிமையுள்ள ராஜ்யத்தை, நான் எப்படி கொள்ள முடியும். அப்படி அவர் ராஜ்யம் ஏற்க மறுப்பாராகில் நானும் பதினான்காண்டுகள் அவருடனே உறைவேன்" என்றான்.

பரதன் கூறிய இம்மொழி கேட்டு பரத்வாஜ முனிவரும் அவருடன் இருந்த முனிவர்களும் மனம் மிக மகிழ்வெய்தினர். உடனே அவர் பரதன் முதலானவர்களைத் தன் ஆசிரமத்துக்கு அழைத்துச் சென்று, விருந்தினர்களுக்குத் தேவையான உணவு வகைகள், உபசரிப்பு முதலானவற்றிற்காகத் தேவர்களை வேண்டி அக்னியில் ஹோமம் செய்யத் தொடங்கினார். தேவலோக மாந்தர் வந்து பரதனுக்கும் அவனுடன் வந்த பரிவாரங்களுக்கும் சிறப்பான விருந்தினைப் படைத்தனர். யானை, குதிரை இவற்றுடன் படை வீரர்கள், அமைச்சர்கள், பிரதானிகள் ஆகியோரும் தாங்கள் நடந்து வந்த களைப்பு தீர பரத்துவாஜ முனிவர் அளித்த விருந்தையுண்டு மகிழ்ந்திருந்தனர். ஆயினும் பரதன், எவ்வளவு வற்புறுத்தியும் உயர்ந்த உணவு வகைகளை விலக்கிவிட்டு தவசியர்க்குரிய காய், கிழங்குகளை மட்டுமே உண்டான். இரவு நேரம் வந்தது. படைகள் நன்கு உறங்கி எழுந்தனர். கதிரவன் உதித்தான். அனைவரும் முந்தைய நாள் விருந்தின் மகிழ்வு மறந்து பழைய நிலை அடைந்தனர். பரதனும் சேனைகளும் அங்கிருந்து புறப்பட்டு ஒரு பாலைவனத்தை அடைந்தனர். அந்தப் பாலை நிலத்தையும் மருத நிலம் போலக் கருதி அதனைக் கடந்து சித்திரகூடம் சென்றடைந்தனர்.

## 10.34. பரதன் சித்திரகூடம் அடைதல்

பெரும் சேனையின் வரவால் ஏற்பட்ட பேரொலியும், புழுதிப் படலமும் தூரத்தே பார்த்துவிட்ட இலக்குவன் வேகமாய் எழுந்தான். ஒரு குன்றின் மீது ஏறினான். அங்கிருந்து அலைகடல் போல வரும் பரதன் சேனையக் கண்டான். அவனுக்கு கோபம் வருகிறது. தந்தை சொல் கேட்டு கானகம் வந்த இராமனைக் கொல்லவே, பரதன் படையொடு வருகிறான் என ஆத்திரப்பட்டுக் காலால் மலையின் முகட்டை ஓங்கி உதைக்கிறான். அது தூள்தூளாகிறது. அங்கிருந்து தரைக்குத் தாவிக் குதித்து இராமனிடம் ஓடிச் சென்று கூறுகிறான். "அண்ணா! பரதன்

உன்னை மதிக்காமல் பெரும் படையுடன் உன்னைத் தாக்க வருகிறான்" என்று சொல்லிக் கொண்டே இடுப்பில் உடைவாளைக் கட்டிக் கொள்கிறான். காலில் வீரக்கழலை அணிந்து கொள்கிறான். அம்புறாத் தூணியைத் தோளில் எடுத்து மாட்டிக் கொள்கிறான். கவசத்தை அணிந்து கொண்டு தன் வரிவில்லைக் கையில் ஏந்தியபடி, இராமனின் திருவடிகளைத் தொட்டு வணங்கி எழுந்து கூறுகிறான். "அண்ணா! இம்மை, மறுமை, இரண்டையும் இழந்துவிட்ட இந்தப் பரதன் தோள்வலியையும், அவன் படை வலியையும், நீயே எல்லாம் என்று உன் பின்னே வந்துள்ள என் தோள்வலியையும் பராக்கிரமத்தையும் இப்போது பார்!" என்றான். பரதனுடைய சேனையைத் தான் எப்படிப் பொடிப்பொடியாக்குவேன் என்பதையும், அவன் படைகள் தன் கணைகளால் படப்போகும் பாட்டையும் எடுத்துக் கூறுகிறான். எல்லாவற்றையும் பொறுமையாகப் புன்னகையோடு கேட்டுக்கொண்ட இராமன் சொல்லுகிறான். ."தம்பி! இலக்குவா! நீ நினைத்தால் ஈரேழு பதினான்கு உலகத்தையும் கலக்குவாய் என்பது எனக்குத் தெரியும். உன்னை அப்படிச் செய்யாமல் தடுப்பதும், முடியாத காரியம்தான்; என்றாலும்கூட தம்பி! உனக்கு நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். பொறுமையாகக் கேட்பாயா" என்றான் இராமன்.

குறிப்புகள்

## 10.35. இலக்குவனின் சினம் தணித்த இராமன்

"வலிய தோளுடைய லக்ஷ்மணா! நம் குலத்தில் தோன்றிய மன்னர்களுள் குலதர்மத்தைக் கைவிட்டவர்கள் எவருமில்லை. லக்ஷ்மணா! நீ என் மீது அளவு கடந்த அன்பை வைத்துவிட்டாய். அந்த அன்பின் மிகுதியால் நீ பரதனது இயல்பை அறியாமல் பேசுகிறாய். அவன் செயல்கள் அனைத்தும் வேத நெறிகளிலிருந்து பிறழாதவை. இதனை நீயே பின்பு உணர்ந்து கொள்வாய்".

"பரதனும் உன்னைப் போலவே என்மீது அன்பு கொண்டவன். அரசுரிமையை ஏற்க அவன் விரும்பியிருக்க மாட்டான். அதனால் என்னை அழைத்து வரும்படி தந்தை சொல்லியிருக்கலாம், தன் இயல்பான அன்பினாலும், என்னை அழைத்துப் போகவுமே அவன் வருகிறான் என்பதைத் தவிர வேறுவிதமாக எண்ணுவது அறிவுடமை அல்ல" என்றான் இராமன். "அதுமட்டுமல்ல, பரதன் என்னோடு போர் புரிவான் என்று நினைப்பதேகூட அறிவுடைமை ஆகாது லக்ஷ்மணா! தர்ம தேவதை போன்ற பரதனை, நல்ல குணத்திற்கெல்லாம் உரையாணி போன்றவனுமான பரதனை, நீ இவ்வாறு எண்ணுதல் தகுமா? அவன் இங்கு வருவது என்னைக் காணும்பொருட்டே. இதை நீயே பின்னர் நிச்சயம் காணப்போகிறாய்". இவ்வாறு இராமன் தன் தம்பியிடம் கூறுகிறான். இப்படிக் கூறிவிட்டு இலக்குவனோடும் தன் தம்பி பரதனை எதிர்நோக்கி

இராமன் நின்றபோது, பரதனும் தன் தம்பி சத்ருக்குனன் பின்வர இராமன் முன் வந்து சேர்ந்தான்.

*"தொழுது உயர் கையினன்; துவண்ட மேனியன்*
*அழுது அழி கண்ணினன்; அவலம் ஈது என*
*எழுதிய படிவம் ஒத்து எய்துவான் தனை*
*முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினான்".*

தலைமீது குவித்த கரங்கள்; வாடிய மேனி; அழுது அழுது நீர் சோரும் கண்கள்; துயரத்தின் முழு வடிவம் போல வந்து தன் எதிரே நிற்கும் பரதனை, அனைத்தையும் உணர்ந்த இராமன் கூர்ந்து நோக்கினான். பிறகு பேசுகிறான்: "பரதா! அயோத்தியில் தந்தை நன்கு நலமாக உள்ளாரா?". "ஐயனே! உன் பிரிவாலும், என்னைப் பெற்றவளின் வரம் எனும் எமனாலும், சத்தியத்தை இந்த பூமியில் நிலைநிறுத்திவிட்டு, அப்பா வானுலகம் போய்விட்டார்" என்கிறான் பரதன். மன்னன் தசரதன் சுவர்க்கம் அடைந்தான் என்ற செய்தி கேட்டு, புண்ணில் வேல் பாய்ந்தது போல் உணர்ந்து, கண்கள் சோர, மனமும் சுழல, இராமன் தரையில் வீழ்ந்தான். சிறிது நேரம் உணர்வு இல்லாமல் கிடந்தான். பிறகு நினைவு திரும்பிப் புலம்பினான், அழுதான், மனம் வருந்தி பெருமூச்செறிந்தான். தந்தையின் நற்குணங்களையெல்லாம் சொல்லிச் சொல்லி அழுதான். அருகிலிருந்த அனைவரும் இராமனைத் தேற்றுகின்றனர். அப்போது குலகுருவான வசிஷ்டர், "இராமா! நீ உன் தந்தைக்காக வருந்துவதை விட்டு, அவருக்குச் செய்ய வேண்டிய நீத்தார் கடன்களைச் செய்?" அவரவர் செய்த வினைப் பயன்களுக்கு ஏற்ப உலகில் பிறந்து இன்ப துன்பங்களை நுகரும் உயிர்கள், அந்நுகர்ச்சிக்குரிய காலம் முடிந்தவுடன் அவ்வுயிர்களை எடுத்துச் செல்லும் யமன் நல்ல உயிர் கெட்ட உயிர் என்று பார்ப்பதில்லை. பிறந்த குழந்தைகளேகூட மாண்டுவிடுகிற காட்சியைக் காணுகின்ற நாம் அறுபதினாயிரம் ஆண்டுகள் சிறப்புற ஆண்ட சக்கரவர்த்தியின் இழப்பின் பொருட்டு வருந்துவது சரியில்லை". "இராமா! கவலையை ஒழி. தந்தைக்குரிய கடன்களை செய்துமுடி. அதுவே உனது முதற் கடமை" என்றார் வசிஷ்டர். இராமன் கலக்கம் நீங்கினான். நீராட நதித்துறைக்குச் சென்றான். நீராடிவிட்டு வசிஷ்டர் வழிகாட்ட நீத்தார் கடன்களை நன்கு செய்து முடித்தான். பிறகு பரதன் முதலிய பரிவாரங்கள் புடைசூழ பர்ணசாலை சென்றடைந்தான். பெருஞ்சிறப்புகளுடன் அரண்மனையில் வாழவேண்டிய இராமன், இங்கே எளிய குடிலில் வாழ்வது கண்டும், பரிவாரங்கள் தோழியர்கள் புடைசூழ இருத்தற்குரிய பிராட்டி தனியளாய் இருப்பது குறித்தும் பரதன் மீண்டும்

வருத்தமடைந்தான். சீதையின் கால்களில் விழுந்து புலம்புகிறான். மன்னனின் இறப்புச் செய்தியறிந்து சீதையும் வருந்தி கண்ணீர் சிந்தி அழுகிறாள்.

## 10.36. தாய்மார்கள் இராமனைச் சந்தித்தல்

குறிப்புகள்

தாய் கோசலை, கைகேயி, சுமத்திரை ஆகியோரை அழைத்துக் கொண்டு சுமந்திரன் வருகிறான். இராமன் தாய்மாரை வணங்குகிறான். இராமனைக் கண்டதும் அனைவரும் மனம் நொந்து வருந்துகின்றனர். தாய்மார்கள் சீதையைத் தழுவிக்கொண்டு வருந்து கின்றனர். அன்றைய பொழுது சாய்ந்தது. சூரியனும் தசரதனுக்கு பித்ருக்கடன் செய்துவிட்டு மூழ்குவது போல கடலுள் மூழ்கினான். மறுநாட்காலை, அனைவரும் கூடியிருந்த அவையில் இராமபிரான், பரதன் வந்த காரியத்தை வினவினான். முடிசூடாமல் இங்கு ஏன் வந்தாய் என்றான் இராமன். இப்படிக் கேட்ட இராமனை பரதன் நெடுநேரம் பதில் கூறாமல் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். “பெரியோர்கள் ஏற்றுக் கொள்ளமுடியாத வரங்களால் உன்னை தவநிலை ஏற்கச் செய்தவளும், சக்ரவர்த்தியின் உயிரைப் போக்கடித்தவளுமான பாவி கைகேயியின் வயிற்றில் பிறந்துவிட்ட எனக்கு என்ன தவம் வேண்டிக் கிடக்கிறது?. தவம் எனக்குப் பொருந்தாது. உயிர் விடுதலே எனக்குத் தகும். ஆனால் அப்படிச் செய்யாமல் இருக்கிறேனே! நீ முடிசூடாமல் தவ வேடங்கொண்டு இங்கே ஏன் வந்தாய் என்று கேட்கிறாயே! அப்படி நான் அரசு மேற்கொள்வது மரபுக்கு உகந்ததோ?”.“கற்பு நெறி தவறிய மகளிரின் குணமும், பொறுமை நீங்கிய தவ ஒழுக்கமும், அருள்நெறி தவறிய தர்மமும், மரபுவழி தவறிய அரசாட்சியும் முன்னேறுமா?” “அரசுக்கு உரிமையுள்ள நீ, அதனை நீத்து தவம் மேற்கொண்டதும் தவறு. மூத்தவன் நீ இருக்க, நீ முறையின்றி அரசை கைவிட்டுக் காட்டுக்கு வரவும், அதனால் உன் பிரிவினால் தந்தை இறக்கவும், அந்தத் தருணம் பார்த்து நான் அரசைக் கைக்கொண்டு ஆள்வேனானால், சோர்ந்த நேரத்தில் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ளும் பகைவனுக்கும் எனக்கும் என்ன வேறுபாடு இருக்க முடியும்?” “தந்தை உன்னைக் காட்டுக்கு அனுப்பி, தானும் இறந்து போய் மக்களையும் துன்பத்தில் ஆழ்த்திவிட்டான்; எனவே தந்தையே தீமை செய்தவர் ஆகிறார்”.

பரதன் பேசுவதைக் கேட்டுக் கொண்ட பிறகு இராமன் சொல்கிறான், “வெற்றி வீரனே! பரதா! நன்னெறிகளும், சத்தியமும், நியாயங்களும், மேன்மையும், தர்மம் முதலானவைகளும், வேத சாஸ்திரங்களைக் கைவிடாத அரசர்களுடைய கட்டளையாலே உலகத்தில் நிலைத்து இருக்கின்றன. இவை போன்ற நன்னெறிகளுக்குக் காரணம்,

பெற்றோர்களே என்பதை நீ உணர்வாயாக!". "தாய் வரம் கேட்டாள். தந்தை கொடுத்தான். அந்த பிதுர்வாக்ய பரிபாலனம் செய்ய நானும் கானகம் வந்தேன். அப்படி நான் மேற்கொண்ட தர்மத்திலிருந்து மாறிவிடவேண்டுமென்பது உன் விருப்பமா? பெற்றோர் இட்ட கட்டளையை நிறைவேற்றுவதே பிள்ளைகளின் கடமை. நான் அவர் சொல்லை மீறியிருந்தால் பொல்லாத பாவத்துக்கு அல்லவா ஆளாவேன்". "கைகேயி பெற்ற வரத்தினாலும், தந்தை கொடுத்த வரத்தினாலும் நாடு ஆளும் உரிமை உன்னுடையதே. அதனை மறுக்காமல் ராஜ்யத்தை நீ ஆளவேண்டும்" என்கிறான் இராமன். "அண்ணா! உன் கூற்றுப்படியே, ராஜ்யம் என்னுடையது என்றால், இப்போது நான் அதை உங்களுக்கு உவந்து அளிக்கிறேன், ஏற்றுக்கொள்!. நாடு அரசன் இல்லாமல் தவிக்கிறது. நீ வந்து முடிசூட்டிக்கொண்டு நாட்டைக் காப்பது உன் கடமை". "பரதா! அப்படி நான் நாட்டுக்குத் திரும்பினால், நான் ஒப்புக்கொண்ட வனவாச காலமான பதினான்கு ஆண்டுகள் முடிந்து விட்டதாக ஆகிவிடுமா? வாய்மை காத்தலினும் சிறந்தது வேறில்லை என்பது உனக்குத் தெரியாதா? பரதா! நம் தந்தையார் என்னை பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழும்படி கட்டளையிட்டார். அந்தக் காலம்வரை நாட்டை ஆளும்படி உனக்குக் கட்டளையிட்டார். அந்த ஆட்சியைத் தந்தை ஆணைப்படி நீ ஆளுதலே முறையாகும். அதனை நீயாக வேண்டாவிட்டாலும் இப்போது நான் உனக்குக் கட்டளையிடுகிறேன். அரசை ஏற்றுக் கொள்!". என்றான் இராமன். வசிஷ்ட முனிவர் பற்பல தர்மங்களை எடுத்துரைத்து இராமனையே நாட்டை ஆளும்படி கேட்டுக் கொள்கிறார். இதைக் கேட்ட இராமனுக்கு கோபம் உண்டாகிறது. "நேர்மையான செயலைச் செய்வேன் என்று நான் உறுதி மேற்கொண்டபின் அதனை மீறுதல் எவர்க்கும் ஆகாது. எனவே, கொண்ட கொள்கையினின்றும் நான் நழுவுதல் நடக்காது" என்றான் இராமன்.

அப்படியானால் தானும் காட்டிலேயே தங்கிவிடுவதாக பரதன் கூறுகிறான். தாங்கள் தவம் புரிந்து வேண்டிய காரியம் நடைபெறாமல் போய்விடுமோ என்று அஞ்சி தேவர்கள் வானத்தில் கூடினார்கள். தேவர்கள் இராமனிடம், தான் கொண்ட பிரதிக்ஞைப்படி காட்டில் இருப்பதும், பரதன் நாட்டை ஆளுவதும்தான் முறை என்கிறார்கள். "பார்! தேவர்களே சொல்லிவிட்டார்கள், பரதா! நீதான் நாட்டை ஆளவேண்டும்" என்றான் இராமன். அப்போது பரதன் ஒரு பிரதிக்ஞை செய்கிறான். "அப்படியானால் அண்ணா! பதினான்கு ஆண்டுகள் முடிந்த அடுத்த கணம் நீ வந்து ராஜ்ய பாரத்தை ஏற்கவேண்டும். அப்படி இல்லையென்றால் நான் தீப்புகுந்து

உயிரை மாய்த்துக் கொள்வேன்” என்கிறான் பரதன். இராமபிரான் இதற்கு ஒப்புக் கொள்கிறான். “அண்ணா! உனது பாதுகைகள் இரண்டையும் நீ எனக்குத் தர வேண்டுமென” பரதன் கேட்டுப் பெற்றுக் கொள்கிறான். பாதுகைகளைப் பெற்றுக் கொண்ட பரதன் அவற்றைத் தன் தலையிலே வைத்துக் கொண்டு தரையில் வீழ்ந்து இராமனை வணங்குகிறான். பின்னர் பரதன் மற்றும் பரிவாரங்கள் புடைசூழ திரும்பப் பயணப்பட்டு அயோத்தி நகருக்குள் செல்லாமல், நந்திக்கிராமம் எனும் இடத்தை அடைந்தான். அங்கே இராமனின் பாதுகைகளை சிம்மாசனத்தில் வைத்துத் தன் ஐம்பொறிகளை அடக்கி நீர் சோரும் கண்களோடு தவம் புரிந்து வாழ்ந்தான். இராமன் முதலியோர் பயணப்பட்டு மேலும் தென் திசை நோக்கிச் செல்லலாயினர்.

## 10.37. தொகுத்துக் காண்போம்

இராமனுக்கு முடிசூட்டு விழா ஏற்பாடு தொடங்கி அது நடவாமல் போக இராமன் காடு செல்வதும் குகன் நட்பு கிடைப்பதும் குகன் உதவியோடு ராமன் கங்கையைக் கடந்து காட்டுக்குச் செல்வதும் ராமனைக் காண வந்த பரதன் மீண்டும் நாடு திரும்பி நாட்டை ஆள்வதுமான செய்திகளை நாம் கண்டோம்.

## 10.38. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. கைகேயி ஏன் மனம் மாறினாள்?
2. கூனியின் சொல்லாற்றரலைப் புலப்படுத்துக .
3. கைகேயி இராமன் சந்திப்பினைக் காட்டுக
4. இராமனின் பிரிவைக் கண்டு மக்கள் அடைந்த துயரம் யாது?
4. இராமன் குகன் சந்திப்பினை விவரிக்க.
5. பரதன் கைகேயியை எவ்வாறு பழித்தான்.?

## 10.39. மேலும் பயில்வதற்கான நூல்

1. கம்பராமாயணம் - தொகுதி 2 – அயோத்தியா காண்டம், பூவண்ணன் உரை, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை 17

# கூறு .11 சேக்கிழார் - திருத்தொண்டர்புராணம் - பூசலார் புராணம்

குறிப்புகள்

### 11.1 திருத்தொண்டர் புராணம்

கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டில் சோழநாட்டை ஆட்சி செய்த மன்னன் இரண்டாம் குலோத்துங்கச் சோழனாவான் (அநபாய சோழன்). அம்மன்னனின் அவையில் முதல் அமைச்சராகப் பணி புரிந்தவர் சேக்கிழார். சோழ மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்க, சிவனடியார்களின் உயர்ந்த வாழ்க்கையைக் கதைப் பின்னலாகக் கொண்டு பெரிய புராணத்தைப்பாடினார் சேக்கிழார். சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையை முதல் நூலாகவும், நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியைவழிநூலாகவும் கொண்டு பெரிய புராணத்தைச் சார்பு நூலாகப் படைத்தார் சேக்கிழார். அமைச்சராக இருந்த சேக்கிழார் பல ஊர்களுக்கும் சென்று திரட்டிய தகவல்களைக் கொண்டும் பெரியபுராணம் எழுதப்பெற்றுள்ளது.செயற்கு அரிய செய்வர் பெரியர் என்னும் குறள் வரிக்கேற்ப அறுபத்து மூன்று நாயன்மார்கள் புரிந்த இறைப் பக்தியையும், தொண்டு நெறியையும் வரலாற்று முறையில் கூறும் நூலே பெரிய புராணம்(பெரியர் புராணம்) ஆகும். இந்நூல் பல்வேறு நாடு, ஊர், சாதி, தொழில் கொண்ட நாயன்மார்களுடைய வாழ்க்கையை விவரிக்கிறது. அக்காலச் சமுதாய வரலாற்றையும் எளிய, இனிய நடையில் எடுத்து சொல்கிறது. தில்லை அம்பலத்தே ஆடும் சிவபெருமான் உலகெலாம் என்று அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார், பக்தி வளமும், இறையருட் திறமும் குறைவிலாது சிறக்குமாறு இலக்கியப் பெருங்களஞ்சியமாகப், பெரிய புராணத்தை இயற்றி அருளினார். உலகெலாம் என்று அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் என பெரியபுராணத்தினைத் தொடங்கியதாக நம்பப்படுகிறது. இடைக்கால இலக்கியத்தில் மக்களின் வாழ்க்கை பற்றி வரலாற்றுப் போக்கில் அறிவதற்கு இந்நூல் உதவுகிறது

### 11.2. காப்பியப் பகுப்பு

பெரிய புராணம் என்னும் பெருங்காப்பியம் தமிழகச் சூழலையும், 63 அடியார் பெருமக்களையும் மையமாகக் கொண்டு திகழ்கின்றது. இந்நூல் பெரும் பிரிவாக இரண்டு காண்டங்களையும், உட்பிரிவாக 13 சருக்கங்களையும் உடையது. 4286 விருத்தப் பாக்களையுடைய ஒரு பெரு நூலாகும். பெரியபுராணம் முதல் காண்டம், இரண்டாம் காண்டமென இரு காண்டமாகவும், முதல் காண்டத்தில் ஐந்து சருக்கங்களையும் இரண்டாம் காண்டத்தில் எட்டு சருக்கங்களையும் உடையதாக

அமைக்கப்பெற்றுள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் இடம்பெற்றுள்ள பாடல்களின் முதல் வரியே சருக்கங்களின் பெயர்களாக உள்ளது. காப்பிய கதையானது கயிலாயத்தில் தொடங்கப்பெற்று, சைவ அடியார்களின் வாழ்க்கையை விவரித்து, இறுதியாக கயிலாயத்தில் முடிகிறது.

முதற் காண்டத்தில்,

1. திருமலைச் சருக்கம்,
2. தில்லை வாழ் அந்தணர் சருக்கம்,
3. இலை மலிந்த சருக்கம்,
4. மும்மையால் உலகாண்ட சருக்கம்,
5. திருநின்ற சருக்கம் என்ற ஐந்து சருக்கங்களும்,

இரண்டாம் காண்டத்தில்

1. வம்பறா வரிவண்டுச் சருக்கம்,
2. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்,
3. பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்,
4. கறைக்கண்டன் சருக்கம்,
5. கடல்சூழ்ந்த சருக்கம்,
6. பத்தராய்ப் பணிவார் சருக்கம்,
7. மன்னிய சீர்ச் சருக்கம்,
8. வெள்ளானைச் சருக்கம்

என்னும் எட்டு சருக்கங்களும் அமைந்துள்ளன.

## 11.3. காப்பிய அமைப்பு

சுந்தரரின் சிறப்பு, அடியார்களின் சிறப்பு, சிவபெருமானின் அருட்திறம், குரு (ஆசிரியன்), இலிங்கம் (இறைவன் திருமேனி), சங்கமம் (அடியார்) ஆகிய முறைகளில் சிவனை வழிபட்ட நிலைகள், தொண்டின் திறம், சாதி, மத, இன வேறுபாடில்லாமல் அடியார் நோக்கில் கண்டு வழிபட்டு முத்தி பெற்ற தன்மைகள், சிவன் அடியார்களை ஆட்கொண்ட விதம் முதலான பல செய்திகளைக் கொண்டதாக இந்நூல் விளங்குகின்றது. அடியார்களின் வரலாறும். அவர்கள் கடைப்பிடித்த தொண்டு நெறியும், இறைவன் அவர்களை ஆட்கொண்ட விதமும் இந்நூல் முழுதும் எடுத்துக் கூறப்படுவதால் சேக்கிழார், திருத்தொண்டர் மாக்கதை என்று பெயரிட்டார். செயற்கரிய செயல் புரிந்த அடியார்களின் (பெரியார்களின்) சிறப்பினை உரைப்பதால் இதனைச் சான்றோர்கள் பெரியர் புராணம் என்று கூற, காலப் போக்கில் பெரிய புராணம் என்று வழங்கப்பட்டது.

## 11.4. காப்பிய நோக்கம்

சிவனை முதன்மைப்படுத்தி வழிபடும் சமயமாகிய சைவத்தையும், அடியார்களது வரலாறு, தொண்டு நிறைந்த வாழ்வு, முத்தி பெற்ற நிலை ஆகியவற்றையும் விரிவாகவும் தெளிவாகவும் புலப்படுத்துவதே பெரிய புராணத்தின் நோக்கம் ஆகும்.

## 11.5. காப்பியச் சிறப்பு

அறுபத்து மூன்று நாயன்மார்களின் புகழ் மிக்க வரலாற்றினை உலகறிய, பக்திச் சுவையோடு விரிவாக எழுதிய பெருமைக்கு உரியவர் சேக்கிழார் ஆவார். அவர் சோழ நாட்டு அமைச்சராக இருந்தமையால் நாட்டின் பல பகுதிகளுக்கும், நாயன்மார்கள் வாழ்ந்த ஊர்களுக்கும் நேரில் சென்று, அவ்விடத்தில் செவிவழி மரபாக வழங்கும் வரலாற்றுச் செய்திகளையும் தொகுத்து இந்நூலை அமைத்தார் என்பர். பிற மொழிக் கதைகளைத் தழுவாமல், தமிழ் மக்களையும், தமிழகச் சூழலையும் மையமாகக் கொண்டு இயற்றப்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களைப் போலவே பெரியபுராணம் என்னும் நூல் சிறப்புற்றுத் திகழ்கின்றது. ஆண் பெண் வேறுபாடின்றிப் பல இனங்களையும், தொழில் பிரிவுகளையும் சார்ந்த சிவனடியார்களைப் பற்றிய நூலாக அமைந்துள்ளதால் இந்நூலைத் தேசிய இலக்கியம் என்று சான்றோர்கள் பாராட்டுவர்.

## 11.6. நூலாசிரியர்- சேக்கிழார்

சென்னைக்கு அருகிலுள்ள குன்றத்தூர் என்னும் ஊரில் வேளாளர் மரபில் பிறந்தவர் அருண்மொழித் தேவர். இப்பெயரே அவருக்குப் பெற்றோர் இட்டு வழங்கியதாகும். சேக்கிழார் என்பது இவரது குடிப்பெயராகும். இவர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியதால், இரண்டாம் குலோத்துங்க சோழன் அவையில் முதலமைச்சராகப் பணிபுரிந்தார். அம்மன்னனின் வேண்டுகோளை ஏற்று, அடியார்களின் பெருமையை வரலாறாக எழுதினார். இந்நூலின் பெருமையை உணர்ந்த மன்னன், அவரைப் பட்டத்து யானையின் மீதேற்றி நகர்வலம் செய்துஉத்தம சோழப் பல்லவராயன் என்னும் பட்டம் தந்து சிறப்பித்தான். இவருடைய காலம் கி.பி. 12 -ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

சிவத் தொண்டர்களின் வரலாற்றைச் சிறப்பித்த காரணத்தால் இவருக்குத் தொண்டர்சீர் பரவுவார் என்னும் சிறப்புப் பெயரும் உண்டு. கல்வெட்டுகள் இவரை மாதேவடிகள் என்றும், இராமதேவர் என்றும் சிறப்பிக்கின்றன. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, **பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ** என்று இவரைப் பாராட்டுகின்றார்.

## 11.7. பூசலார் நாயனார் புராணம் - சுருக்கம்

குறிப்புகள்

தொண்டை நாட்டில் திருநின்றவூரிலே மறையவர் குலத்திலே தோன்றியவர் பூசலார் என்னும் பெருந்தகையார். இவர் சிவனடியாராகிய அன்பர்க்கு ஏற்றபணி செய்தலே பிறவிப்பயன் எனக் கொண்டு பொருள்தேடி அடியார்க்கு அளித்து வந்தார். சிவபெருமானுக்குத் திருக்கோயில் அமைத்துப் பணிசெய்ய விரும்பிய இவர் தம்மிடத்துப் பொருள் இல்லாமையால் அதற்குரிய பொருளை வருந்தித் தேடியும் பெற இயலாதவராயினர். இந்நிலையில் மனத்திலே சிவபெருமானுக்குத் திருக்கோயில் அமைக்க எண்ணினார். மனத்தின்கண் சிறிதுசிறிதாகப் பெரும்பொருள் சேர்த்தார். திருப்பணிக்கு வேண்டிய கல் மரம்முதலிய சாதனங்களையும் பணிசெய்தற்குரிய தச்சர் முதலிய பணியாளர்களையும் மனத்தில் தேடிக்கொண்டார். நல்ல நாள் பார்த்துத் திருக்கோயிற் பணியைத் தம் மனத்துள்ளே தொடங்கி இரவும் துயிலாமல் அடிப்படை முதல் உபானம் முதலிய வரிசைகளை அமைத்து உரிய அளவுப்படி விமானமும் சிகரமும் அமைத்து அதன்மேல் தூபியும் நட்டனர். சுதைவேலை முடித்து அக்கோயிலினுள்ளே கிணறு திருக்குளம், மதில் முதலான எல்லாம் வகுத்தமைத்து இவ்வாறு தம்மனத்தில் உருவாகிய திருக்கோயிலுள்ளே சிவபெருமானை எழுந்தருளச் செய்வதற்கேற்ற நல்லநாளும் வேளையும் நிச்சயித்தார். இவரதுதிருப்பணி இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருக்கும் நிலையில், காடவர்கோனாகிய வேந்தர்பெருமான் காஞ்சி நகரத்திலே இறைவனுக்குத் திருக்கற்றளி அமைத்துத் தன் பெரிய பொருள் முழுவதையும் அத்திருக்கோயிற் பூசனைக்கென்று வகுத்துத் தான் அமைத்த கற்றளியிலே சிவபெருமானை எழுந்தருளுவிப்பதற்குப் பூசலார் அகத்தில் வகுத்த அந்த நாளையே குறித்தார். பூசலாரது அன்பின் திறத்தை உலகத்தார்க்கு அறிவிக்கத் திருவுளங் கொண்ட சிவபெருமான், அந்நாளின் முதல் நள்ளிரவில் காடவர் கோமான் முன் கனவில் எழுந்தருளி நின்றவூர்ப்பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த நன்மை மிக்க ஆலயத்துள் நாளை நாம் புகுவோம்; நீ இங்கு செய்யத்துணிந்த தாபனத்தினை நாளைய தினத்தில் வைத்துக் கொள்ளாது பின்னர் மற்றொரு நாளில் செய்வாயாக' என்று பணித்தருளி மறைந்தருளினார். பல்லவர்கோன், துயிலுணர்ந்தெழுந்து இறைவர் உளமுவக்கும் வண்ணம் பெரியதிருக்கோயிலை அமைத்த பெருந்தகையாரைச் சென்று காணவிரும்பித் திருநின்றவூரை அடைந்தான். அங்கு அருகணைந்தவர்களை நோக்கி, 'பூசலார் அமைத்த கோயில் எங்கே உள்ளது?' என்று கேட்டார். அதுகேட்ட நின்றவூர் மக்கள், 'பூசலார் இவ்வூரிற் கோயில் எதுவும் கட்டவில்லை' என்றனர். மன்னன் அவ்வூர்

மறையவர்களை அழைத்து ‘பூசலார் யார்’ எனக்கேட்டறிந்து, ஆசில் வேதியராகிய அவர் இருக்குமிடத்திற்குத் தானே சென்று அவரை வணங்கி, ‘தேவரீர் அமைத்த திருக்கோயில் யாது? அக்கோயிலில் சிவபெருமானை எழுந்தருளச் செய்யும் நாள் இந்த நாள் என்று இறைவர் தெரிவித்தருளத் தெரிந்து உம்மைக்கண்டு பணிதற்கு வந்தேன்’ என்றார். பூசலார், அரசன் உரைகேட்டு மருண்டு, ‘இறைவர் என்னையும் பொருளாக அருள்செய்தாராயின் அக்கோயிலின் பெருமை எத்தகையது? என்று தமக்குள்ளேயே சிந்தித்துத் தாம் மனத்தால் முயன்று செய்த திருக்கோயிலின் அமைப்பினை மன்னனுக்கு விளங்க எடுத்துரைத்தார். அரசன் அதிசயித்துப் பூசலாரை நிலமுற்றத் தாழ்ந்து வணங்கித் தனது நகருக்குச் சென்றான். பூசலார் நாயனார் தாம் கட்டிய மனக்கோயிலிலே குறித்த நற்பொழுதில் சிவபெருமானைத் தாபித்துப் பூசனைகள் எல்லாம் பெருஞ்சிறப்புடன் பலநாட்கள் பேணிச் செய்திருந்து சிவபெருமான் திருவடி நீழலையடைந்தார்.

## 11.8. திருநின்றவூரின் சிறப்பு

*அன்றினார் புரம் எரித்தார்க்கு ஆலயம் எடுக்க எண்ணி*
*ஒன்றும் அங்கு உதவாது ஆக உணர்வினால் எடுக்கும் தன்மை*
*நன்று என மனத்தினாலே நல்ல ஆயம் தான் செய்த*
*நின்ற ஊர்ப் பூசலார்தம் நினைவினை உரைக்கல் உற்றார்*

*உலகினில் ஒழுக்கம் என்றும் உயர் பெரும் தொண்டை நாட்டு*
*நலமிகு சிறப்பின் மிக்க நான் மறை விளங்கும் மூதூர்*
*குல முதல் சீலம் என்றும் குறைவுஇலா மறையோர் கொள்கை*
*நிலவிய செல்வம் மல்கி நிகழ் திருநின்ற ஊராம்*

பகைவர்களான அசுரர் மூவரை, அவர்தம் கோட்டைகளுடன் எதிர்த்து அழித்த சிவபெருமானுக்குத் திருக்கோயில் எடுக்க எண்ணியாரும் அச்செயலுக்கு உதவாமல் போகவே, இனிமேல், உள்ளத்துள்ளேயே திருக்கோயில் அமைக்க எண்ணி, எண்ணியவாறு நல்லதிருக்கோயிலை, மனக்கோயிலாக எடுப்பித்த பூசலார் நாயனார் வரலாற்றை உரைக்கத் தொடங்கினேன். இவ்வுலகில் நல்லொழுக்கம் எக்காலத்தும் உயர்ந்து விளங்கும் பெருமையுடைய தொண்டை நாட்டில், நலம் மிக்க சிறப்புகளைக் கொண்டு நான்மறைகளும் விளங்குவதற்கு இடமான பழைய ஊர், குலத்திற்கு முதன்மையான ஒழுக்கத்தை எந்நாளும் கொண்டு ஒழுகுகின்ற குறைவற்ற மறையவர்கள் தம் கொள்கையில் நிலை நின்ற விளங்குதலாகிய செல்வம் பொருந்திய திருநின்றவூராகும்.

## 11.9. பூசலார் நோக்கம்

*அருமறை மரபு வாழ அப்பதி வந்து சிந்தை*
*தரும் உணர்வான எல்லாம் தம்பிரான் கழல்மேல் சார*
*வருநெறி மாறா அன்பு வளர்ந்து எழ வளர்ந்து வாய்மைப்*
*பொருள் பெறு வேதநீதிக் கலை உணர் பொலிவின் மிக்கார்*

*அடுப்பது சிவன்பால் அன்பர்க்காம் பணி செய்தல் என்றே*
*கொடுப்பது எவ்வகையும் தேடி அவர் கொளக் கொடுத்தும் கங்கை*
*மடுப்பொதி வேணி ஐயர் மகிழ்ந்து உறைவதற்கு ஓர் கோயில்*
*எடுப்பது மனத்துக் கொண்டார் இரு நிதி இன்மை எண்ணார்*

குறிப்புகள்

அரிய மறைவழிவரும் மரபு வாழ அப்பதியில் தோன்றிச் சித்தத்தில் வரும் உணர்வுகள் எல்லாம் சிவபெருமான் திருவடியில் சேருமாறு அமையும் நெறியினின்றும் பிறழாது அன்பு வளர்ந்தோங்கத் தாமும் வளர்ந்து மெய்ப் பொருளை அடைதற்கு ஏதுவான மறைக் கலைகளை உணரும் விளக்கத்தின் மிக்கார். சிவபெருமானுக்கும் அவருடைய அன்பர்களுக்கும் ஆகும் பணிகளைச் செய்தலே தக்கது என்று துணிந்து அடியவர்களுக்குக் கொடுப்பதற்கென எவ்வகையாலும் பொருளைத்தேடி அவர்கள் கொள்ளும்படி தந்து திருக் கோயில் அமைப்பதற்குப் பெருந்திரளான செல்வம் தம்மிடம் இல்லாமையை எண்ணாதவராய்க் கங்கை தங்கிய சடையையுடைய இறைவர் மகிழ்ந்து எழுந்தருளியிருப்பதற்கு என ஒரு கோயிலைக் கட்டும் செயலையும் தம் உள்ளத்தில் கொண்டார்.

## 11.10. திருக்கோயில் அமைக்க முற்படுதல்

*மனத்தினால் கருதி எங்கும் மாநிதி வருந்தித் தேடி*
*எனைத்தும் ஓர் பொருட்பேறு இன்றி என் செய்கேன் என்று நைவார்*
*நினைப்பினால் எடுக்க நேர்ந்து நிகழ்வுறு நிதியம் எல்லாம்*
*தினைத்துணை முதலாத் தேடிச் சிந்தையால் திரட்டிக் கொண்டார்*

*சாதனத் தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி*
*நாதனுக்கு ஆலயம் செய் நலம் பெறு நல் நாள் கொண்டே*
*ஆதரித்து ஆகமத்தால் அடிநிலை பாரித்து அன்பால்*
*காதலில் கங்குல் போதும் கண்படாது எடுக்கல் உற்றார்*

திருக்கோயில் அமைத்தற்கென வேண்டும் பொருளைத்தேடிப் பெறும் இடங்களை உள்ளத்தால் நினைத்து எங்கும் அப்பெருஞ் செல்வத்தை வருந்தித் தேடியும், ஒரு சிறிதும் அதனைப் பெறும் பேறு

கிட்டாதவராய், இனி என் செய்வேன் என்று வருந்தி, நினைவால் கோயில் எடுக்க எண்ணித்துணிந்து, அச்செயல் நிகழ்வதற்குரிய செல்வங்களையெல்லாம் தினையளவு கிடப்பினும் அதனையும் சிறிது சிறிதாக உள்ளத்தால் சேர்த்துக் கொண்டனர். திருக்கோயிலைக் கட்டுவதற்குரிய சாதனங்களுடன் தச்சர்களையும் மனத்தால் தேடிக் கொண்டு, இறைவற்குக் கோயில், எடுப்பிப்பதற்குரிய நலம் மிக்க நல்ல நாளையும் பொழுதையும் குறிக்கொண்டு, விரும்பி ஆகம நெறியின்படி அடிநிலை எடுத்து, அன்பின் நிறைவினால் அதை மிகுந்து இரவிலும் பகலிலும் உறங்காது கோயில் எடுக்கலானார்.

## 11.11. உள்ளத்தில் உயர்ந்த கோயில்

*அடிமுதல் உபானம் ஆதி ஆகிய படைகள் எல்லாம்*
*வடிவுறும் தொழில்கள் முற்ற மனத்தினால் வகுத்து மான*
*முடிவுறு சிகரம் தானும் முன்னிய முழத்தில் கொண்டு*
*நெடிது நாள் கூடக் கோயில் நிரம்பிட நினைவால் செய்தார்*

*தூபியும் நட்டு மிக்க சுதையும் நல்வினையும் செய்து*
*கூவலும் அமைத்து மாடு கோயில் சூழ் மதிலும் போக்கி*
*வாவியும் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து மன்னும்*
*தாபரம் சிவனுக்கு ஏற்க விதித்த நாள் சாரு நாளில்*

திருக்கோயிலின் அடிநிலை முதல், திருக் கோபுரத்தின் அடிப்பகுதி வரையிலான அடுக்குகள் எல்லாவற்றையும் ஓவியவேலைப்பாடுகள் பொருந்த மனத்தால் அமைத்து, விமானத்தின் முடிவில் அமையும் சிகரமும், ஆகமத்தில் விதிக்கப்பட்ட முழு அளவில் கொண்டு நீண்ட நாள்கள் செல்ல, கோயில் நிறைவுபட அனைத்தையும் நினைவால் செய்தார். தூபியையும் பொருத்தி நிறம் பொருந்திய கலவை பூசி மேல் சிற்பங்களுக்குரிய ஒப்பனை வகைகளையும் செய்து திருமுழுக்கிற்கென் தூயநீர் அமைந்த கிணறும் அமைத்தும், பக்கத்திலும் கோயில் சுற்றிலும் மதில்களை எடுத்துக் குளம் அமைத்து, மேலும் வேண்டுவனவற்றையும் வகை படச்செய்து , நிலைபெற்ற இலிங்கத்திருமேனியில் சிவபெருமாள் எழுந்தருழுமாறு உறுதிப்படுத்திய நாள் நெருங்கியது.

## 11.12. அரசன் அமைத்த ஆலயம்

*காடவர் கோமான் கச்சிக் கல்தளி எடுத்து முற்ற*
*மாடெலாம் சிவனுக்கு ஆகப் பெரும் செல்வம் வகுத்தல் செய்வான்*
*நாடமால் அறியாதாரைத் தாபிக்கும் அந்நாள் முன்னாள்*

*ஏடலர் கொன்றை வேய்ந்தார் இரவிடைக் கனவில் எய்தி*

பல்லவ மன்னனாய இராசசிம்மன் காஞ்சி மாநகரத்தில் கற்கோயில் எடுப்பித்து, முழுமையாக அதன் பக்கங்களில் எல்லாம் சிவனுக்காகப் பெருஞ் செல்வங்களை நியமிப்பவன், திருமாலும் தேடற்கு அரியவரான இறைவரைத் திருக்கோயிலில் எழுந்தருளு வித்தற்கென நியமித்த அந்நாளுக்கு முன்னைய நாளில் இதழ்கள் விரிகின்ற கொன்றை மலர்களைச் சூடிய இறைவன் அவனது கனவில் தோன்றினார்.

குறிப்புகள்

## 11.13. கனவில் வந்த கடவுள்

*நின்ற ஊர்ப் பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த*
*நன்று நீடு ஆலயத்து நாளை நாம் புகுவோம் நீ இங்கு*
*ஒன்றிய செயலை நாளை ஒழிந்து பின் கொள்வாய் என்று*
*கொன்றை வார்சடையார் தொண்டர்கோயில் கொண்டருளப்*
*போந்தார்*

*தொண்டரை விளக்கத் தூயோன் அருள் செயத் துயிலை நீங்கித்*
*திண்திறல் மன்னன் அந்தத் திருப்பணி செய்தார் தம்மை*
*கண்டு நான் வணங்க வேண்டும் என்று எழும் காதலோடும்*
*தண் தலைச் சூழல் சூழ்ந்த நின்ற ஊர் வந்து சார்ந்தான்*

திருநின்றவூரில் உள்ள பூசல் என்ற அன்பன் நீண்ட நாட்களாக நினைவளவில் செய்த நன்மையால் நீடும் கோயிலில், நாளை நாம் புகுவோம் எனவே இங்குக் கனவில் பொருந்திய செய்கையை நாளை வைத்துள்ளமையை மாற்றிக் கொள்க என்று கூறிக் கொன்றை சூடிய நீண்ட சடையுடைய இறைவர் பூசலாரின் கோயிலின் எழுந்தருளுவித்திருக்கும் திருமேனியைக் கொண்டருள எழுந்தருளினார். தொண்டரான பூசலாரை இந்நிலவுலகத்தவர் அறியும் பொருட்டுத் தூய சிவபெருமான் இங்ஙனம் கூறியருள, உறக்கத்தை விட்டு எழுந்த, திண்ணிய ஆற்றலையுடைய அம் மன்னன் அத்தகைய திருப்பணி செய்தவரைக்கண்டு நான் வணங்கவேண்டும்! என்று மேன்மேலும் எழுகின்ற பெரு விருப்பத்தோடும் சோலைகள் சூழ்ந்த திருநின்றவூரை அடைந்தான்.

## 11.14. அடியவரைத் தேடி வந்த அரசன்

*அப்பதி அணைந்து பூசல் அன்பர் இங்கு அமைத்த கோயில்*
*எப்புடையது என்று அங்கண் எய்தினார் தம்மைக் கேட்கச்*
*செப்பிய பூசல் கோயில் செய்தது ஒன்று இல்லை என்றார்*
*மெய்ப்பெரு மறையோர் எல்லாம்வருக என்று உரைத்தான் வேந்தன்*

*பூசுரர் எல்லாம் வந்து புரவலன் தன்னைக் காண*
*மாசிலாப் புசலார் தாம் யார் என மறையோர் எல்லாம்*

*ஆசில் வேதியன் இவ்வூரான் என்று அவர் அழைக்க ஓட்டான்*
*ஈசனார் அன்பர் தம்பால் எய்தினான் வெய்ய வேலான்*

*தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் தொழுது நீர் இங்கு*
*எண் திசை யோரும் ஏத்த எடுத்த ஆலயம் தான் யாது இங்கு*
*அண்டர்நாயகரைத் தாபித்துஅருளும் நாள் இன்று என்று உம்மைக்*
*கண்டடி பணிய வந்தேன் கண் நுதல் அருள் பெற்று என்றான்*

*மன்னவன் உரைப்பக் கேட்ட அன்பர் தாம் மருண்டு நோக்கி*
*என்னையோர் பொருளாக் கொண்டே எம்பிரான் அருள் செய்தாரேல்*
*முன்வரு நிதி இலாமை மனத்தினால் முயன்ற கோயில்*
*இன்னதாம் என்று சிந்தித்து எடுத்தா வாறு எடுத்துச் சொன்னார்*

மன்னன் , அத்திருநின்றவூரை அடைந்து பூசலார் என்ற அடியவர், கட்டிய கோயில் எம்மருங்கில் உள்ளது என்று அங்கு இருந்தவர்களைக் கேட்க நீங்கள் கூறுமாறு பூசலார் கோயில் ஏதும் கட்டியது இல்லை என்று உரைத்தனர். அது கேட்டஅரசன் , மெய்யுணர்வு தலைப்பட்ட அந்தணர்கள் எல்லாம் ஒருங்கு வருக! என்று ஆணையிட்டான். அவ்வாணையின் வண்ணம் அப்பதியிலுள்ள அந்தணர்கள் எல்லாம் வந்து பல்லவ மன்னனைக் காணக் குற்றம் இல்லாத பூசலார் என்பவர் யார்? “ என்று மன்னன் வினவ, அம் மறையவர் எல்லாம் அவர் குற்றமற்ற அந்தணர்! இவ்வூரினர் என்று கூறினர். அவ்வாறு கூறிய அவர்களைப் பூசலாரை அழைத்து வருமாறு அனுப்பாது இறைவரின் அன்பரான அப்பூசலாரிடத்தில் கொடிய வேலையுடைய மன்னன் தானே சென்று அடைந்தான்.

அத்தொண்டரைச் சென்று கண்ட மன்னன், அவரை வணங்கித் தாங்கள் இவ்விடத்துத் தேவர் பெருமானான சிவபெருமானைத் தங்கள் கோயிலில் எழுந்தருளுவிக்கும் நாள் இன்று எனத் தெரிந்து, கண்ணுதல் பெருமானின் திருவருளால், உங்களைக் கண்டு, திருவடிகளை வணங்குவதற்கு வந்தேன் எனக்கூறினான்.

இங்ஙனம் பல்லவ மன்னன் சொல்லக்கேட்டபூசலார் நாயனார், வியப்படைந்து அவரைப்பார்த்து என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு பெருமானார் இவ்வாறு அருளிச் செய்தாராயின், முன்னதாக வேண்டும் நிதி கிடையாமையால், உள்ளத்தினால் முயன்று நினைவளவில் செய்த கோயில் இதுவாகும் என்று தம் சிந்தனையின் செயலாகச் செய்த கோயிலைத் தாம் விளங்க எடுத்துச் சொன்னார்.

## 11.15. அடியவரைப் பணிந்த அரசன்

*அரசனும் அதனைக் கேட்டு அங்கு அதிசயம் எய்தி என்னே*
*புரையறு சிந்தை அன்பர் பெருமை என்று அவரைப் போற்றி*

*விரை செறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து*
*முரசெறி தானை யோடு மீண்டு தன் மூதூர்ப் புக்கான்*

அரசனும் அவ்வடியார் கூறியதைக்கேட்டு மிக்க வியப்படைந்து "குற்றமில்லாத அன்பரின் பெருமை இருந்தவாறு என்னே ! என்று அவரைப் போற்றி வணங்கி நறுமணம் மிக்க மாலை கிழே படியுமாறு நிலத்தில் விழுந்து வணங்கி , முரசுகள் ஒலிக்கும் படைகளுடன் திரும்பித் தன் பழைய ஊரை அடைந்தான்.

குறிப்புகள்

## 11.16. மனக்கோயிலில் மங்கள விழா

*அன்பரும் அமைத்த சிந்தை ஆலயத்து அரனார் தம்மை*
*நன் பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தினோடும்*
*பின்பு பூசனைகள் எல்லாம் பெருமையில் பல நாள் பேணிப்*
*பொன் புனை மன்றுளாடும் பொன் கழல் நீழல் புக்கார்*

அன்பரான பூசலாரும், தம் உள்ளத்தில் அமைத்த திருக்கோயிலில் சிவபெருமானை நாளும் ஓரையும் நலம் மிகவந்த அமையத்து எழுந்தருளுவித்து, நன்மைமிக அதன் பின்பு செய்யவேண்டிய வழிபாடுகளை எல்லாம் பல நாள்கள் விரும்பிச் செய்து வாழ்ந்து கொண்டிருந்த நிலையில் பொன்னால் ஆய அம்பலத்தில் ஆடும் கூத்தப்பெருமானின் அழகிய திருவடி நிழலைச்சேர்ந்தார்.

## 11.17. தொகுத்துக் காண்போம்

காப்பிய இலக்கிய வரலாற்றில் பெரியபுராணத்தின் இடத்தினை நாம் அறிந்தோம். பெரியபுராணம் சைவசமய அடியவர்களின் வரலாற்றினைக் காட்டும் தன்மை பற்றி அறிந்து கொண்டோம். இதில் பெரியபுராணத்தின் அமைப்பையும் பூசலார் நாயனார் வரலாற்றினையும் நாம் அறிந்து கொண்டோம்.

## 11.18. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. பெரியபுராணத்தின் நூல் அமைப்பினைக் காட்டுக.
2. சேக்கிழார் குறித்த செய்திகளைத் தருக.
3. அரசன் அமைத்த ஆலயத்தில் எழுந்தருளல் பூசலார் அமைத்த ஆலயத்தில் இறைவன் ஏன் எழுந்தருளினார்?

## 11.19. மேலும் பயில்வதற்கான நூல்

1. சேக்கிழார், திருத்தொண்டர் புராணம், தருமையாதீனம், மயிலாடுதுறை - 609 001

## கூறு – 12 வீரமாமுனிவர் - தேம்பாவணி - பாலைபுகு படலம்

### 12.1. தேம்பாவணி

தேம்பாவணி என்னும் நூல் இயேசு கிறிஸ்துவின் வளர்ப்பு தந்தையான புனித யோசேப்பு மீது இயற்றப்பட்ட முதற் பெரும் செய்யுள் வகை நூலாகும். இந்நூல் இத்தாலிய நாட்டவரான வீரமாமுனிவர் (1680 - 1742) அவர்கள் தமிழில் திறம்பட ஆக்கிய நூல் எனப் புகழப்படுகிறது. கிறிஸ்தவ சமயத்தின் சுருக்கமென்றே இந்நூலை அறிஞர்கள் மதிப்பிடுகின்றனர். இத்தமிழ்க் காப்பியம் பிறமொழி நூல் ஒன்றில் வருகின்ற செய்திகளைத் தழுவி, தமிழ் நெறிக்கேற்ப எழுதப்பட்டதாகும். அதாவது, ஸ்பானிய நாட்டு ஆகிருத நகரில் வாழ்ந்த ஆகிர்த மரியாள் (ஆயசிய னந Áபசநனய) என்னும் கன்னி மறைபொருளான இறைநகரம் (ஆலளவஉையட ஊவைல ழக புழன) என்னும் நூலை, கன்னி மரியாவின் ஆணைப்படி எழுதியதாகக் கூறியுள்ளார். அந்த நூலில் இயேசுவின் வளர்ப்புத் தந்தையான யோசேப்பு பற்றிய செய்திகளும் உண்டு. ஆகிர்த மரியின் அந்நூலைத் தழுவி, தமிழ் மரபுக்கும், தமிழ்ப் பண்பாட்டுக்கும் ஏற்ப யோசேப்பின் வரலாற்றை இயற்றியிருக்கிறார் வீரமாமுனிவர்.

#### 12.1.1. தேம்பாவணியின் பொருள்

தேம்பா ¸அணி எனப் பிரித்து வாடாத மாலை என்றும், தேன், பா ¸ அணி எனப் பிரித்துத் தேன் போன்ற இனிய பாடல்களின் மாலை என்றும் இதற்குப் பொருள் உண்டு. இயேசு நாதரை வளர்த்த தந்தையாகிய சூசையப்பரைத் தலைவராகக் கொண்டு இது பாடப்பட்டது. சூசையப்பருக்குத் தேம்பாவணி எனப் பெயரிட்டு இந்நூலில் பாடியுள்ளார்.

#### 12.1.2. தேம்பாவணியின் அரங்கேற்றம்

“தேம்பாவணி“ கி.பி. 1726 ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் பலத்த எதிர்ப்புகளுக்கிடையில் அரங்கேற்றப்பட்டது. பல புலவர்களின் அடுக்கடுக்கான கேள்விகளுக்குச் சளைக்காமல் பதிலளித்த வீரமாமுனிவரிடம் தமிழ்ப் புலவர்கள், ”எல்லாம் தெரியுமெனக் கூறும்; பெஸ்கி அவர்களே! வானத்தில் எத்தனை நட்சத்திரம் இருக்கிறது; எனக் கூற முடியுமா?” என நையாண்டியாகக் கேட்டார்கள். பதட்டமின்றி ”முப்பது மூன்று கோடி, முப்பதிமூன்று லட்டத்து, முப்பதிமூவாயிரத்து, முன்னூற்றிமுப்பதிமூன்று நட்சத்திரங்கள் சந்தேகமிருந்தால் எண்ணிப்பாருங்கள்” என்றதும், சபையில் சிரிப்பொலி எழும்பிப் பலர் முனிவரைப் பாராட்டினார்கள். ”தேம்பாவணி”யின் சிறப்பைப் பாராட்டி

மதுரைத் தமிழ்ச்சங்கம்; பெஸ்கிப் பாதிரியாருக்கு ராஜரிஷி என்ற பட்டம் அளித்து சிறப்பித்தது.

### 12.1.3. நூலின் அமைப்பு

குறிப்புகள்

தேம்பாவணி மூன்று காண்டங்களைக் கொண்டது. ஒவ்வொன்றிலும் 12 படலமாக 36 படலங்கள் உள்ளன. மொத்தம் 3,615 விருத்தப் பாக்கள் 90 சந்த வகைகளுடன் பாடப் பெற்றது தேம்பாவணி. தேம்பாவணி ஆசிரியர், வெளி நாட்டவரே ஆயினும், காப்பியக் கதைத் தலைவர் சூசை வாழ்ந்ததும் தமிழ் மண்ணில் இல்லை எனினும், காப்பியம் முழுக்கத் தமிழ் மணம் கமழ்வதாகத், தமிழ்ப் பண்பாட்டில் தோய்ந்ததாகவே படைக்கப் பெற்றுள்ளமைக்குப் பல சான்றுகள் கூறலாம். பிற தமிழ்க் காப்பியங்களைப் போலவே, சீரிய உலகம் மூன்றும் என மங்கலச் சொற்களைப் பெய்தே, தொடங்குகிறார் ஆசிரியர். இறைவனை வணங்க முற்படும் போது, மேனாடுகளில் வழங்கும் கிறித்தவ மரபுகளைச் சாராது, தமிழ் மரபையே சார்ந்து, இறைவனது பாதங்களையே முதலில் வணங்குவதையும், இறைவனது பாதங்களை மலராகக் காண்பதையும் இங்குக் காண்கிறோம். இறைவனுக்கு வாகனங்களை உரிமை செய்து பாடுவன தமிழகச் சமயங்கள். அத்துடன், இறைவனுக்குரிய கொடிகளாகச் சிலவற்றைக் குறிப்பதும் இங்குள்ள சமய மரபு. இதனைப் பின்பற்றி வீரமாமுனிவரும் திருமகன் இயேசுவை மேக வாகனத்தில் வருபவராகவும், அவரது முன்னோரான தாவீது அரசனைச் சிங்கக் கொடியோன் என்றும் பாடுகிறார். மேலும் இறைவனது திருமேனிக்கு வண்ணம் (நிறம்) குறித்துப் பாடுவது, இறைவனைத் தரையில் தலைபட வணங்குவது, கை கூப்பி வணங்குவது, மலர்கள் தூவி வழிபாடு செய்வது, பல்வகை விளக்குகளை ஆலயத்தில் ஏற்றுவது, தேர்த்திருவிழா காண்பது முதலிய பல தமிழ்ச் சமய மரபுகளைத் தம் காப்பியத்தில் வீரமாமுனிவர் இணைத்துள்ளதைக் காண்கிறோம். ஓரிரு இடங்களில் தாம் கூறவரும் செய்திகளுக்கு உவமையாகத் தமிழ்நாட்டுப் புராணச் செய்திகளையும் பயன்படுத்தியுள்ளார். இவ்வாறு தமிழ் மரபுக் கேற்ப, தம் காப்பியத்தைக் கவிஞர் அமைத்துள்ளமை புலனாகிறது.

இனி, தேம்பாவணி எனப்படும் இக்காப்பியத்தின் சிறப்புகளையும் பண்புகளையும் காண்போம். இன்னொரு கிறித்தவக் காப்பியமான இரட்சணிய யாத்திரிகத்தைப் போலவே, இத் தமிழ்க் காப்பியமும் பிறமொழிக் காப்பியம் ஒன்றைத் தழுவி, தமிழ் நெறிக்கேற்ப எழுதப்பட்டதாகும். ஸ்பானிய நாட்டு ஆகிருத நகரில் வாழ்ந்த ஆகிர்த மரியாள் என்னும் கன்னி இறைநகரம்(ஊவைல ழக புழன) என்னும் நூலை, அன்னை மரியின் ஆணைப்படி எழுதியதாகக் கூறியுள்ளார்.

அன்னை மரியினால் தமக்கு உரைக்கப்பட்ட சூசையப்பரின் வரலாற்றையே தாம் நூலாக எழுதியுள்ளதாக அவர் கூறுகிறார். அந்நூலைத் தழுவி, தமிழ் மரபுக்கும், தமிழ்ப் பண்பாட்டுக்கும் ஏற்ப வீரமாமுனிவர் தேம்பாவணியை இயற்றியிருக்கிறார். மேலைநாட்டு நூலின் மொழிபெயர்ப்பு எனத் தோன்றாத வகையில், இக்காப்பியத்தை வீரமாமுனிவர் உருவாக்கியுள்ளார்.

**12.1.4. காப்பியக் கருவும் கதையும்**

இத்தமிழ்க் காப்பியத்தின் கதைத் தலைவராக விளங்குபவர் இயேசுபெருமானின் வளர்ப்புத் தந்தையாகிய சூசையே ஆவார். வளன் என்றும் குறிக்கப்படும் இவரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பு விவிலியத் திருமறையில் ஐந்தே இடங்களில் சிற்சில வரிகளிலேயே இடம் பெறுகிறது. எனினும், ஆகிர்த மரியாளின் மூலநூலைத் தழுவி, வீரமாமுனிவர் சூசையின் வரலாற்றை விரிவான காப்பியமாக வடித்துள்ளார்.

**12.1.5. கதைச் சுருக்கம்**

கடவுளின் திருவுள்ளப்படி சூசைக்கும் மரிக்கும் திருமணம் நிகழ்கிறது. அவர்கள் இல்லற வாழ்வில் இணைக்கப்பட்டாலும் துறவு நெறியிலேயே வாழ்கின்றனர். இறையாற்றலால் மனித உறவின்றி அன்னை மரியிடம் பிறக்கும் தெய்வக் குமரனாம் இயேசுவை அவர்கள் வளர்த்து வருகின்றனர். வானவரின் கட்டளைப்படி செயல்படும் அவர்கள், அக்கட்டளையால் அரசன் ஏரோதன், திருக்குழந்தைக்குச் செய்ய இருந்த துன்பத்தினின்று நீங்க, எகிப்து நாடு செல்கின்றனர். அந்நாட்டுக்கு வானவர்களின் துணையுடன் செல்லும் இத்திருக்குடும்பத்தினர் பயணம் பற்றியும்,வானவர்கள் இவர்களுக்கு எடுத்துரைத்த விவிலியக் கதைகள் பற்றியும் காப்பியம் கூறுகிறது. ஏரோதன் ஆட்சியின் கொடுமைகள் சித்திரிக்கப்படுகின்றன. இவ்வரசன் இறந்தபிறகு, இவர்கள் தாய் நாடு திரும்புகின்றனர். திருமறை பல நாடுகளிலும் வளரும் பாங்கு விளக்கப்படுகிறது. திருமகன் இயேசு குழந்தையாகவே பல அருஞ்செயல்கள் புரிவதும் கூறப்படுகின்றது. பின்னர் சூசை நோயால் துன்பம் அடைந்து இறந்து, புண்ணிய ஆன்மாக்களுக்குத் திருமகனின் தூதராகச் செல்கிறார். இறைமகன் இயேசுவும் திருப்பாடுகளை அடைந்து, இறந்து உயிர் பெற்றபின், சூசையும் மீண்டும் உயிர்பெற்று எழுகிறார். அவருக்கு விண்ணுலகிலும் மண்ணுலகிலும் திருமுடி சூட்டப்பெறுகிறது. இவ்வாறு வளனார் பெருமையையும் வரலாற்றையும் கூறிக் காப்பியம் நிறைவடைகிறது.

குறிப்புகள்

### 12.1.6. காப்பிய அமைப்பு

தேம்பாவணிக் காப்பியம் பாயிரம் எனப்படும் முகவுரையும், படலங்கள் எனப்படும் முப்பத்தாறு சிறு பிரிவுகளும் கொண்டு விளங்குகிறது. இந்த முப்பத்தாறு படலங்களையும் மூன்று காண்டங்களாகப்பிரித்து வெளியிட்டுள்ளனர். தமிழ்க் காப்பியங்களின் அமைப்புக்கும் மரபுக்கும் ஏற்ப, பாயிரப் பகுதியில் நூல் எழுதப்பட்ட வரலாறு கூறப்படுகிறது. அதில் அவையடக்கமாக 'கடலையே நக்கிக் குடிக்க முற்பட்ட ஒரு பூனையைப் போல, ஊமையன் போன்ற நானும் சொல்லுவதற்கு அரிய வளனாரின் வரலாற்றை வடிக்க முற்பட்டேன்' எனக் கூறுகிறார். உவமையின் அழகை எண்ணிப் பாருங்கள். எத்துணைத் தன்னடக்கம்! பின்னர் காப்பிய மரபுப்படி நாட்டு வளம், நகர் வளம் முதலியன நன்கு வருணிக்கப்படுகின்றன. காப்பியத்திலுள்ள முப்பத்தாறு படலங்களிலும் காப்பியத் தலைவனாகிய சூசை, அவரது துணைவியாகிய மரியாள், அவர்களால் வளர்க்கப்படும் தெய்வீகத் திருக்குழந்தையாகிய இயேசு ஆகிய மூவரது பேராற்றலும் பெருமைகளும் நன்கு விரித்துரைக்கப்படுகின்றன. விவிலியத் திருமறையில் பழைய ஏற்பாடுஎனும் முற்பகுதியில் இடம்பெறும் பல கதைகள், வானவர்களின் வாய்மொழியாகக் கூறப்படுகின்றன. அவ்வாறே புதிய ஏற்பாடுஎனும் விவிலியப் பிற்பகுதியில் இடம் பெறும் அரிய செய்திகளும் வரலாறுகளும் காப்பியக் கதையின் ஊடாகவே எடுத்துரைக்கப்படுகின்றன.

### 12.2.1 வீரமாமுனிவர் வாழ்க்கை வரலாறு

வீரமாமுனிவர் (நவம்பர் 8, 1680 - பெப்ரவரி 4, 1742) இத்தாலி நாட்டிலுள்ள கேசுதிகிலியோன் என்னும் இடத்தில் பிறந்தார். இவரின் இயற்பெயர் - கான்ச்டன்டைன் சோசப்பு பெச்கி (ஊழளெவயவெைநெ துழளநிா டீநளஉாை). இவர் இயேசு சபையைச் சேர்ந்த குரு ஆவார். கிறித்தவ மதத்தைப் பரப்பும் நோக்கில், 1709 ஆம் ஆண்டு இயேசுசபைப் குருவானபின், 1710 ஆம் ஆண்டு தமிழகத்துக்கு வந்தார். இவர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் சிறப்பான பணிகளைச் செய்துள்ளார். 23 நூல்களைத் தமிழில் எழுதியதுடன், இயேசுக் கிறித்துவின் வாழ்க்கை தொடர்பான நிகழ்ச்சிகளையும் இயேசுவின் வளர்ப்புத் தந்தையாகிய புனித யோசேப்பின் வரலாற்றையும் தமிழ்ப் பண்பாட்டுக்கேற்ப "தேம்பாவணி" என்ற பெருங்காவியமாக இயற்றியது இவரின் தமிழ்ப் புலமைக்குச் சான்றாக உள்ளது. திருக்குறள், தேவாரம், திருப்புகழ், நன்னூல், ஆத்திசூடி ஆகிய நூல்களை பிற மொழிகளில் மொழி பெயர்த்தவர். இவர் லிஸ்பனில் இருந்து புறப்பட்டு 1710 சூனில் கிறித்தவ மதம் பரப்பு பணி செய்ய கோவா வந்து சேர்ந்தார். சில

நாட்கள் கோவாவில் தங்கியவர், தமிழ்நாடு செல்ல உத்தேசித்து, கொச்சி வந்து அங்கிருந்து கால்நடையாக அம்பலக்காடு வந்து தங்கி மதுரையில் காமநாயக்கன்பட்டி வந்து சேர்ந்தார். 1822 இல், முதன் முதலாக இவருடைய சரித்திரத்தைத் தமிழில் எழுதி வெளியிட்ட வித்துவான் முத்துசாமி பிள்ளை, இவருடைய நடையுடை பாவனைகளை, அந்நூலில் கீழ்வருமாறு எழுதியிருக்கிறார். இந்தத் தேசத்தில் வந்த நாள் முதலாகப் புலால் மாமிசங்களை நிவர்த்தித்து, இரண்டு தமிழ்த் தவசிப் பிள்ளைகளைப் பரிசுத்த அன்னபாகஞ் செய்யச் சொல்லித் தினமொரு பொழுது மாத்திரம் போசனம் பண்ணிக் கொண்டிருப்பார். தமது மடத்திலிருக்கும் பொழுது, கோபிச் சந்தனம் நெற்றியிலிட்டுக் கொண்டு, தலைக்குச் சூரியகாந்திப பட்டுக் குல்லாவும், அரைக்கு நீர்க்காவிச் சோமனுந் திருநெல்வேலிக் கம்பிச் சோமன் போர்வை முக்காடுமிட்டுக் காலிற் பாதகுறடும் போட்டுக் கொண்டிருப்பார். இவர் வெளியிற் சாரி போகும் போது பூங்காவி அங்கியும் நடுக்கட்டும், வெள்ளைப் பாகையும், இளங்காவியுத்தரிய முக்காடும், கையினிற் காவி யுருமாலையும், காதில் முத்துக் கடுக்கனும், கெம்பொட்டுக் கடுக்கனும், விரலிற்றம்பாக்கு மோதிரமும், கையிற்றண்டுக் கோலும், காலிற் சோடுடனும் வந்து, பல்லக்கு மெத்தையின் மேலிட்டிருக்கும் புலித்தோலாசனத்தின் மேலெழுந்தருளியிருந்து, உபய வெண்சாமரை வீசவும், இரண்டு மயிற்றோகைக்கொத்திரட்டவும், தங்கக் கலசம் வைத்த காவிப்பட்டுக் குடைபிடிக்கவும் போவார். இவரிறங்கும் இடங்களிலும் புலிதோலாசனத்தின் மேலுட்காருவார்.

மறை பரப்பு முயற்சிக்காக முதலில் தமிழைக் கற்றுக்கொண்ட இவர், தமிழில் வியத்தகு புலமை பெற்று இலக்கணம், இலக்கியம், அகராதி படைத்து தமிழுக்குச் செழுமையூட்டினார். தமது பெயரினைத் தைரியநாதசாமி என்று முதலில் மாற்றிக் கொண்டார். பின்னர், அப்பெயர் வடமொழி என்பதாலும், நன்கு தமிழ் கற்றதாலும், தமது இயற்பெயரின் பொருளைத் தழுவி, செந்தமிழில் வீரமாமுனிவர் என மாற்றிக் கொண்டார். பெயராலும், பண்பாட்டாலும் தமிழராகவே வாழ்ந்த வீரமாமுனிவர், தனது 67-ஆவது வயதில் மறைந்தார்.

**12.2.2. தமிழ்த்தொண்டு**

1. இவர் தமிழகம் வந்த பின், சுப்ரதீபக் கவிராயரிடம் தமிழ் இலக்கண, இலக்கியம் கற்று, இலக்கியப் பேருரைகள் நடத்துமளவுக்குப் புலமை பெற்றார்.
2. இலக்கியச் சுவடிகளைப் பல இடங்கள் சென்று தேடி எடுத்ததால் “சுவடி தேடும் சாமியார்” எனவும் அழைக்கப்பட்டார். இவற்றில்

காண அரிதான பல பொக்கிசங்கள் அழிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

3. தமிழின் சிறப்பை மேல் நாட்டார் உணர திருக்குறள், தேவாரம், திருப்புகழ், நன்னூல், ஆத்திசூடி போன்ற நூல்களை பிற ஐரோப்பிய மொழியில் வெளியிட்டார்.
4. தமிழ் கற்க ஏதுவாக தமிழ் - லத்தீன் அகராதியை உருவாக்கினார். அதில் 1000 தமிழ்ச் சொற்களுக்கு லத்தீன் விளக்கம் அளிக்கப்பட்டது. இதுவே முதல் தமிழ் அகரமுதலி ஆகும். பின்பு 4400 சொற்களைக் கொண்ட தமிழ் - போத்துக்கீய அகராதியை உருவாக்கினார்.
5. சதுரகராதியை, நிகண்டுக்கு ஒரு மாற்றாகக் கொண்டு வந்தார்.
6. அக்காலத்தில் சுவடிகளில் மெய்யெழுத்துகளுக்கு புள்ளி வைக்காமலே எழுதுவது வழக்கம். புள்ளிக்குப் ஈடாக நீண்ட கோடிருக்கும். மேலும் குறில், நெடில் விளக்க என்று "ர" சேர்த்தேழுதுவது வழக்கம். "ஆ" என எழுத "அர" என 2 எழுத்துக்கள் வழக்கிலிருந்தது. (அ:அர, எ:எர) இந்த நிலையை மாற்றி "ஆ, ஏ" என மாறுதல் செய்தவர் இவர்.
7. தமிழ் இலக்கிய இலக்கணங்கள் கவிதை வடிவில் இருந்து வந்தன. அவற்றை மக்கள் படித்தறிய எளிதில் முடியவில்லை என்பதனை அறிந்து உரைநடையாக மாற்றியவர் இவர்.
8. தொன்னூல் விளக்கம் என்ற நூலில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்து இலக்கணங்களைத் தொகுத்தார். கொடுந்தமிழ் இலக்கணம் என்ற நூலில், தமிழில் முதல் முதலாகப் பேச்சுத் தமிழை விவரிக்க முனைந்தவர். வழக்கும் செய்யுளுமே ஒரு மொழியின் இலக்கணமாக அமையுமென்றாலும், இரட்டை வழக்கு மொழியான தமிழில், பேச்சுத் தமிழுக்கு இலக்கணம் அமைந்திராத காலத்தில் கொடுந்தமிழ் இலக்கணம் வகுத்தது சிறப்பான முயற்சியே என வேண்டும்.
9. திருக்குறளில் அறத்துப்பாலையும், பொருட்பாலையும் இலத்தீன் மொழியில் பெயர்த்தவர் வீரமாமுனிவர். உரைநடையில் வேத விளக்கம், வேதியர் ஒழுக்கம், ஞானக் கண்ணாடி, செந்தமிழ் இலக்கணம், பரமார்த்த குருவின் கதை, வாமன் கதை ஆகிய நூல்களைப் படைத்தவர். திருக்காவல் ஊர்க் கலம்பகம், கித்தேரி அம்மன் அம்மானை இவரது பிற நூல்கள். 1728-இல் புதுவையில் இவரின் "பரமார்த்த குருவின் கதை" என்ற நூல் முதல் முறையாக

குறிப்புகள்

இவரால் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இந்த நகைச்சுவைக் கதைகள் (துநயெ னந டய குழவெயைநெ 1621-1695) எனும் பிரன்சியரால் எழுதப்பட்டது. ஐரோப்பாவில் பிரபலமாக இருந்ததை பெஸ்கி தமிழிலும் மொழி பெயர்த்தார் என்று சிலர் கருதுகின்றனர். இது தமிழில் முதல் முதலாக வந்த நகைச்சுவை இலக்கியம் ஆகும்.

10. தேம்பாவணி இவர் இயற்றியது. மூன்று காண்டங்களில் 36 படலங்களைக் கொண்டு மொத்தமாக 3615 விருத்தப் பாக்களால் ஆனது இந்தக் காப்பியம். இதிலும் ஒரு சிறப்பு இருக்கிறது. பின்னிணைப்பாக யாப்பு வடிவங்களை அளித்திருக்கிறார். தமிழில் அமைந்த காப்பியங்களிலேயே, தமிழைத் தாய் மொழியாகக் கொள்ளாத வெளிநாட்டவர் ஒருவரால் இயற்றப்பட்டது எனும் பெருமை தேம்பாவணிக்கே உண்டு. மேலும் வீரமாமுனிவரைப் போல, வேறெந்தக் காப்பியப் புலவரும் சிற்றிலக்கியம், அகராதி, இலக்கணம் உரைநடை எனப் பிற இலக்கிய வகைகளில் நூல்கள் படைத்தாரல்லர்.

## 12.3. பாலைபுகு படலம்

குழந்தை ஏசுவுடன் தாய் மரியாள், தந்தை சூசையப்பர் ஆகிய மூவரும் பாலைவனத்தை நோக்கிப் பயணிக்கின்றனர். காலையில் சூரிய உதயத்தில் தொடங்கிய அவர்களின் பயணம் காடு சோலை என்று பல நிலைகளில் அமைகின்றது. கொடும் வெப்பத்திலும் இவர்களைக் கண்ட இயற்கை புன்னகைக்கிறது. அவர்கள் யாழில் எலீய முனிவனின் வரலாற்றைக் கூறுகின்றனர். மாலைப்பொழுதில் அவர்கள் பாலைவனத்தை அடைகின்றனர்.

### 12.3.1. கான் வழிப் பயணம்

*கார் எழு நிசி கோன்மை கடிய, வில் ஒளி அம்பால்,*
*தேர் எழு சுடர் வெம் போர்ச் செங் கொடி உயர் தோன்ற*
*பார் எழு களம் எங்கும் பறவைகள் முரசு ஆர்ப்ப,*
*போர் எழு பொழுதாகப் புலரி வந்து இவர் போனார்.*

கருமையாக ஓங்கி நின்ற இரவின் ஆட்சியை ஒழிக்குமாறு வில்லொளியாகிய அம்பைத் தாங்கிக்கொண்டு, தேரிலே எழுந்து வரும் ஞாயிறு கொடிய போருக்குரிய செங்கொடியை உயர்த்திக் கொண்டு தோன்ற, உலகம் என்னும் எழுச்சிகொண்ட போர்க்களம் எங்கும் பறவைகள் முரசு கொட்டி ஒலிக்க, போருக்கு எழத்தக்க பொழுதாக விடியற்காலை வந்து தோன்றவே, மூவரும் அங்கிருந்து எழுந்து போயினர்.

*வான் பயில் மதி ஏந்தும் வடி வடிவு அடியாளும்,*

*தேன் பயில் மலர் வாகைத் திருமறை அறையோனும்,*
*ஊன் பயில் உரு நாதன் ஒளி அடி தொழுது ஏந்தி,*
*கான் பயில் மலர் பூத்த கடி வன நெறி போனார்.*

வானத்தில் தோன்றும் சந்திரன் தன்னைத் தாங்கி நிற்கும் அழகிய வடிவம் கொண்ட திருவடிகளை உடைய மரியாளும், தேன்நிறைந்த மலர்க் கொடி ஏந்தித் திருமறை வாழும் அறை போன்ற சூசையும், ஊனோடு கூடிய மனித உருவம் கொண்ட குழந்தை நாதனின் ஒளி பொருந்திய அடிகளைத் தொழுது ஏந்தி யெடுத்துக் கொண்டு, மணம் பொருந்திய மலர்கள் பூத்த சிறந்த சோலை வழியாக நடந்து போயினர்.

குறிப்புகள்

**12.3.2. சுர வழிப் பயணம்**

*துயில் என விரி பூங்கா தும்பிகள் குழல் ஆக,*
*குயில் இனம் முழவு ஆக, குளிர் பொழில்அரங்கு ஆக,*
*மயில் இனம் நடம் ஆடும் மது வழி வழி நீக்கி,*
*அயில் என அழல் வீசும் அருஞ் சுர நெறி போனார்.*

ஆழ் துயிலில் மூழ்கியதுபோல் விரிந்து கிடந்த பூஞ்சோலையில் வண்டுகள் குழல் ஊதுவனவாகவும், குயில் இனங்கள் கொம்பு ஊதுவனவாகவும், குளிர்ந்த வனமே நாடக அரங்காகவும் கொண்டு, மயில் இனங்கள் நடனமாடும் தேன் வழிந்தோடும் அச்சோலை வழியைக் கடந்து, அம்புபோல் நெருப்பை அள்ளி வீசும் அரிய பாலைவனத்து வழியில்அவர்கள் தொடர்ந்து சென்றனர்.

**12.3.3. பயணம் கண்டு பதைத்தன எல்லாம்**

*நண்ணிய பொருள் நீங்கி நல்குரவு எதிர் உற்ற*
*புண்ணிய மரபோர், உட் புலன் அயர்வு இலர்போன்றே,*
*மண்ணிய வனம் நீங்கி, வசி குடி உறை கானம்*
*கண்ணிய நெறி போகக் கண்டு, அழுதன காவே.*

தம்மிடம் பொருந்தியிருந்த சிறிதளவான பொருளையும் விட்டு நீக்கி, வறுமையை வரவேற்றுக் கொண்ட புண்ணிய இயல்புடையோர் மூவரும், வெளியே மட்டுமின்றி உட்புலனாகிய உணர்விலும் சோர்வு இல்லாதவர் போன்று, அழகு செய்யப்பட்டது போன்ற சோலையை நீங்கி, நெருப்பு நிலையாகக் குடி கொண்டு தங்கும் பாலைவனத்தை நோக்கிய வழியில் போகக் கண்டு, அச்சோலையின் இடங்களெல்லாம் அழுதன.

*பூஇடை அழவண்டு, பொதும்பிடை அழ மஞ்ஞை,*
*காஇடை அழ அம்பூ, கடி மலர் தவழ் யாறு*
*தாவு இடை அழ, “அந்தோ, தகாது! “ என அழ யாவும்,*
*கோ இடை அரசு ஆள்வோர் கொடு வனமஅருகு உற்றார்.*

பூக்களில் அமர்ந்து வண்டுகள் அழவும், பொந்துகளில் நின்று மயில்கள் அழவும், சோலையில் மலர்ந்த அழகிய பூக்கள் அழவும், மணமுள்ள மலர்கள் தன் மேல் தவழச் செல்லும் ஆறு தன் பாய்ச்சலிடையே இரைந்து அழவும், "ஐயோ! இவர்கட்கு இது தகாது!" என்று எல்லாமே அழவுமாக, வானத்தில் அரசாள்வோராகிய அம்மூவரும் கொடிய பாலைவனத்தின் அருகே சென்று சேர்ந்தனர்.

**12.3.4. கொடிய பாலைவனம்**

*மேல் சபையாக வானோர் விருப்பு எழீஇ மருங்கில் சூழ,*
*நூல் சபையாகக் கற்றோர் நுதலிய புகழின் மிக்கோர்,*
*கோல் சபையாக மூவர், கொடுந் துயர் குடியாய் வைகும்*
*பேற்சபை என்னும் கானம் பெற்று, உளம் தளரா புக்கார்.*

மேலுலகத்துக் குழுவினராகப் பத்தாயிரம் வானவர் இரு பக்கமும் தம்மைச் சூழ்ந்துவர, நூல் உணர்ந்தோர் அவையில் இடம் பெறத்தக்க கற்றோர் கருதிய புகழுக்கெல்லாம் மேம்பட்ட வரும், ஆட்சிக்குரிய குலத்தவருமாகிய இம்மூவரும், கொடிய துன்பங்களெல்லாம் குடிகொண்டு தங்கும் பேற்சபை என்னும் பாலைவனம் வரப்பெற்று, தம் உள்ளம் தளராமல் அதனுள் புகுந்தனர்.

*காட்டிய விரலைத் தீக்க, கண்ட கண் விழியைத் தீக்க,*
*"சூட்டிய கொடிய கானம் சுடும்" எனில், எனும் வாய் தீக்க,*
*ஈட்டிய அழலை எண்ணில், எண்ணிய எண்ணம் தீக்க,*
*கோட்டிய மனத்தின் தீக்கும் கொடியது ஓர் சுரம் அது அன்றோ.*

இதுவே அப்பாலைவனமென்று சுட்டிக்காட்டிய விரலையே தீய்க்கவும், அதுகேட்டு நோக்கிய கண்ணின் பார்வையைத் தீய்க்கவும், "இப்பெயர் சூட்டியுள்ள இப்பாலைவனம் சுடும்" என்று ஒருவன் சொன்னால், அவ்வாறு சொல்லும் வாயையே தீய்க்கவும், அங்கே திரண்டுள்ள நெருப்பை மனத்தால் எண்ணினால், எண்ணிய அவ்வெண்ணத்தையே தீய்க்கவுமாக, கோணிய

மனம் போலத் தீய்க்கும் கொடியதோர் பாலைவனம் அது.

*புனல் பசை இழந்த கானில், பொழி துளி உள்ளி வந்தால்,*
*கனப் பசை இழந்து தாமும், கார்த் திரள் அகன்று வேக,*
*இனப் பசை இழந்த தீயோர், இரவலர் தம்மைக் கண்டு,*
*மனப் பசை இழந்த கோரம் மானிய சுரம் அது அன்றோ.*

நீர்ப்பசையே இல்லாத அப்பாலைவனத்தில், மேகக்கூட்டங்கள் மழைத் துளியை அங்குப் பொழிய நினைந்து வந்தால், மேகத்திற்குரிய ஈரப் பசையை இழந்து, தாமும் நீங்கிப்போய் அதன் வெப்பத்தால் மேலும்

வேகும். இவ்வாறு தம்மைப் போன்ற மனித இனத்தின் மீது அன்புப் பசை இழந்த தீயோர், தம்மை நாடிவரும் இரவலரைக் கண்டு, சிறிது ஒட்டிக் கொண்டிருந்த மனப்பசையையும் இழந்தகொடுமைக்கு நிகரான பாலைவனம் அது.

குறிப்புகள்

*தீய் வயிறு ஆர்ந்த காலும், செஞ்சுடர்க் கதிரும், செந் தீ*
*மேய் வயிறு ஆர்ந்து வேகும் விரி மணற் பரப்பும் தீ ஆய்,*
*நோய் வயிறு ஆர்ந்த கானம், நொடை நல மாதர் வஞ்சம்*
*காய் வயிறு ஆர்ந்த வாயும் கண்களும் மனமும் போன்றே.*

அப்பாலைவனத்து நெருப்பைத் தன் வயிற்றுள் நிறையக் கொண்ட காற்றும், செந்நிறக் கதிர்களை உடைய பகலவனும், செந்நெருப்பை மேய்ந்த தன் வயிறு நிறைந்து அதனால் வேகும் விரிந்த மணற் பரப்பும் நெருப்பாகவே மாறி, முறையே, பெறும் விலைப்பொருட்டுத் தம் நலத்தை விற்கும் விலைமாதர் தம் வஞ்சத்தால் காய்ந்த உள்ளிடத்து நிறைந்து நின்று வெளிப்படும் வாய்ச் சொல்லும் கண் பார்வையும் மன நினைவும் போன்றன.

### 12.3.5. பாலை குளிர்ந்தது

*போர் முகத்து அழன்ற வீரர் புகைந்து எனப் புகைந்த கானம்,*
*ஏர் முகத்து எழுந்த மூவர் எய்திய வேலை, தானும்*
*தார் முகத்து உவந்த மன்றல் தகும் புது மகளிர் போன்று,*
*நீர் முகத்து, இவர் அன்பு ஆர்ந்த நெஞ்சு என, குளிர்ந்தது*
*அன்றே.*

சினந்த வீரர் போரிடத்துப் புகைந்த தன்மையாய் வெப்பத்தால் புகைந்து நின்ற அப்பாலைவனம், அழகிய முகத்தோடு அங்கு எழுந்தருளிய இம்மூவர் தன்னை வந்தடைந்தபோது திருமணத்திற்குத் தகுதிவாய்ந்து மணமாலையைக் கண்டு மகிழ்ந்த புது மணமகளிர் போன்று, தானும் நீர்ப்பசைப் பெற்று, இம் மூவர் தம் அன்பார்ந்த நெஞ்சம் போல் குளிர்ந்தது.

*அயின்று எழும் விரை வாய்த் தாழை அலர் மடல் பள்ளி பலநாள்*
*துயின்று எழும் இள வேனில், துதித்த பங்குனியில் செல்ல,*
*குயின்று எழும் குயில்கள் காட்ட, கோது அற மகிழ் பூங் காவின்,*
*பயின்று எழும் புகழின் மிக்கோர் பணி முகத்து, உவந்த பாலை.*

அக்குளிர்ச்சியைத் தானும் பருகி எழுச்சி கொள்ளும் மணம் பொருந்திய தாழம்பூ மடலைப் படுக்கையாகக் கொண்டு உறங்கி எழும் நல்ல இளவேனிற் பருவம், போற்றத்தக்க பங்குனி மாதத்தில் இயங்கிக் கொண்டிருந்தது. அது கண்டு கூவிக் கொண்டு எழும் குயில்கள் அது இளவேனிற் பருவமென்று காட்டின. அப்பொழுது, வழக்கமாகப் புலவர்

வாயினின்று எழும் புகழையெல்லாம் மிஞ்சிய அம்மூவர்தம் ஏவலின் முகத்தே, குற்றமற மகிழ்ந்த பூஞ்சோலைபோல, அப்பாலை நில இடங்களெல்லாம் மகிழ்ந்தன. இளவேனிலுக்கு முந்திய கார், கூதிர், முன்பனி, பின்பனியெல்லாம் வெயில் மிகுதியாக இராமையால், அக்காலமெல்லாம் வெயில் தாழம்பூ மடலுக்குள்ளே துயின்று கொண்டிருந்ததாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. முதுவேனில் போலக் கொடுமையின்றி, இன்பம் தருவதாதலின், "இளநல்வேனில்" என்றார். அப்பருவத்திலும், பிந்திய சித்திரை போலாது, முந்திய பங்குனி யாவரும் போற்றத்தக்கதாதலின், "துதித்த பங்குனி" என்றார். இருண்ட பாவச் செயலால் கொதித்துக் கிடந்த நெஞ்சில் வந்து பொருந்திய தெய்வ அருளின் மாண்பினால் செவ்விய நல்வினை புகுந்த காரணத்தால் தீது நீங்கிச் சிறந்த தன்மை போல, அப்பாவ வினையை அழித்த இம் மூவரின் அழகிய முகத்தினின்று பொழிந்த அருளினாலே வெப்பத்தைத் தரும் செயலில் சினந்து நின்ற அப்பாலைவனம் மணம் பொழியும் மலர் முகத்தோடு மகிழ்ந்து நின்றது.

*நிறை மலர் ஒழுக்கத் தாள் கீழ், நித்திலப் பரப்பில் தூய*
*நறை மலர் பரப்பினாற் போல், நளிர்பட ஒழுகி, சூழ*
*உறை மலர் மணவாய்த் தென்றல் உரைத்த மங்கலத்தின் வீச*
*மறை மலர் பூண்ட மார்பர் மகிழ்வு அலர் மனத்தின் போனார்.*

முத்துக்களைப் பரப்பிய இடத்தின்மேல் தூய மணமுள்ள மலர்களைப் பரப்பினாற்போல், நிறைவாக மலர்ந்த ஒழுக்கம் பூண்ட அம்மூவர் அடியின் கீழ், அப்பாலை நிலம் குளிர்ச்சிப் பொருந்த அமைந்தும், சுற்றிலுமுள்ள மலர்களின் மணத்தைத் தன்னிடத்துக் கொண்ட தென்றல் மங்கலம் கூறிய தன்மையாக வீசவுமாக, வேதத்தை மலர் மாலையாக அணிந்த மார்பு கொண்ட அம்மூவரும் மகிழ்ச்சிப் பொங்கும் மனத்தோடு நடந்து போயினர்.

*மின் நிறக் கொடியைச் சூட்டி, விளங்கிய மணியின் வில் செய்*
*நல் நிறத்து ஆரம் பூண்டு, நாடிவந்து அணியின் தோன்றும்*
*செல் நிறக் குடையின் கொன்ற, செழித்த செங்கதிரின் வெப்பத்து*
*இன் நிறக் குளிர் பூ நீழல் இயங்கிய சிறப்பின் போனார்.*

மின்னலென்னும் அழகிய கொடியை மேலே சூட்டி, விளங்கிய மணிகளைப் போன்ற வான வில்லாலாகிய நல்ல நிறமுள்ளமாலையை அணிந்து தம்மை நாடிவந்து அணியணியாகத் தோன்றும் மேகமென்னும் நிறக் குடையினால் மறைக்கப்பட்டும் செழித்து நின்ற பகலவன் வெப்பத்தின் நடுவே தோன்றிய இனிய அழகிய குளிர்ந்த மெல்லிய நிழலில் இயங்குதலாகிய சிறப்போடு அவர்கள் சென்றனர். இருண்ட பாவச்

செயலால் கொதித்துக் கிடந்த நெஞ்சில் வந்து பொருந்திய தெய்வ அருளின் மாண்பினால் செவ்விய நல்வினை புகுந்த காரணத்தால் தீது நீங்கிச் சிறந்த தன்மை போல, அப்பாவ வினையை அழித்த இம் மூவரின் அழகிய முகத்தினின்று பொழிந்த அருளினாலே வெப்பத்தைத் தரும் செயலில் சினந்து நின்ற அப்பாலைவனம் மணம் பொழியும் மலர் முகத்தாடு மகிழ்ந்து நின்றது.

குறிப்புகள்

*பாகு இளஞ்சுவை பெய் வில் ஆர் பவள வாய்த் துறையில்வைத்த*
*நாகு இளம் தரளம் காட்டி நகை தரு மடந்தை போல,*
*ஆகு இளம் பனிப் பூங் கானத்து, அழகு அணி செய்தால்என்ன,*
*வாகு இளஞ் சுடர் செய் மேனி வானவர் காட்டி நின்றார்.*

வெல்லப் பாகின் இளஞ் சுவை பெய்து வைத்ததும் ஒளி நிறைந்த பவளம் போன்றதுமாகிய தன் வாயாகிய துறையில் இட்டுவைத்த, சங்கிடத்துப் பிறந்த இளமுத்துப் போன்ற பற்களைக் காட்டிப் புன்முறுவல் செய்யும் மங்கைபோல, அங்குப் பாலையினின்று உண்டாகிய இளம் பனிபோல் குளிர்ந்த பூஞ்சோலையில், அழகுக்கு அழகு செய்தாற்போல, அழகு நின்று இளங் கதிர் பரப்பும் மேனியை வானவர் காட்டி நின்றனர்.

### 12.3.6. பாலையில் எழுந்த பாடல்

*ஈர் எழு வகுப்பின் தேர்ந்த இன மணி நல் யாழ் வாங்கி,*
*ஓர் எழு குரலின் ஓதை உரிக் கிளை தளிர்ப்ப, பாகின்*
*நேர் எழு மிடற்றின் ஓதை நெறிகள் மூன்று இயக்கி, கூட்டி,*
*பார் எழு நடங்கள் வாட்டப் பாடினர் சிறப்பின், வானோர்.*

அவ்வானவர், பதினான்கு வகையாகத் தெரிவு செய்யப்பட்ட பல இன மணிகள் பதித்த நல்ல யாழ்களைக் கைகளில் எடுத்துக் கொண்டு, குரல் முதலாகக் குறிக்கப்படும் ஏழு இசையொலிகள் தத்தமக்குரிய உறவோடு தழைக்குமாறு, வெல்லப்பாகிற்கு நிகராக எழும் குரலின் ஓசையை மூன்று நெறிகளாலும் இயக்கி, பின் அவற்றைக் கலந்து நிரவி, இவ்வுலகில் காணப்படும் நடனங்களையெல்லாம் வாட்டிய சிறப்போடு பாடினர்.

*காமம் சால் வியப்பில் ஓங்க,*
*கண்டவை உள்ளி, பைம்பூந்*
*தாமம் சால் கொடியோன்,*
*விண்ணோர் தளங்களுள் தலைவன் என்ன*
*ஏமம் சால் இன்பத்து ஓர்ந்த*
*இரும் புகழ் தளிர்த்து, தேவ*
*நாமம் சால் வழங்க,*
*நல் யாழ் நடையொடு பாடினானே.*

பசுமையான பூமாலைக்கு ஒப்பான மலர்க் கொடியை உடையவனாகிய சூசை, இவ்வாறு கண்டவற்றைத் தன் மனத்துள் கருதிப் பார்த்து, அன்பு நிறைந்த வியப்போடு எழுச்சி கொண்டு, வானவர் படையணிகளுக்கெல்லாம் தானே தலைவன் போன்று, பாதுகாப்பு நிறைந்த இன்பத்தோடு தான் உணர்ந்த பெரும் புகழால் தழைத்துத், தெய்வப் பெயர் மிகுதியாக வழங்க வேண்டி, வானவர் அசைத்த நல்ல யாழின் போக்கிற்கு எற்ப, பின்வருமாறு பாடத் தொடங்கினான்.

*"பாலையின் வெப்பம் பணி மருதத்து ஆக்கினையே,*
*மாலையின் தாமத்து அருள் நீதி வல்லோய் !*
*அருள் நீதி வல்லோன் அடி சென்றார், இங்கண்,*
*தெருள் நீதி நீங்காதார், தீது இடும்பை நண்ணாரே.*

"மாலையின் ஒழுங்கு போல அருளும் நீதியும் வல்லமையும் கொண்ட ஆண்டவனே, நீ பாலை நிலத்தின் வெப்பத்தைக் குளிர்ந்த மருத நிலத்துக்கு ஒப்பாக மாற்றினாய்! அருளும் நீதியும் வல்லமையும் கொண்ட இவ்வாண்டவன் அடியைச் சார்ந்தவர், தெளிந்த நீதி நீங்காதவராய், இவ்வுலகில் தீமையும் துன்பமும் அடைய மாட்டார்.

*"வீங்கு ஓத நீர் நிலை ஆம், வெய்ய நஞ்சு இன் அமுது ஆம்,*
*ஈங்கு ஓத ஒப்பு இறந்த எந்தை அடி சென்றால்!*
*எந்தை அடி சென்றார், எங்கும் இடர் மொய்ந்து உலவ,*
*சிந்தை மகிழ, தாம், தீது இடும்பை நண்ணாரே.*

"இவ்வுலகில் தனக்கு நிகராகக் கூறுதற்கு உவமையே இல்லாது கடந்து நின்ற எம் தந்தையாகிய ஆண்டவனின் திருவடியைச் சரணென்று அடைந்தால், பொங்கி எழுந்த கடல் நீரும் நிலை கொண்டு நிற்கத் தக்கதாகும்; கொடிய நஞ்சும் இனிய அமுதமாகும்! எங்கும் துன்பம் திரண்டு உலவிக் கொண்டிருக்க, எம் தந்தையாகிய ஆண்டவனின் திருவடியைச் சரணென்று அடைந்தவர் மட்டும் மன மகிழ்ச்சிக் கொண்டு, தீமையும் துன்பமும் அடையார்.

**12.3.7. சூசையின் போற்றிப் பாடல்**

*"வான் வாழ் அமரர் வணங்கித் தலை ஏற்றும்*
*தேன் வாழ் அடி சென்றார் தீது இடும்பை நண்ணாரே.*
*தீது இடும்பை நண்ணுவர், இச்சீரடியை நாடாதால்,*
*வாது இடும்பை வாழ்க்கை வழுக்கு இவறும் தீயோரே."*

"வானுலகில் வாழும் வானவர் வணங்கித் தம் தலைமேல் ஏற்றிப் போற்றும் தேன் வாழும் மலர் போன்ற இத்திருவடியைச் சரணனென்று சென்றடைந்தோர் தீமையும் துன்பமும் அடைய மாட்டார். வாதும் துன்பமும் நிறைந்த இவ்வுலக வாழக்கையில் தவறான இன்பங்கள் மீது

ஆசை வைக்கும் தீயோரோ, இச் சிறிய அடிகளைத் துணையாக நாடாமையால், தீமையும் துன்பமுமே அடைவர்."

**12.3.8. வானவர் படைத்த விருந்து**

*ஏழ் இசைக் குழலினோடு இனிய பண்*
*தொனியினோடு இசை விடாத*
*யாழ் இசைக்கு, இவை எலாம் இணர்*
*நறுங் கொடியினோன் அறைய, நாதன்*
*கேழ் இசைத்து ஒளிறு தாள் கெழுவ*
*வம்பு அலர் நறா மழையை வாரிச்*
*சூழ் இசைத்து இடை உலாம் தொகை*
*இழந்து அமரரே தொழுது போனார்.*

குறிப்புகள்

ஏழு இசைக்கு உரிய குழலோசையோடும் இனிய பாடலின் ஓசையோடும் இசைவு கெடாத யாழின் இசைக்குப் பொருந்த பூங்கொத்தின் நறுமணம் கொண்ட கொடியைத் தாங்கிய சூசை இவையெல்லாம் கூறினான். குழந்தை நாதனின் நிறத்தோடு இசைந்து ஒளிரும் அடிகளில் நிறைய மணம் பொருந்திய மலர்களின் தேனாகிய மழையை வாரிச் சூழ நின்று இசையோடு பொழிந்து, இடையே உலாவும் தம் தொகைக்குக் கணக்கின்றித் தொழுதவண்ணம் வானவர் சென்றனர்.

*இன்னவாய், மருதம் ஒத்து இணர் நறா உமிழ்*
*வனத்து இவர்கள்பல் நாள்*
*துன்ன, வானுலகில் துறுவினார் அனைய உட்*
*சுவையின் விள்ளா,*
*உன்ன வாய் மகிழ்வு துய்த்து, உணவு*
*உணா நினைவும் அற்று ஒழுகி, ஓர் நாள்*
*அன்ன வாய் அமரர் உற்று அணுகி,*
*வான் உரி விருந்து அமைதல் செய்வார்.*

இவ்வாறாக, மருத நிலம் போன்று பூங்கொத்துகள் தேனை உமிழும் அவ்வனத்தில் இவர்கள் பல நாட்களாகச் சென்றிருந்தும், வானுலகிற் சென்றடைந்தவர் போல உள்ளத்துக் கொள்ளும் சுவை நீங்கப் பெறாமல், தம் மனத்தையே வாயாகக் கொண்டு மகிழ்ச்சியையே உணவாக உண்டு, உணவு உண்ணாத நினைவும் அற்றவராய் நடந்து போகையில், ஒருநாள் அவ்விடத்தே வானவர் வந்தணுகி, வானுலகிற்கு உரிய விருந்தை அமைத்து நின்றனர்.

*கொழு நிலா மரகதக் கொடியின்*
*மேல் மணிகள் பூத்து அயருபந்தர்,*
*விழு நிலா விளையும் முத்து அனைய மீன்*

குறிப்புகள்

*விரிவு செய் விரி விதானத்து,*
*எழு நிலா மணி நிரைத்து எழினி வீழ்த்து,*
*இணர் நறா அமளி பாய்த்தி,*
*செழு நிலா மணிமுகத் திருவினோர்*
*அமளியில் பொலிய நின்றார்.*

கொழுமையான ஒளி பொருந்திய மரகதக் கொடியின்மேல் பலவகை மணிகளே மலராய்ப் பூத்து விளங்கும் பந்தலில், சிறந்த ஒளி விளையும் முத்து போன்ற விண்மீன்கள் பரந்து கிடக்கும் விரிவான மேற்கட்டி அமைத்து, எழுந்து பரவும் ஒளி கொண்ட இரத்தினங்களை வரிசையாகப் பதித்த திரைச் சீலையைத் தொங்க விட்டு, தேனுள்ள பூங்கொத்துக்களினால் மெத்தை பரப்பிச், செழுமையான நிலவு போன்ற அழகிய முகங் கொண்ட செல்வராகிய அம்மூவரும் அம்மெத்தையின் மேல் அமர்ந்து பொலிவுடன் விளங்கினர்.

*வில் கலத்து உரு நிலா இலக விட்டு*
*அமரர் சூழ் வியவர் ஆக,*
*பொன் கலத்து அலர் நறாப் புனலும் உய்த்து,*
*அகில் அலர் புகையும் ஆட்டி,*
*பல் கலத்து அமிர்தமே பல சுவைக்கு*
*அமைய வானவர் பரப்பி,*
*சொல் கலத்து இணை இலாச் சுவையில்*
*அத்தகவினோர் துதியொடு உண்டார்.*

தாம் அணிந்திருந்த ஒளியுள்ள அணிகலன்களோடு தம் உருவஒளியையும் இலங்கவிட்டு வானவர் சுற்றிலும் ஏவலராக நின்று, பொற்கலங்களில் தாங்கிய மலர் மணம் கொண்ட பன்னீர் தெளித்து, அகிற் கட்டை வெந்து பரந்த புகையும் காட்டி, பல பாத்திரங்களில் உணவைப் பல்வேறு சுவைக்குப் பொருந்த வானவரே நின்று பரப்பி வைக்கவே, சொல் என்னும் அணிகலனால் இணை சொல்ல இயலாத சுவையோடு, தகுதி வாய்ந்த அம்மூவரும் ஆண்டவனைத் துதித்து அதனை உண்டனர்.

*சால் வரும் தயை உணர்ந்து இனிது*
*உணும் பொழுது, அருந் தகுதி வானோர்*
*கால் வரும் கவரியும் கமழ் வரும்*
*புகையையும் கனிய வாரி,*
*நால் வரும் கல நரம்பு இசை நயந்து எழ,*
*நறா நளின வாயால்*
*பால் வரும் சுவை வரும் பல நரம்பு*

*இசையொடும் பாடினாரே.*

தம்பால் ஆண்டவன் மிகுதியாகக் கொண்டுள்ள தயவை உணர்ந்து அவ்விருவரும் இனிது உண்ணும்பொழுது, அரிய தகுதி கொண்ட வானோர் சிலர் காற்று வருவதற்கான சாமரையும் மணம் வருவதற்கான புகையையும் கனிவோடு வாரிப் பொழியவும், வேறு சிலர் நாலு வகையாகக் கூறப்படும் யாழ்களின் நரம்பிற் பிறக்கும் இசையை விருப்பத்தோடு எழுப்பவும் மற்றும் சிலர் தேனுள்ள தாமரை மலர் போன்ற தம் வாயால் பாலினின்று பிறக்கும் சுவைக்கு ஒப்பான பல நரம்பு கொண்ட யாழின் இசைக்குப் பொருந்தப் பின்வருமாறு பாடலாயினர்.

குறிப்புகள்

**12.3.9. எலீய முனிவன் வரலாறு**

*"தன் தோல் உரித்த பாம்பு ஒத்த தவத்தின்*
*வாளால் பொறி ஐந்தும்*
*கொன்றோன், உளம் பற்று இருள் புக்கா*
*குன்றாச் சீல விளக்கு ஏற்றி*
*நின்றோன், வரும் கால் கடந்து உரைக்கும்*
*நிறை சொல் வல்லோன்,பாப் புகழும்*
*வென்றோன் எலீய முனிவன் விருந்து உண்டு*
*உவந்த வனம் இதுவே.*

"தன் தோலைச் சட்டையாக உரித்தெறிந்த பாம்புக்கு நிகராகத் தவம் என்னும் வாளால் ஐம்பொறிகளின் ஆசையெல்லாம் கொன்றொழித்தவனும், தன் உள்ளத்தில் அகப்பற்று புறப்பற்று என்னும் இருள் புகாதவாறு அவியாத ஒழுக்கம் என்னும் விளக்கை ஏற்றி நின்றவனும், வருங் காலத்தைத் தெய்வக் காட்சியால் கடந்துசென்று கண்டுகூறும் தவறாத நிறை சொல்லில் வல்லவனும், பாக்கள் எடுத்துக்கூறும் புகழ்களுக்கெல்லாம் மேம்பட நின்று வென்றவனுமாகிய எலீயன் என்னும் பெருமுனிவன் விருந்து உண்டு மகிழ்ந்த பாலைவனம் இதுவே ஆகும்.

*"கான் வாழ் சுவைத் தேன் துளி நக்கி,*
*கதி வாழ் மாறாவாழ்வு ஒழிந்து,*
*வான் வாழ் இறையோன் தனை மறுத்து,*
*வசைப் பல் தேவர்த் தொழக் கண்டு,*
*தேன் வாழ் காவும் மன் உயிரும் தேம்பி வாட,*
*முவ்வருடம்,*
*தான், வாழ் உறை கொள் முகில் முகமும்*
*தகைத்த சாப மாமுனியே.*

"காட்டில் உள்ள சுவையான தேன் துளி போன்ற இவ்வுலக இன்பங்களையே நக்கி உண்டு, மோட்ச கதியில் வாழும் மாறாத வாழ்வு பற்றிய எண்ணமும் ஒழிந்து, வானுலகில் வாழும் மெய்யான ஆண்டவனை மறுத்து, இகழ்ச்சிக்குரிய பற்பல தேவர்களை அந்நாட்டவர் தொழக்கண்டு, தேன் கொண்ட சோலைகளும் நிலைபெற்ற உயிர்களும் மெலிந்து வாடுமாறு, மூன்று ஆண்டளவாய், வாழ்விற்குக் காரணமான துளியைத் தன்னிடத்தே கொண்டுள்ள மேகம் தன் முகத்தையும் காட்டாதவாறு தடுத்த சாபத்தில் வல்ல பெரு முனிவனும் தானே ஆவான்.

*"அந் நாள் எல்லாம், தான் நுழை வாய்*
*அசல முழையுள் புக்கு உறைந்த*
*பல் நாள் எல்லாம் முறை தவிரா பறந்து*
*ஓர் காகம் உணவு உய்ப்ப,*
*முன் நாள் இல்லா வரத்து உயர்ந்து,*
*முதல்வன் அடி சேர்ந்தான் என்ன,*
*எந் நாள் எல்லாம் கோடாத*
*இயல்பின் சீல மாமுனியே*

"அந்தக் காலமெல்லாம், தான் நுழைந்தே செல்வதற்குரிய ஒரு மலைக் குகைக்குள் புகுந்து தங்கினான். அந்நாட்களிலெல்லாம் முறை தவறாமல் பறந்து வந்து ஒரு காகம் உணவு கொணர்ந்தது, அப்பொழுது முன் நாட்களில் தான் பெற்றிராத வரங்களில் உயர்ந்து, ஆண்டவன் திருவடியைச் சென்று சேர்ந்தவன் போல, எந்நாளும் எல்லாம் தவறாதஇயல்போடு தவவொழுக்கம் மேற்கொண்டு நின்ற பெருமுனிவன் அவன் ஆவான்.

*"பிழையின் கொடுங் கோன் துறவர்*
*எலாம் பின்றாச் சினத்துக் கொன்ற பினர். "*
*முழையின் கிடந்த இம்முனியும்*
*முரிக்கக் கொணர்மின்! " எனவிட்ட*
*உழையில், ஒரு மூ ஐம்பது வேல்*
*உழவர் ஒருங்கும் வாய் மொழியால்,*
*மழையின் கனலை வான் பொழிய!*
*" வைது என்று எரித்த மாமுனியே.*

"பிழை மிக்க கொடிய மன்னன், மழை பெய்விக்கத் தவறியமையால், தன் நாட்டிலுள்ள துறவியரை எல்லாம் நீங்காத சினத்தோடு கொன்ற பின், "குகைக்குள் அடைந்து கிடந்த இவ்வெலீய முனிவனையும் கொல்வதற்குக் கொணர்வீர்! " என்று ஏவி விட்டபோது, அவ்வாறு வந்த நூற்றைம்பது வேல் வீரரையும் ஒருங்கே தன் வாய்

மொழியால், “வானம் நெருப்பை மழைபோல் பொழிக! “ என்று சாபமிட்டு எரித்த மாமுனிவன் ஆவான்.

*”கொழு கொம்பு இழந்த கொடி அன்ன,*
*கொழுநன் இழந்த இளங்கைமை*
*செழு கொம்பு அன்ன ஊன்றுதற்குத்*
*திதியின் நின்ற ஓர் மகனும்*
*விழு கொம்பு அன்ன வீழ்ந்து இறந்து,*
*விம்மி அழும் தாய் நனி உவப்ப*
*எழு கொம்பு அன்ன, அம்மகனை*
*எழுப்பித் தந்த மாமுனியே.*

குறிப்புகள்

”கொழு கொம்பை இழந்த கொடி போலத் தன் கணவனை இழந்தஓர் இளம் கைம்பெண், செழுமையான கொம்பு போல் தான் ஊன்றி நடப்பதற்கு உறுதி நிலை போல நின்ற ஒரே மகனும் விழுந்த கொம்புபோல் நோயில் விழுந்து இறக்கக் கண்டு விம்மி அழுதாள். அத்தாய் மிகவே மகிழுமாறு, முளைத்தெழுந்த கொம்பு போல் அம்மகனை எழுப்பித் தந்த மாமுனிவனும் இவனே ஆவான்.

*வலம் புங்கு அவனி மா மகள் தன்*
*மருங்குல் மணி நீள் மேகலையோ,*
*சிலம்பும் பசிய பொற் சிலம்போ*
*சிறந்த சோர்தான் நதி சேர்ந்து,*
*புலம்பும் திரையைக் கம்பளத்தால்*
*புடைப்ப அரிதின் பிரித்து, நளிர்ந்து*
*அலம்பும் திரையில் அடி தோயாது*
*அப்பால் கடந்த மாமுனியே.*

”வலிமை மிக்க நிலமென்னும் பெருமகளின் இடையில் அணிந்த நீண்ட மணிமேகலையோ, அவள் காலிற் கிடந்து ஒலிக்கும் பசுமையான சிலம்போ என்னுமாறு சிறந்து கிடந்த சோர் தான் ஆற்றை அடைந்து, அதன் ஒலிக்கும் திரையைத் தன் போர்வையால் அடித்து அரிய விதமாய் நடுவே பிரித்து நிறுத்தி, குளிர்ச்சியோடு இரு புறமும் அலம்பி நின்ற திரைகளின் நடுவே கால் நனையாது அப்பால் கடந்து சென்ற பெருமுனிவனும் இவனே.

*”அப்பால் கடந்த போழ்து, இருளை அகற்றி வீசும் சுடர் கண்டால்,*
*வெப்பால், இரவி இரதமென வேய்ந்து, குளிர்ப்ப விடும் கதிரின்*
*ஒப்பால் மதி தன் இரதமென, உயர் நின்று இழிந்த தேர் ஏறி,*
*எப்பால் அனைத்தும் உணுகாத ஓர்இடத்தில் சேர்ந்த மா முனியே.*

"அவ்வாற்றைக் கடந்து அப்பால் சென்றபோது, இருளை அகற்றுமாறு வீசும் கதிரை நோக்கினாலும், வெப்பத்தை நோக்கினாலும் ஞாயிறு தேர் போலத் தோன்றி, பின் குளிர்ந்த தன்மையாய் விடும் கதிரின் ஒப்புமையால்திங்கள் தேர் போலவும் தோன்றி, வானத்தினின்று இறங்கி வந்த ஒரு தேரில் ஏறி, எவ்விடத்திருந்தும் எல்லாப் பொருள்களும் அணுக இயலாத
ஓர் இடத்தில் சென்று சேர்ந்த மாமுனிவனும் தானே ஆவான்.

*"இன்னும் இந் நாள் தன் உயிர் ஈறு இன்றி*
*இன்பக் கடல் நின்றோன்,*
*பின்னும் இறைவன் தனில் குணித்த*
*பின் நாள் தனில் இவ் உலகு எரிந்து,*
*மன்னும் உயிரோடு உக முடிதல் வருங் கால்,*
*அக் கால் மீட்டு, ஒளியால்*
*மின்னும் உருவோடு, இவ் உலகில்*
*விளங்கத் தோன்றும், மாமுனியே.*

"இன்னும் இந்நாள் வரைக்கும் தன் உயிருக்கு முடிவு இல்லாமல் இன்பக்கடலில் நிலைபெற்றுள்ள இப்பெரு முனிவனே, பின்னும் ஆண்டவன் தனக்குள் கருதிவைத்துள்ள பிற்காலத்தில், இவ்வுலகமும் எரிந்து, நிலைபெற்ற உயிர்களோடு உலக முடிவும் வரும் பொழுது, ஒளியால் மின்னும் உருவத்தோடு, மீண்டும் அக்காலத்தில் இவ்வுலகில் விளங்க வந்து தோன்றுவான்.

*"ஒல்காத் தவத்தின் வரத் தொகையோன்*
*ஒரு நாள் சுடும் இவ்வனத்திடையே*
*செல்கால், தளர்ந்து, ஓர் வானவனும் சென்று*
*தந்த அடை அருந்தி,*
*அல்காத் திறத்து நாற்பது நாள், அருந்தா,*
*பசியா, நெடு நெறிபோய்,*
*நல்காத் திரு நல்கிய மலை,*
*வான் நண்ணி முகில் தோய் முடிசேர்ந்தான்.*

"தளராத தவத்தால் வரங்களைத் தொகையாகக் கொண்டுள்ள அவ்வெலீயன் முன் ஒரு நாள் சுடும் இப்பாலைவனத் திடையே செல்லுங்கால், பசியால் தளர்ந்து, ஒரு வானவன் வந்து தந்த அடையை அருந்தி, குறையாத திறத்தோடு நாற்பது நாட்களாய் வேறொன்றும் அருந்தாமலும், பசிக்கு ஆளாகாமலும் நெடுவழிப் போய், கொடுத்தற்கரிய செல்வமாகிய வேதத்தை ஆண்டவன் தந்தருளிய சீனயி மலையின் வானத்தைத் தொட்டு மேகத்தோடு தோயும் உச்சியை அடைந்தான்.

குறிப்புகள்

*"எஞ்சாத் திறத்தை அம் முனிக்கு*
*அன்று ஈந்தோன், ஈங்கண் இன்று உமக்கே*
*துஞ்சாத் தயையின் வான்விரும்பும்*
*சுவை இவ் விருந்து ஈந்தவன் யாரே?*
*அஞ்சாத் திறத்தின் மூ உலகும் ஆண்டு,*
*உம்மிடத்து மகன் ஆகி,*
*விஞ்சாத் துதி மேல் நின்ற தயை*
*விளைக்கும் இவன் தான்!" எனத்தொழுதார்.*

"குறையாத இத் திறங்களையெல்லாம் அவ்வெலீய முனிவனுக்கு அன்று தந்தவனும், இங்கு அன்று உமக்குமே தூங்காத தயவோடு வானுலகம் விரும்பும் சுவை கொண்ட இவ்விருந்து தந்தவனும் யாரென்று நினைக்கிறீர்கள்? எப்பகைக்கும் அஞ்ச வேண்டாத வல்லபத்தோடு மூன்றுஉலகங்களை ஆண்டு கொண்டிருந்தும், உம்மிடத்து மகனாய் அவதரித்து வந்து, மிகை என்பதற்கு இடமில்லாத தனது புகழினும் மிகுதியாக நிலைபெற்ற தயவை விளைவிக்கும் இவன்தான் அவன்!" என்று சொல்லி, மூவரையும் அவ்வானவர் தொழுதனர்.

**12.3.10. பாலைவனத்து மூன்று வழிகள்**

*தேன் திறத்து இன்னவை செவியிற் கேட்டனர்;*
*வான் திறத்து இன்பு உறீஇ, வையநாதன் என்று*
*ஊன் திறத்து இளவலை ஆசி ஓதினர்;*
கான் திறத்து ஐ எழு காதம் போயினர்.

சூசையும் மரியாளும் தேனின் சுவை போல இவையெல்லாம் செவிதந்து கேட்டனர்; வானுலகிற்கு உரிய இன்பம் தாம் அடைத்து, ஊனுடல் கொண்டு உதித்துள்ள சிறுவனை உலக நாதனென்று வாழ்த்துக் கூறினர்; அப்பாலைவனத்தில் முப்பந்தைந்து காதம் கடந்து போயினர்.

*ஐ எழு காவதம் ஏகி, அப்புறம்,*
*கை எழு சூலத்துக் கவர்க்கும் முந்நெறி,*
*பொய் எழு வழி எனப் போதல் கண்டு உளி,*
*மெய் எழு மிக்கயேல் விளம்பினான் அரோ*

முப்பந்தைந்து காத தூரம் சென்று, அதன்பின், கையில் எழுப்பிப் பிடித்த சூலம் போல் பிரிவு கொண்ட மூன்று வழிகள், பொய் பலவிதமாய்ப் பிரிந்து எழும் தன்மைபோல போதலைக் கண்டு தயங்கியபோது, மெய்க்குத் துணையாக எழும் இயல்புள்ள மிக்கயேல் என்னும் வானவன் இவ்வாறு சொல்லலுற்றான்.

*"நீர் விளை மாரமும், நிழல்செய் ஓமையும்*
*ஏர் விளை முகத்து இடம் கிடந்த இந் நெறி,*

*பார் விளை வாழ்வு எனப் பனி முகத்து, அழல்*
*சூர் விளை கொடியது ஓர் சுரம் அது ஆம் அரோ.*

"நீருள்ள இடத்தில் தழைக்கும் கடம்பும், நிழலை மிகுதியாகத் தரும்ஓமை மரமும் அழகு பொருந்திய முகத்தைக் காட்டி அழைப்பன போல் இடப் பக்கமாய்க் கிடந்த இப் பாதை, இம்மண்ணுலகில் விளையும் வாழ்வு போல், முதலில் குளிர்ந்த முகம் காட்டி, மேலே நெருப்புப் போல் துன்பம் விளைவிக்கும் கொடியதொரு பாலைவனத்துக் கொண்டு சேர்ப்பதாகும்.

"*வலம் படக் கிடந்த அவ் வழியும், முன் நிலை*
*நலம் படக் காட்டிய சிறியர் நட்பு என,*
*அலம் படச் செலச் செல அ. ்.கி, கோறு மாத்*
*திலம் படப் புகுந்து, கல் சிலம்பில் செல்லும் ஆல்.*

"வலப் பக்கமாகக் கிடந்த அவ்வழியும், முதற்கண் நலமுடையதுபோல் காட்டிக்கொள்ளும் அற்பர் நட்புபோல், முதலில் விரிவுபட்டுப் போகப் போகக் குறுகி, கொல்லும் விலங்குகளைக் கொண்ட காட்டினுள் சென்று புகுந்து, பின் கல் மலையில் சென்று முடியும்.

"*நிலத்திடத்து அரசர் கை நீதிக் கோல் என,*
*வலத்து இடத்து எங்கணும் வழுவு இலா, நடுப்*
*புறத்திடத்து உறைவழி, பொருள் பொய்யா மறை*
*நலத்திடத்து, எசித்தினை நல்கும் ஆம்" என்றான்.*

"இவ்வுலகில் அரசர் கையில் தாங்கிய நீதியுள்ள செங்கோல் போல, வலப்புறமோ இடப்புறமோ எங்கும் சாய்தல் இல்லாமல் நடுப் பக்கத்தில் பொருந்திக் கிடக்கும் வழி, மெய்ப் பொருளில் பொய் புகுதல் இல்லாத வேதத்தின் நலத்தைப்போல், எகித்து நாட்டை அடையத் தருவதாகும்" என்றான்.

*செவ்வழி உளத்தினோர் சிறந்து, செவ்விய*
*அவ்வழி நடந்து, ஒளி அரசன் தாழ்ந்து போய்,*
*மெய் வழி ஒளி தரச்சூழந்த விண்ணவர்,*
*மை வழி இரா ஒரு மரத்து ஒடுங்கினார்.*

செவ்விய நெறியிற் செல்லும் இயல்புடைய சூசையும் மரியாளும் அதுகேட்டு மகிழ்ந்து, நேரியதான அந்நடுப்புறப் பாதையிலே நடந்து, ஒளியரசனாகிய ஞாயிறு மறையவே, சூழ நின்ற வானவர் தம் உடல் வழியாக ஒளி தந்து நிற்க, இருள் வழிந்தோடும் அவ்விரவுப் பொழுதைக்கு ஒரு மரத்தடியில் தங்கினர்.

## 12.4. தொகுத்துக் காண்போம்

தமிழ்க் காப்பிய வரலாற்றில் தேம்பாவணியின் நிலையினை நாம் அறிந்தோம். தேம்பாவணியின் அமைப்பையும் சிறப்புகளையும் புரிந்துகொண்டோம். தமிழுக்கு வீரமாமுனிவர் ஆற்றிய தொண்டினையும் நாம் தெரிந்துகொண்டோம். பாலை புகு படத்தினுடைய கதைப் போக்கினையும் அறிந்துகொண்டோம்.

குறிப்புகள்

## 12.5. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. வீரமாமுனிவரின் தமிழத் தொண்டினை விவரிக்க.
2. தேம்பாவணியின் நூல் அமைப்பினைக் காட்டுக.
3. மூவரையும் கண்ட பாலை நிலத்தின் நிலை யாது?
4. எலீய முனிவர் பற்றிய செய்திகள் யாவை?

## 12.6. மேலும் பயில்வதற்கான நூல்

1. தேம்பாவணி, எம். ஆர். அடைக்கலசாமி உரை, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை – 17.

# கூறு- 13 - உமறுப் புலவர் - சீறாப் புராணம்

குறிப்புகள்

### 13.1 சீறாப் புராணம்

தமிழில் எழுதப்பட்ட தலைசிறந்த இசுலாமிய இலக்கியம் சீறாப் புராணம் ஆகும். இந்நூல் இறைதூதர் நபிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாற்றை மையமாகக் கொண்டு தமிழ்மரபுகளைப் பின்பற்றி எழுதப்பட்ட ஒரு காவியம். இதனை இயற்றியவர் 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த உமறுப் புலவர் ஆவார். அதே காலத்தில் வாழ்ந்த வள்ளல் சீதக்காதியின் ஆதரவை உமறுப் புலவர் பெற்றார். வள்ளல் சீதக்காதியின் பெருமையைச் "செத்தும் கொடுத்தான் சீதக்காதி" என்ற சொற்றொடர் விளக்கும். எட்டையபுர சமீன் ஆஸ்தானப் புலவராகத் திகழ்ந்த உமறுப்புலவர் இளம்வயதிலேயே தம் குருவின் எதிரியை வெற்றி கண்டவர். நபிகள் நாயகத்தின் வரலாற்றையும் அறிவுரையையும் சமயத் தொண்டையும் விளக்கி 5027 பாடல்கள் கொண்ட சீறாப் புராணத்தை இயற்றியதால் இசுலாமியக் கம்பர் என்று போற்றப்படுபவர். தலைப்பாகை, முறுக்கு மீசை, கையில் தங்கக்காப்புப் பூண்டு இந்து போல விளங்கிய இவரை எட்டப்ப பூபதியும் சீதக்காதியின் பொருளாளரான அபுல்காசிமும் ஆதரித்து உள்ளனர். இசுலாமியத் தமிழ் இலக்கியங்களில் முதன்மையானது சீறாப் புராணம். 'சீறத்' என்னும் அரபுச் சொல்லில் இருந்தே 'சீறா' என்ற சொல் தோன்றியது. சீறத் - என்ற சொல்லுக்கு வாழ்க்கை வரலாறு என்றும் "புராணம்" என்ற சொல்லுக்குப் புனிதக் கதை என்றும் பொருள். அவ்வகையில் இஸ்லாமியத்தை உலகிற்குப் போதித்து நல்வாழ்வு வாழ்ந்த முகமதுநபி ஸல் அவர்களே இக்காப்பியத் தலைவர். விருத்தப்பாக்களிலான இப்புராணம். சீறாப்புராணத்தில் மொத்தம் 91 படலங்கள் உள்ளன. நூலின் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 5,228. 18 ஆம் நூற்றாண்டில் இந்நூலை ஏடு தேடிப் பதிப்பித்து வெளியிட்டவர் புலவர் நாயகம் செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் (கேனாப் புலவர்) ஆவார்

#### 13.1.1. சீறாப்புராண அமைப்பு

சீறாப் புராணம் இரண்டு பாகங்களில் அமைந்துள்ளது. முதற்பாகத்தில் 44 படலங்களும், இரண்டாவது பாகத்தில் 47 படலங்களும் உள்ளன. முதற்பாகமானது இரண்டு காண்டங்களாக அமைந்துள்ளது.

#### 13.1.2. விலாதத்துக் காண்டம் (மொத்தம் 23 படலங்கள்)

முதற்பாகத்தில் முதலாவதாக உள்ள விலாதத்துக் காண்டம் என்பது நபிகள் நாயகம் அவர்களின் பிறப்பு முதல் திருமணம்

குறிப்புகள்

வரையிலான வாழ்க்கை நிகழ்ச்சிகளை விவரிக்கும் பகுதியாகும். கடவுள் வாழ்த்துப் படலம், நாட்டுப் படலம், தலைமுறைப் படலம், நபியவதாரப் படலம், அலிமா முலையூட்டுப் படலம், இலாஞ்சனை தரித்த படலம், புனல் விளையாட்டுப் படலம், புகைறா கண்ட படலம், பாதை போந்த படலம், சுரத்திற் புனலழைத்த படலம், பாந்தள்வதைப் படலம், நதிகடந்த படலம், புலிவசனித்த படலம், பாந்தள் வசனித்த படலம், இசுறாகாண் படலம், கள்வரை நதிமறித்த படலம், சாமு நகர் புக்க படலம், கரம் பொருத்து படலம், ஊசாவைக் கண்ட படலம், கதீசா கனவு கண்ட படலம், மணம் பொருத்து படலம், மணம்புரி படலம், க.்.பத்துல்லா வரலாற்றுப் படலம் ஆகிய படலங்கள் இதில் உள்ளன.

**13.1.3.நுபுவ்வத்துக் காண்டம் (மொத்தம் 21 படலங்கள்)**

இரண்டாவதாக உள்ள நுபுவ்வத்துக் காண்டம் நபிப்பட்டம் அருளப்பட்டதில் இருந்து மக்கமாநகரில் நபிகள் நாயகம் வாழ்ந்த காலம்வரை நடந்த வரலாற்றினைக் கூறுவதாகும். இது இஸ்லாமிய சமயம், வானவர் மூலம் நபிக்கு அருளப்பட்டதைக் கூறுகிறது. நபிப்பட்டம் பெற்ற படலம், தொழுகை வந்த வரலாற்றுப் படலம், தீனிலைக்கண்ட படலம், உமறுகத்தாபீமான் கொண்ட படலம், உடும்பு பேசிய படலம், உத்துபா வந்த படலம், அபீபு மக்கத்துக்கு வந்த படலம், மதியையழைப்பித்த படலம், தசைக் கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம், அபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலம், ஈமான் கொண்டவர்கள் அபாசா ராச்சியத்துக்குப் போந்த படலம், மானுக்குப் பிணை நின்ற படலம், ஈத்தங்குலை வரவழைத்த படலம், ஒப்பெழுதித் தீர்ந்த படலம், புத்து பேசிய படலம், பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம், பருப்பதராசனைக் கண்ணுற்ற படலம், அத்தாசீமான் கொண்ட படலம், ஜின்களீமான் கொண்ட படலம், காம்மாப் படலம், விருந்தூட்டுப் படலம் ஆகிய படலங்கள் இதில் உள்ளன.

**13.1.4. இசிறத்துக்(ஹிஜிறத்துக்)காண்டம் (மொத்தம் 47 படலங்கள்)**

இரண்டாம் பாகத்தில் இறுதிக்காண்டமான, இசிறத்துக்(ஹிஜிறத்துக் காண்டம்)காண்டம் அமைந்துள்ளது. இது மக்கமா நகரிலிருந்து மதீனா நகருக்கு நபிகள் நாயகம் புறப்பட்டுச் சென்றது முதல் அவர்களின் மதீனாநகர் வாழ்க்கையைக் கூறுவதாகும். ஈமான் கொண்ட படலம், மதீனத்தார் வாய்மை கொடுத்த படலம், யாத்திரைப் படலம், விடமீட்ட படலம், சுறாக்கத்துத் தொடர்ந்த படலம், உம்மி மகுபதுப் படலம், மதீனம்புக்க படலம், கபுகாபுப் படலம்விருந்திட்டீமான் கொள்வித்த படலம், உகுபான் படலம், சல்மான் பாரிசுப் படலம், ககுபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம், ஓநாய் பேசிய படலம், வத்தான் படைப் படலம்,

பாத்திமா திருமணப் படலம், சீபுல் பகுறுப் படலம், புவாத்துப் படலம், அசீறாப் படலம்,பத்னுன்ன குலாப் படலம், பத்றுப் படலம், சவீக்குப் படலம், குதிரிப் படலம், தீயம்றுப் படலம், அபிறாபிகு வதைப் படலம், அசனார் பிறந்த படலம், அபூத்தல்ஹா விருந்துப் படலம், உகுதுப் படலம், அமுறாப் படலம், ககுபு வதைப் படலம்,சுகுறாப் படலம், பதுறு சுகுறாப் படலம், உசைனார் பிறந்த படலம், தாத்துற் றஹ்ஹாக்குப் படலம், சாபிர் கடன் றீர்த்த படலம், முறைசீக்குப் படலம், கந்தக்குப் படலம், உயை வந்த படலம், பனீ குறைலா வதைப் படலம், லுமாமீமான் கொண்ட படலம், செயினபு நாச்சியார் கலியாணப் படலம், ஒட்டகை பேசிய படலம், மழையழைப்பித்த படலம், அந்தகன் படலம், கவுலத்தை விட்டுக் கூட்டின படலம், உமுறாவுக்கு போன படலம், சல்மா பொருத படலம், உறனிக் கூட்டத்தார் படலம் ஆகிய படலங்கள் இதில் உள்ளன.

### 13.2.1. உமறுப்புலவர்

உமறுப்புலவர் ( 1642 – 1703 ) தூத்துக்குடி மாவட்டம் நாகலாபுரத்தைச் சேர்ந்தவர். இவரின் தந்தை சேகு முதலியார் என அழைக்கப்பெற்ற செய்கு முகம்மது அலியார் ஆவார். எட்டயபுர மன்னன் வெங்கடேஸ்வர எட்டப்ப பூபதியின் அவைப் புலவராக விளங்கிய கடிகைமுத்துப் புலவரிடம் உமறு தமிழ்ப் பயின்று புலமை பெற்றார். தம் ஆசானுக்குப் பின் எட்டயபுர மன்னனின் அவைப்புலவராகப் பொறுப்பேற்றார். செய்கு அப்துல் காதிர்மரைக்காயர் என்ற வள்ளல் சீதக்காதியின் வேண்டுகோளின் வண்ணமே உமறுப்புலவர் சீறாப்புராணத்தை எழுதினார். நூல் முடிவுறும் முன்னரே சீதக்காதிமறைந்தார். பின் அபுல்காசிம் என்ற வள்ளலின்உதவியால் சீறாப்புராணம் நிறைவு பெற்றது. உமறுப்புலவர் முதுமொழிமாலை என்ற என்பது பாக்களால் ஆன நூலையும் படைத்துள்ளார்.

### 13.2.2. உமறுப்புலவர் வரலாறு

அண்ணல் பெருமானார் முஹம்மது(ஸல்) அவர்களின் காலத்தில் அப்துல்லாஹ் இப்னு பாகிர் என்பார் வாழ்ந்திருந்தார். பெருமானாரின் திருத்தோழராகும் பேறு பெற்ற அன்னார் , அண்ணலாரின் அரிய வாழ்த்தினைப் பெற்றவர். அவரின் வழித்தோன்றல்கள் அனைவரும் காலமெல்லாம் கமழ்மணத்துடன் வாழவேண்டும் என்றே அண்ணலார் ஆசி கூறினார். அந்த பரம்பரையில் வந்தவரே “சேகு முதலியார்“ என்ற செய்கு முஹம்மது அலியார் ஆவர். அன்னார் மலையாள நாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்து, திருநெல்வேலியைச் சார்ந்த நாகலாபுரத்தில் குடியிருந்துகொண்டு, அதையடுத்திருந்த எட்டையபுரத்து மகாராஜாவிடம்

வாசனைத் திரவியங்களை எடுத்துப் போய் விற்றுக் காலம் கழித்து வந்தார்.

உயர்ந்த மணப்பொருட்களை வழங்கித் தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட சேகு முதலியார் தம் அருகிலேயே வாழ்ந்து வரவேண்டுமென்று மன்னர் விரும்பினார்.எனவே, சேகு முதலியாரும் மன்னரின் விருப்பிற்குக் கட்டுப்பட்டு,நாகலாபுரத்திலும் எட்டையபுரத்திலுமாக வாழ்ந்து வந்தார்.அக்காலத்தில்தான், அவருடைய ஒப்பற்ற அருந்தவக் கொழுந்தாக “உமறு“ என்ற அழகிய குழந்தை பிறந்தது.

குறிப்புகள்

இளமையிலே எழிலும் கல்வியார்வமும் வாய்க்கப் பெற்ற சிறுவர் உமறு, எட்டையபுரத்து அரண்மனைத் தமிழ்ப்புலவராயிருந்த “கடிகை முத்து புலவர்“என்பவரிடம் தமிழ்க் கல்வி பயிலத் தொடங்கினார். பல்வகைக் கல்வி-கேள்விகளில் தேர்ந்த உமறு, தம் ஆசானின் பெருமதிப்பிற்குரிய மாணவரானார். இவ்வாறிருக்கையில், ஒருநாள் வடநாட்டிலிருந்து ஆரியமும் அருந்தமிழும் கற்றுப் புலமை பெற்ற “வாலை வாருதி“ என்ற புலவர் எட்டையபுர அரசவைக்கு வந்து சேர்ந்தார். தம்மை வாதில் வெல்லத் தக்கார் யாருமிலார் என்று அவர் மார் தட்டிப் பேசிப் பிற புலவர்களை வாதுக்கழைத்தார். அதன்படியே எட்டையபுரத்து அரசவையிலும் வந்து அறிவித்தார். மன்னரும் ஆவன செய்ய இசைந்தார்.

புலமைத் திறத்தாலன்றி, மாய மந்திரங்களாலேயே பல அரசவைப் புலவர்களை வெற்றிகொண்ட வாலைவாருதியைப் பற்றிக் கடிகைமுத்துப் புலவர் கேள்வியுற்றிருந்தார். அதனால், வித்தைகள் புரியும் வித்துவானைத் தம்மால் எவ்வாறு வெற்றிகொள்ள முடியுமென்ற நீங்காக் கவலையில் ஆழ்ந்திருந்தார்.

ஆசானின் கவலையை அறிந்த மாணவர் உமறு, அவரை அணுகி, கவலைக்கான காரணத்தை விளங்கிக் கொண்டார். எனவே, வாலை வாருதியுடன் வாதிடுவதற்கான குறிப்பிட்ட நாள் வந்ததும், தம் ஆசிரியரிடம் அவருக்குப் பகரமாக அரசவை செல்லுவதற்கான அனுமதியை வலிந்துப் பெற்று, எட்டையபுரத்து அரசவைக்கு வந்து சேர்ந்தார். உடல் நலக் குறைவால் கடிகைமுத்துப் புலவர் வரவில்லையென்றும், அவருக்குப் பகரமாக அவரின் மாணவர் வந்திருக்கிறார் என்றும், வாலை வாருதி தம் சொற்பொழிவைத் தொடங்கலாம் என்றும் மன்னர் உத்தரவிட்டார்.

அதைச் செவியேற்ற வாலைவாருதி, தம் வலக்கையிற் போட்டிருந்த தங்கக் கடகத்தை அசைத்து மேலேற்றினார். வழக்கமாக அக்கடகத்திலிருந்து ஒலிக்கும் “வாலைவாருதி என்றறியீரோ“ என்ற சொற்கள், அன்றைக்கு மட்டும், “வாலைவாருதி என்றறியாயோ பிள்ளாய்!“

என்று உண்டாயின. அப்போது உமறுப் புலவர், தம் இடுப்பில் செருகியிருந்த யாழ்ப்பாணத்து எழுத்தாணியை எடுத்து நிலத்தில் ஊன்றி, ”என் எழுத்தாணியே! இவருக்கெதிர் பேசு!” என்று கட்டளையிட்டார். ஒன்றும் நிகழவில்லை! பின்னும் உத்தரவிட்டார்.

அப்போதும் ஏதும் நிகழவில்லை! மூன்றாவது முறையிலும் முயன்று தோல்வி கண்ட உமறு, கண்கள் சிவக்க, முகத்தில் தீக்கனல் பறக்கக் கடுஞ்சினம் கொண்டு, எழுத்தாணியைப் பார்த்து, “பேசு!“ என்று உரக்கக் கூறி உத்தரவிட்டார். அவை கிடுகிடுத்த அவ்வோசையைத் தொடர்ந்து, அவ்வெழுத்தாணியிலிருந்து கீழ்க்காணும் பாடல் உதிர்ந்து உள்ளங்களை அதிர வைத்தது.

*”சமரதுர கததுங்க மனருஞ்ச பாசென்று*
*சரிசமா சனமீதிலே*
*அமரவொரு நரகொம்பு தினமுஞ்சு மாசெல்லு*
*மமுதகவி ராஜனானே*
*திமிரபகை வரைவென்ற பருதியெனு*
*மெமதெட்டத் தீரனணி வாயில்வித்வான்*
*உமறுகுமு றிடிலண்ட முகடும்ப*
*டீரென்னு முள்ளச்சம் வையும்பிள்ளாய்!”*

இதனைச் செவியுற்ற புலவர் வாலைவாருதி, உளம் பதறி, மெய் நடுக்குற்று, தனது மந்திரச் சக்தியெல்லாம் இத்தகைய அற்புதத்தின் முன் அற்பம் என்றுணர்ந்து, எழுந்து சென்று உமறு புலவரிடம் மண்டியிட்டு மன்னிப்புக் கோரி, அரசவையை விட்டு அகன்றார். இந்நிகழ்ச்சி, மன்னருக்கு உமறுப் புலவர் மீது ஒப்பற்ற மதிப்பை ஏற்படுத்திற்று. மகிழ்ச்சிப் பெருக்கால், மன்னர் தம்மிடமிருந்த விருதுகள் பலவற்றையும் உமறுப் புலவருக்கு வழங்கி அனுப்பிவைத்தார். வெற்றி பெற்று வீடு திரும்பிய தம் மாணாக்கரை இறுகத் தழுவிக்கொண்ட கடிகைமுத்துப் புலவர், தாம் அப்போது முதுமை எய்திவிட்டதால், அன்றுமுதல் உமறே எட்டையபுரத்து அரண்மனை அவைப் புலவராக இருக்கவேண்டுமென்று ஆசி கூறி அனுப்பி வைத்தார். அன்று முதல் உமறுப் புலவர் எட்டையபுரத்து அரண்மனையை அலங்கரித்து வந்தார்.

**13.2.2. சீறாப்புராணம் இயற்றப்பெற்ற வரலாறு**

தமிழகத்தில் ஆங்காங்கிருந்த முஸ்லிம் மக்கள் இலக்கிய ஆர்வத்துடன் கம்பராமாயணம், மகாபாரதம் போன்ற இலக்கியங்களின் உபந்நியாசங்களைக் கேட்டு வருவது அன்றைய வழக்கமாக இருந்தது.அக்காலத்தில்,இராமநாதபுரச் சேதுபதி மன்னரின் அமைச்சராய் இலங்கி வந்த செய்கப்துல் காதிர் என்ற “சீதக்காதி மரைக்காயர்“அவர்கள்

இதனை உணர்ந்து, முஸ்லிம்கள் அவர்களின் மார்க்க அடிப்படையில் அமைந்த பேரிலக்கியங்களின் உபந்நியாசங்களைக் கேட்கவேண்டும் என்ற பெருவிருப்பை உடையவராயிருந்தனர். தமது இவ்வேட்கையைத் தணிப்பதற்கான நல்வாய்ப்பை எதிர்நோக்கியும் காத்திருந்தார்.

குறிப்புகள்

இவ்வாறிருக்கையில்,ஒருநாள் அரசாங்க வேலையின் நிமித்தம் சீதக்காதி மரைக்காயர் அவர்கள் எட்டயபுர அரசவைக்குச் செல்ல நேர்ந்தது.ஆங்கு உமறு என்ற பெயரில் ஒரு புலவர் இருக்கக் கண்டு,"இவரே பெருமானாரின் வாழ்க்கையைக் காப்பியமாகப் பாட வல்லவர்"என்று ஓர்ந்தார். சின்னாட்கள் கழிந்த பின்னர் தமதில்லத்தில் நிகழ்ந்த விருந்தில் கலந்துகொள்ள உமறுப் புலவர் வந்த போது தமது உள்ளக் கிடக்கையை அன்னாரிடம் வெளியிட்டார் சீதக்காதி வள்ளல். புலவரும் இத்னை அடக்கத்துடன் ஏற்றுக்கொண்டார். எனினும்,வள்ளல் பெருமானாரின் வரலாற்றுச் செய்திகளை உரையாகத் தருவது யார் என்ற கேள்வி எழுந்தது.சீதக்காதி வள்ளல் தம் ஆன்மீக வழிகாட்டியான "இறைநேசர் ஷெய்கு சதக்கத்துல்லாஹ் அப்பா "அவர்களை அணுகி, பெருமானாரின் வாழ்க்கைச் சரிதையினைக் காவியமாகப் பாட உமறுப் புலவருக்கு உரை வழங்குமாறு கோரி நின்றார்கள்.

உமறுப் புலவரின் அலங்கோலத் தோற்றத்தைக் கண்டு,உரை கொடுக்க அப்பா அவர்கள் இசையவில்லை.உளம் வாடிய உமறுப் புலவர்,பெருமானாரின் வாழ்வைக் காவியமாக்கி, அதன் நிமித்தமாக அன்னாரைத் தாம் காணும் நாள் எந்நாளோ என்று ஏங்கி,பள்ளிவாயிலுக்குள் சென்றமர்ந்து தம் உள்ளத்து உணர்ச்சிகளைப் பாக்களாகப் பாடிக்கொண்டிருந்தார். இவ்வாறு எண்பத்தெட்டு பாடல்கள் பாடி முடித்தபோது புலவரைத் துயில் ஆட்கொண்டது. பெருமானார்(ஸல்) அவர்கள், புலவரின் கனவில் தோன்றி, மறுபடியும் அப்பா அவர்களிடம் சென்று உரை கேட்குமாறு பணித்தனர். கண் விழித்த உமறுப் புலவர் கருணை நபியவர்களின் கட்டளையைச் சிரமேற்கொண்டு, அப்பா அவர்களிடம் சென்று உரை கோரினர். முன்போலன்றி, புலவரை எதிகொண்டழைத்து உபசரித்த அப்பா அவர்கள்,சீறா உரை கொடுக்கச் சம்மதித்தனர்.அப்பா அவர்கள் தாங்களாகவும்,தம் மாணாக்கராகிய மஹ்மூது பந்தர் என்று வழங்க பெற்ற "பறங்கிப் பேட்டையைச் சார்ந்த "மாமூ நைனார் லெப்பை" என்பார் மூலமும் உமறுப் புலவருக்கு உரை வழங்கினர்.அச்செய்திகளைக் கொண்டு சீறாக் காப்பியம் படைக்கத் தொடங்கினார் நம் புலவர்.

இதற்கிடையில்,சீறாவைப் பாடப் பேருதவியாக இருந்த சீதக்காதி மரைக்காயர் அவர்கள் இறையடி சேர்ந்தனர். காப்பியம் படைத்து வந்த

குறிப்புகள்

உமறுப் புலவரின் உள்ளத்தில் பேரிடி விழுந்தது.அந்நிலையில், புலவரின் இரங்க தக்க நிலையை உணர்ந்த “அபுல்காசிம் மரைக்காயர்“என்ற வள்ளல் பெருமான்,புலவரை அன்புடன் ஆதரித்து, சீறாவை இயற்றத் தாம் உறுதுணையாயிருப்பதாக வாக்களித்துப் பல உதவிகளும் செய்து ஊக்கினார். “சீறாப்புராணம்”என்ற ஒரு பெருங்காவியம் உருவெடுத்தது. ஈடிணையில்லா இப்பேருதவி- களுக்கு நன்றி சொலும் முகத்தான், உமறுப் புலவர், அபுல் காசிம் மரைக்காயரைத் தம் சீறாப்புராணத்தில் பல இடங்களில் மறவாமல் நினைவு கூர்ந்து போற்றி புகழ்ந்துள்ளார்.

உமறுப் புலவரின் “சீறாப்புராணம்“அண்ணல் பெருமானாரின் வாழ்க்கை முழுவதையும் கூறவில்லை என்பது,வியப்பிற்குரியதும்,வருந்தத் தக்கதுமாகும்!யாது காரணத்தாலோ சீறாவில் நபியவர்களின் வரலாறு முழுமையாகக் கூறப்பெறவில்லை.இருப்பினும், இஸ்லாமியத் தமிழிலக்கியங்களில் சீறாப் புராணத்திற்க்கு தனியோர் இடமுண்டு. பெருமானாரின் தூய திருவாழ்க்கையின் எஞ்சிய பகுதிகளை பனூ அகமது மரைக்காயர் யாத்து முடித்தார்கள். இதுவும் “சின்ன சீறா“ என்ற பெயரில் பிரபலமாகியுள்ளது.

## 13.3. சீறாப்புராணம் - மானுக்குப் பிணை நின்ற படலம்

மானுக்குப் பிணை நின்ற படலம் ஆனது நுபுவத்துக் காண்டம் என்னும் இந்நூலின் இரண்டாவது காண்டத்தில் உள்ளது. நபிகள் நாயகம் வேடனிடம் சிக்கிய ஒரு பெண்மானுக்காகத் தாமே பிணையாக நின்று, அம்மானை அவனிடமிருந்து மீட்ட பெருங்கருணைத் திறத்தை இப்படலம் உணர்த்துகின்றது

## 13.3. தொகுத்துக் காண்போம்

சீறாப்புராணம் நூல் எழுந்த இந்த வரலாற்றினை நாம் இங்கே தெளிவாகத் தெரிந்து கொண்டோம். சீறாப்புராணத்தின் அமைப்பையும் ஒவ்வொரு காண்டம் காட்டும் செய்திகளையும் நாம் இங்கே அறிந்துகொண்டோம்.

## 13.4. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. உமறுப்புலவரின் வரலாற்றைத் தருக.
2. சீறாப்புராணம் நூல் அமைப்பினை விவரிக்க.
3. சின்ன சீறா பற்றிக் குறிப்பு வரைக.

## 13.5. மேலும் பயில்வதற்கான நூல்

1. சீறாப்புராணம் - பாகம் - 1 கே.பி. செய்குத்தம்பி பாவலர் உரை, திரீயெம் வெளியீட்டாளர்கள், சென்னை – 1

# கூறு- 14 - மானுக்குப் பிணை நின்ற படலம்

### 14.1. முகமது நபி வனத்தில் கண்ட காட்சி

*அரியினஞ் செறிந்த போன்ற அறபிகள் குழுவி னாப்ப*
*ணொருதனிச் சீய மொப்ப வுடையவன் றூதர் செல்வத்*
*திருநகர்ப் புறத்து நீங்கிச் செழுமுகின் முடியிற் றாங்கி*
*மருமலர் செறியுஞ் சோலை சூழ்ந்ததோர் வரையைச் சார்ந்தார்*

இறைவனின் திருத்தூதராகியமுகமது நபி ஒருநாள், நகர்ப்புறத்தினைநீங்கிச் செழுமையான மேகங்களைத் தனது முடியினில் தாங்கியதும், மணமிக்க மலர் வனங்களைக் கொண்டதுமான ஒரு மலையினை அடைந்தார்.

### 14.2. வலையில் சிக்கிய மான்

*குறுவெயர்ப் புதித்த மெய்யுங் கொழுந்தசை மணத்த வாயும்*
*பறிதலை விரிப்புங் கூர்ந்த படுகொலை விழியு மாக*
*வறபினி லறபி வேட னடவியிற் றொடர்ந்தோர் மானைக்*
*கறுவொடும் வலையிற் சேர்த்திக் கட்டிவைத் திருப்பக் கண்டார்*

வனங்களில் திரியும்விலங்குகளைக் கொன்று அவற்றின்தசைகளை அறுத்துக் கோலில் கட்டிப்பக்குவமாகச் சுட்டுத் தன்னந்தனியேஅவற்றை உண்டு, தனது ஊனைப்பெருக்கிவரும் வேடன் ஒருவன்இவ்வாறு வேட்டையாடி உண்பதைத்தவிர வேறொரு அறிவும் அற்றவன்.சிறுசிறு முத்துக்களாக வியர்வைதிகழும்மேனி; ஊன் மணக்கின்ற வாய்;குத்துப்புதர்கள் போல் முடிவளர்ந்ததலை; படுகொலை வீசும் பார்வையுடையவிழிகள், அரபு மொழியில் பேசுபவன்.இவ்வாறான வேடன் ஒருவன் காட்டில்பின் தொடர்ந்து சென்று, மான் ஒன்றைச்சினத்துடன் வலையில் பிடித்துக் கட்டிவைத்திருப்பதனை முகமது கண்டார்.

### 14.3. மானுக்காக மனம் கலங்கிய நபி

*குழைகுழைத் தெரியுஞ் செந்தேன் கொழுமலர்க் காவை நோக்கார்*
*பொழிமலை யருவி நோக்கார் புறத்துநன் னிழலை நோக்கார்*
*செழுமுகிற் கவிகை வள்ளல் செறிதரு மீந்தின் செங்காய்*
*மறையெனச் சொரிவ நோக்கார் மானையே நோக்கிச் சென்றார்.*

முகமது நபிகள் மானைக்கண்டபின், அரும்புகளும் தளிரும் மிக்க சோலையையும் காணார்; அருவியையும் காணவில்லை. அருகில் உள்ள நிழலையும் நோக்கார்; தம் மீது ஈச்சங்காயங்கள் மழை போலச்சொரிவதையும் நோக்காராகி மானையே நோக்கிச் சென்றார்.

### 14.4. நபிகளிடம் பெண்மான் முறையிடல் :

*நிறைவளஞ் சுரந்த கானி னின்றநந் நபியை நோக்கிக்*
*குறியவா லசைத்து நீண்ட கொழுங்கழுத் துயர்த்தி நீட்டி*

குறிப்புகள்

*மறைபடா மதியே வண்மை முகம்மதே யென்னப் போற்றித்*
*தறுகிடா தெவர்க்குங் கேட்பச் சலாமெடுத் துரைத்துக் கூறும்*

வளம் நிறைந்த அக்காட்டில் தன்னருகே வந்து நின்ற நபியை நோக்கி, தனது குட்டையான வாலை அசைத்து, நெடுங் கழுத்தை நீட்டிக் கறையயற்ற நிலவுபோன்றவரே! வள்ளல் முகமதே! என விளித்துப் போற்றித் தடையின்றி எவர்க்கும் கேட்கும் படியாக, வணங்கிச் சலாமிட்டுப் பின் கூறலாயிற்று.

## 14.5. கரு வளர்த்த நபிகளின் நாமம்

*இருநிலத் தாசைக் காயோ ரிளங்கன்றென் வயிற்று றாதான்*
*மருவிய கலையு நானும் வருத்தமுற் றிருக்குங் காலம்*
*பெருகுதீன் முகம்ம தேநும் பெயரினைப் போற்றல் செய்தே*
*னுருவமைந் திளஞ்சூன் முற்றி யுதரமும் வளர்ந்த தன்றே*

"வல்லவனாகிய இறைவனது உண்மைத் தூதரே! விரைந்து என் சொற்களை உகந்து கேட்டு உமது அருளைத் தருவீராக!" எங்களுக்கு ஒரு இளங்கன்று வேண்டுமென ஆசைப்பட்டு நானும் என் கலைமானும் இருக்க, நான் சூலுறாததால் வருத்தமுற்றோம். அப்போது முகமதாகிய உங்கள் பெயரைப் போற்றினேன். எனக்கு இளஞ்சூல் உருவாகிக் கரு வளர்ந்தது."

## 14.6. இன்பத்தின் இடையே வந்த துன்பம்

*அத்திசைக் கெதிரின் மேல்பா லடுத்தொரு குவட்டின் கண்ணே*
*மத்தகக் கரியு மாய்க்கும் வரிப்புலி முழக்க நீண்ட*
*குத்திரத் தசனித் தாக்கின் குவலய மதிரக் கேட்டுத்*
*தத்தியெத் திசையுந் திக்குந் தனித்தனிச் சிதறி னேமால்*

யானும் எனது துணையும் சேர்ந்து ஒன்றானாற் போன்ற உருவோடு ஓர் இளங்கன்று பிறந்தது. இன்பக்கடலில் ஆழ்ந்து இம்மலையிடத்தைச் சார்ந்துதுன்பம் அகன்றிருந்தேன். ஆனால் என் முன்வினையினை நான் அறியவில்லை. எனது உயிரனைய கன்றும் ஆண்மானும் யானும் எங்கள் சுற்றமும் மலைச்சாரலில் ஓரிடத்தில் வயிராறத் தழையுண்டு, பசிதீர்ந்து பின் நீர் அருந்தி எள்ளளவு அச்சமும் இன்றி நின்று உலவிய நேரம்! நாங்கள் நின்றிருந்த திசையின் எதிரிலிருந்து ஒரு மலைக் குவட்டின்கண், மத்த யானையும் அஞ்சி இறக்கச் செய்யும் தன்மையுடன் கொடூரமாக இடிமுழக்கம் போன்று நீண்டதாக ஒரு வரிப்புலியின் முழக்கம் கேட்டது. அதைக்கேட்டு நாங்கள் ஒவ்வொரு திசையிலும் தனித்தனியாகச் சிதறி ஓடினோம்.



## 14.7. வலையில் வீழ்ந்த வண்ண மான்கள்

*அடவியி னடையுங் காலை யவ்வுழைக் கரந்திவ் வேடன்*

*றுடரிடும் வலையைச் சுற்றிச் சுருக்கிடப் புலிவாய்த் தப்பி*
*மிடலரி யுழையிற் சிக்கி மிடைந்தென மிடைந்து செவ்வி*
*யுடலுயிர் பதைப்பத் தேம்பி யுணர்வழிந் தொடுங்கா நின்றேன்*

தாண்டிச் சென்ற செடிகளும் புதர்களும் நிலத்தில் அழுந்த ஒன்றையொன்று சென்ற திசை காணாமல் நாங்கள் ஓடினோம். நானும் எனது கன்றைக் காணாது வாடிய மனத்தோடும் உடம்பானது ஆடிக்காற்றில் துரும்பு போல் ஆட வேறோர் கானகம் புகுந்தேன். அக்காட்டினை அடைந்தபோது, அங்கு மறைந்திருந்த இவ்வேடன், வலையைச் சுற்றி எனக்கு சுருக்கு இட்டு, புலிவாயிலிருந்து தப்பிச் சிங்கத்தினிடம் சிக்கினாற் போல, நான் உடலுயிர் பதைக்கத் தேம்பி மனமிழந்து ஒடுங்கி நின்றேன்.

குறிப்புகள்

## 14.8. மானின் மயக்கம்

*பிடிபடு மிதற்கு முன்னே மூன்றுநாட் பிறந்து புல்லின்*
*கொடிநுனை மேய்ந்து நீருங் குடித்தறி யாது பாவி*
*மடிமுலை யிறங்கிப் பாலும் வழிந்தது குழவி சோர்ந்து*
*படிமிசை கிடந்தென் பாடு படுவதோ வறிகி லேனே*

நான் பிடிபடுவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு தான் பிறந்தது என்கன்று; இன்னும் புல்லை மேய்ந்தறியாது; நீரும் பருகாது; என் மடியிற் சுரந்த பாலும் வழிந்தது. என் கன்று பூமியில் கிடந்து என்ன பாடு படுகின்றதோ? அறியேன். எனது கன்று தனது தந்தையாகிய கலைமானிடமாயினும் சேர்ந்ததோ? அல்லது வேறொரு புறமாக ஓடிச்சென்றதோ, தன் இனத்தைச் சேர்ந்து பெற்றோருக்காக ஏங்கியதோ? அல்லது புலியின் வாயில் அடிபட்டு இறந்ததோ? என்னைத் தேடி இங்குமங்குமாக ஓடிமறுகிற்றோ? அறியேனே.

## 14.9. நபியின் நல்லுதவியை நாடிய மான்

*விடுத்திரேற் கலையைச் சேர்ந்து விழைவுறுங் கவலை தீரப்*
*படுத்தியென் னினத்துக் கோதிப் பறழினுக் கினிய தீம்பால்*
*கொடுத்தரும் பசியை மாற்றிக் குலத்தொடுஞ் சேர்த்து வல்லே*
*யடுத்தொரு கடிகைப் போதிலடைவ னென் றைந்த தன்றே*

என்றும் நிலைபெற்ற கலிமா என்னும் இஸ்லாத்தின் மூலமந்திரத்தின் வாயிலாக மாந்தர் எவரும் சொர்க்கத்தில் புகச்செய்யும் புண்ணியனே! நான் இவ்வேடனின் பசியைத் தீர்க்கச் சித்தமாக உள்ளேன். அதற்கு முன் என்கால்களைப் பிணித்துள்ள பிணைப்பை நீக்கி என்னைத் தாங்கள் பிணையாக நின்று விடுவித்தல் வேண்டும். என்னைத் தாங்கள் விடுவித்தால், என்னுடைய கலைமானைச் சேர்ந்து, அதன் கவலையை மாற்றி எனது நிலையை என் இனத்திற்குத் தெரிவித்து எனது கன்றினுக்கு

இனிய தீம்பால் ஊட்டி, எனது குலத்தோடு சேர்ந்து இருந்து விட்டுச் சில நாழிகைப் போதில் திரும்புவேன் என்று அப்பெண்மான் நபியிடம் குறையிரந்தது.

## 14.10. மானுக்குப் பிணை நின்ற மாமனிதர் நபி

*காரணக் குரிசில் கூறுங் கட்டுரை செவியி னோர்ந்து*
*பாரினி லெவர்க்குந் தோன்றாப் புதுமைபார்த் தறிவோ மல்லாற்*
*சார்பினிற் சாரா லொன்றுக் கிரண்டுமே தருது மென்றார்*
*பேரினிற் பிணயாய்க் கொள்ளல் கருத்தெனப் பெரிதுட் கொண்டோன்*

மான் இவ்வாறு உரைக்கக் கேட்ட நபி, மனத்தில் கருணை பொங்க, வேடனை நோக்கி, ‘‘இந்த மான் தனது கன்றின் துயர் தீர்த்து வரும் வரை நான், இதற்கு பிணை; எனவே இதனை விடுக” என்றார். என்னைப் பிணையாகக் கொண்ட இந்தப் பெண்மான் ஒரு நாழிகைப் போதில் வராவிட்டால், நான் உனது பசியைத் தீர்ப்பதற்காக ஒன்றிற்கு இரண்டாக அன்புடன் தருவேன்! கவலைப் படாதே! என்று இனிமையுடன் நபிகள் உரைத்தார்.

## 14.11. குட்டிக்குப் பாலூட்டிய மான்

*மலைவற வினத்து ளாகி மனத்தினுட் கவலை நீக்கிக்*
*கலையினுள் வருத்தந் தீர்த்துக் கன்றினை யணைத்து விம்மு*
*முலையினை யூட்டி மென்மை முதுகுவா லடிநா நீட்டி*
*யலைதர வளைத்து மோந்து வேட்கையை யகற்றிற் றன்றே*

ஒரு வனப் பகுதியினிடத்து எண்ணற்ற பெண்மானும் கன்றும் கலையுடன் இருக்க அக்கூட்டத்தை இனிதே கண்டது. அப்பெண்மான். தன் இனத்தினுள் சென்று சேர்ந்து கவலை நீங்கியது. தனது கலையின் வருத்தத்தையும் போக்கித் தனது கன்றுக்குப் பாலூட்டி, மென்மையான முதுகையும் வாலினையும் நாவினால் நக்கிக் கொடுத்துக் கழுத்தை வளைத்து மோந்து அதன் வேட்கையையும் போக்கியது.

## 14.12. சத்தியம் காத்த மான்

*மாறுகொண் டவர்கை தப்பி வந்தமா னினத்தின் சாதி*
*கோறலை விரும்பி முன்னு நரர்கையிற் கூடிற் றுண்டோ*
*வேறுரை பகரேல் பார்ப்பை வெறுத்துமுன் னினத்தை நீத்து*
*மீறெனப் போதல் வேண்டா மெனுமுரை யியம்பிற் றன்றே*

கன்றிற்கு அமுதம் ஊட்டிய பின்னர்க் காட்டகத்தில் ஓடிச் சென்று, தனது இனத்திற்கெல்லாம் தான் வேடன் கைப்பட்ட வரலாறும், நபிகள் அதை மீட்டு வர விட்டதும் எடுத்துரைத்தது. பிணையாக நபிகள் இருந்தனர் என்ற மொழியைக் கேட்டுப் பிணைக்குலம் அனைத்தும் உள்ளப் பதைப்படைந்து துன்பம் எய்தின. துணையாகிய ஆண்மானும் உடல் சோர்ந்து பெருமூச்சு எய்தி நின்றது. பின்னர் அங்குப் போக

வேண்டாம் எனக்கூறியது. தம்மோடு மாறுபட்டவர் கையிலிருந்தும் தப்பி வந்த மானானது, அவரால் தாம் கொல்லப்படுதலை விரும்பி மீண்டும் அத்தகைய மனிதர்கள் கையில் சேர்வதுண்டோ? மறுத்துச் சொல்லாதே. இக்குட்டியை வெறுத்தும் நம் இனத்தைத் துறந்தும் முடிவினை நோக்கிப் போக வேண்டாம் என்னும் முறையினை எடுத்துக் கூறியது.

## 14.13. பெண்மான் எடுத்த முடிவு :

*சிறப்புடைக் குரிசின் முன்னஞ் செப்பிய மாற்ற மாறி*
*மறப்பொடு மிருந்தே னாகில் வரிப்புலி யினத்தின் வாய்ப்பட்*
*டிறப்பதே சரத மல்லா லிருப்பதற் கிடமற் றுண்டோ*
*வுறப்பெரும் விருப்ப மென்மே லிருத்தலை யொழித்தல் வேண்டும்.*

வலையில் அகப்படுத்திக் கயிறுகளால் பிணைத்து என்னைப் பற்றிய வேடனுக்கும் ஏற்பப்பேசி, தானே பிணையாக நின்றார். பெரியவன் தூதராகிய நபிகள், இவ்வுலகத்தில் எல்லா உயிர்களையும் அணைத்துக் காப்பதற்கு அவரல்லது வேறு ஒருவர் இல்லையல்லவா? எனது உயிரை வேடனது பசிக்காக ஈந்து, நபியினது பிணையை மீட்க நான் மனம் கொள்ளவில்லையென்றால், நான் சொர்க்கத்தையிழந்து தீ நரகினில் புகுவதேயின்றி எனக்கு வேறு கதியும் பெருமையும் உண்டோ? சிறப்புமிக்க ஆண்டகை நபியின் முன்னர்ச் சொன்ன சொல்லை மாற்றிவிட்டு மறந்திருந்தால் நான் வரிப்புலி வாய்ப்பட்டு இறப்பதே கதியாகும். வேறு இருப்பதற்கு இடமும் உண்டோ? எனவே வாழ்வதற்கு எழும் விருப்பத்தினைக் கைவிடல் வேண்டும்.

## 14.14. வேடனின் மனமாற்றம்

*குருளையும் பிணையுங் கூடி வருவது குறித்து நோக்கி*
*முருகலர் புயத்தார் வள்ளன் முகம்மது மகிழ்ந்தன் பாக*
*விருளுறு மனத்த னான வேடனை யினிது கூவி*
*யொருபிணைக் கிரண்டுன் பாலில் வருவதென் றுரைத்திட் டாரால்.*

மானும் அதன் கன்றும் சேர்ந்து வருவதனை நபிகள் பெருமான் கண்டு மகிழ்ந்து அன்போடு இருள் கொண்ட மனத்தானாகிய வேடனைக் கூவியழைத்து, ஒரு பிணைக்கு இரண்டாக உன்னிடம் வருகின்றன பார் என்றுரைத்தார்.

## 14.15. மானைப் போற்றிய மானிடன்

*பெறுகதி நின்னாற் பெற்றேன் பெரும்பவங் களைந்தேன் மாறாத்*
*தெறுகொலை விளைத்து முன்னஞ் செய்தொழி றவிழ்த்தே னீயு*
*மறுகலை யெறிந்து தேறு ம்னக்கலை யொடுகன் றோடு*
*முறுகலை யிடத்திற் போய்ச்சேர்ந் தொழுகலை முயல்தி*
*யென்றான்*

அதனைக் கேட்டு வேடன் வியப்பாக நோக்கும்போது, முன் வந்த மானும் அதன் கன்றும் நபிகள் பாதத்தில் பணிந்தன. பின்னர்ப் பெண்மானானது வணக்கம் கூறிப் பாவி எனக்காக வேட்டுவனுக்குத் தங்களையே பிணையாக்கினீர்! இப்போது மீட்டருள வேண்டும் என்றது. இவ்வாறு பக்கத்தில் வந்து பெண்மான் கூற, முகம்மது நபி வேடனை அருகில் அழைத்து அவற்றின் பண்பினைச் சுட்டிக்காட்டி, நீ நம்முடைய பிணையை விட்டுவிட்டு, தனது பசியினைத் தீர்த்துக் கொண்டு பெருநகரினை அடைக! என்றார். வேடனும் தான் வீடு பெற்றேன்; வாழ்ந்தேன் என்று அவர் பாதத்தில் வீழ்ந்தான். பின்னர் அவ்வேடன் பிணையை நோக்கி உன்னால் மனித வாழ்வில் பெறக்கூடிய உயர்ந்த கதியினைப் பெற்றேன். பிறவி நோயைக் களைந்தேன். மாறாத கொலைப்பாவத்தை விளைத்து, முன்பு நான் செய்த வேட்டுவத் தொழிலைத் தவிர்த்தேன். நீயும் மனம் மறுகுதலை விட்டுக் கன்றோடு உந்தன் கலைமானிடத்தே சென்று நல்லொழுக்கப்படி வாழ்வாயாக என்றான்.

## 14.16. கூட்டத்தைச் சென்றடைந்த மான்

*வானவர் பரவுங் கோமான் முகம்மது மானை நோக்கிக்*
*கானகஞ் சென்னீ யென்றார் கமலமென் பதத்திற் றாழ்ந்து*
*தீனிலைக் குரிய வேடன் றன்னையுந் திருந்தப் போற்றி*
*நானிலம் புகலப் பாரி னடந்தினஞ் சேர்ந்த தன்றே.*

வானகம் வணங்குகின்ற தலைவராகிய முகம்மதுவும் மானை நோக்கி, நீ உன் காட்டுக்குச் செல்வாயாக என்றார். உடனே அந்தமானும் அவருடைய மென்மையான தாமரைப் பாதங்களை வணங்கி, தீனிலைக்கு உரியவனாக மாறிய வேடனையும் திருத்தமுறப் போற்றி, நானிலத்தாரும் அதன் பெருமை பேசும்படி நிலத்தில் நடந்து தன் கூட்டத்தைச் சென்றடைந்தது.

## 14.17. தொகுத்துக் காண்போம்

நபிகள் நாயகம் மானின் மீது காட்டிய அன்பினை நாம் இங்கே கண்டோம். மேலும் மான் மூலம் ஆறறிவு படைத்த வேடன் மனம் மாறிய பாங்கினையும் நாம் இங்கே கண்டோம்.

## 14.18. முன்னேற்றத்தைச் சோதிக்கும் வினாக்கள்

1. நபிகள் நாயகத்தின் உயிர்க் கருணையை விளக்குக
2. வேடனின் மனநிலையை தாய் மான் எவ்வாறு மாற்றியது
3. மானுக்கு பிணை நின்ற படலம் காட்டும் இஸ்லாம் சமயச் செய்திகளைத் தருக

## 14.19. மேலும் பயில்வதற்கான நூல்

1. சீறாப்புராணம் - பாகம் - 1 கே.பி. செய்குத்தம்பி பாவலர் உரை, திரீயெம் வெளியீட்டாளர்கள், சென்னை - 1

**தொலைநிலைக் கல்வி இயக்ககம்**
**இளங்கலை இலக்கியம் - (பி.லிட்.)**
**இரண்டாமாண்டு - மூன்றாம் பருவம்**
**தாள் - 10734 - காப்பிய இலக்கியம்**
**மாதிரி வினாத்தாள்**

**பகுதி – அ (10 x 2 =20)**

குறிப்புகள்

மதிப்பெண்:75 நேரம்: 3 மணி

**அனைத்து வினாக்களுக்கும் ஓரிரு வார்த்தைகளில் விடையளிக்க.**

1.சிலப்பதிகாரத்தின் கடவுள் வாழ்த்தில் போற்றப்படுவோர் யாவர்?

2.சிலம்புள: கொணம் - யார் யாரிடம் கூறியது?

3.கண்ணகியை அடைக்கலமாகப் பெற்றோர் யாவர்?

4.சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை வடிக்க எங்கிருந்து கல் கொணர்ந்தான்?

5.சீவகன் மணந்த தக்க நாட்டைச் சேர்ந்த பெண்ணின் பெயர் என்ன?

6.கைகேயி கேட்ட இரு வரங்கள் யாவை?

7.பூசலார் எந்த ஊரைச் சேர்ந்தவர்?

8.தேம்பாவணியின் ஆசிரியர் யார்?

9.உமறுப்புலவர்யாருடைய ஆதரவினால் சீறாப்புராணத்தை எழுதி முடித்தார்?

10.வேடனின் மனம் மாறக் காரணம் என்ன?

**பகுதி – ஆ (5x5=25)**

**ஒரு பக்க அளவில் விடை தருக.**

11.(அ)கண்ணகியை இளங்கோவடிகள் எவ்வாறு அறிமுகம் செய்கிறார்?

**(அல்லது)**

(ஆ) கண்ணகியின் இரண்டாம் மடலில் உள்ள செய்திகள் யாவை?

12.(அ) கேமசரியார் பற்றிச் சோதிடர் கூறியன யாவை?

**(அல்லது)**

(ஆ) தக்க நாட்டின் எழிலைப் புலப்படுத்துக.

13.(அ) பரதன் கைகேயயைப் பார்த்துக் கூறியன யாவை?

**(அல்லது)**

(ஆ) கைகேயி ஏன் மனம் மாறினாள்?

14.(அ) பெரியபுராணம் பற்றிக் குறிப்பு வரைக.

**(அல்லது)**

(ஆ) வீரமாமுனிவரின் தமிழ்த் தொண்டினை விவரிக்க.

15.(அ) சீறாப்புராணத்தின் நூல் அமைப்பினைக் காட்டுக.

**(அல்லது)**

(ஆ) மானுக்கு நேர்ந்த துயரம் யாது?

**பகுதி - இ (3x10=30)**

**எவைனேும் மூன்று வினாக்களுக்குக் கட்டுரை வடிவில் விடையளிக்க.**

16. காவிரிப்பூம்பட்டினத்தின் நகர அமைப்பினைக் காட்டுக.
17. சீவகன் முனிவர்க்கு உரைத்த சமயச் செய்திகளைத் தருக.
18. பூசலார் நாயனாரின் பக்தி திறத்தைக் காட்டுக.
19. நபிபெருமான் அவர்கள் மானுக்கு பிணை நின்ற நிகழ்வை விளக்குக.
20. பாலை நிலத்தின் இயல்புகளை விவரிக்க.